௩௫ இஸ்ரவேலரே! நீங்கள் இந்த மனிதருக்குச் செய்ய நினைக்கிறதைக்குறித்து எச்சரிக்கையாயிருப்பீர்களாக.

௩௬ இந்த நாட்களுக்கு முன்னே தெயுதா வென்பவன் எழும்பித் தன்னைப் பெரியவனென்று சொல்லி ஏறக்குறைய நானூறுபேர் தன்னையடுத்துக்கொள்ளும்படி செய்து, பின்பு அழிக்கப்பட்டான். அவனை நம்பியிருந்த அனைவருங் கலைந்து வீணாய்ப்போய்விட்டார்கள்.

௩௭ அவனுக்குப்பின்பு குடிமதிப்புச்செய்யப்பட்ட நாட்களிலே கலிலேயனாகிய யூதா எழும்பி அநேகசனங்களைத் தன்வசமாக்கினான். அவனும் அழிந்துபோனான். அவனை நம்பியிருந்த அனைவருஞ்சிதறடிக்கப்பட்டார்கள்.

௩௮ ஆனபடியினாலே நான் உங்களுக்குச் சொல்லுகிறதென்னவென்றால், இந்த மனிதர்களுடைய யோசனை அல்லது இவர்களுடைய கிரியை மனிதரால் உண்டானதானால் அது ஒழிந்துபோம்.

௩௯ அது பராபரனால் உண்டானால் அதை நீங்கள் ஒழித்துப்போடமாட்டீர்கள். ஆதலால் நீங்கள் பராபரனோடே போர்செய்கிறவர்களாய்க் காணப்படாதபடிக்கு இவர்களுக்கு ஒன்றுஞ்செய்யாமல் இவர்களைவிட்டுவிடுங்களென்றான்.

௪௰ அவனோடே மற்றவர்கள் பொருந்தி அப்போஸ்தலரை வரவழைத்து அடித்து, இயேசுவின் நாமத்தைக்குறித்து அவர்கள் பேசாதிருக்கும்படிக்குக் கட்டளையிட்டு, அவர்களைவிட்டுவிட்டார்கள்.

௪௧ அவர்கள்தாங்கள் அவருடைய நாமத்திற்காகக் கனவீனப்படுகிறதற்குப் பாத்திரரென்றெண்ணப்பட்டபடியினாலே சந்தோஷமாய்ப் பெரியசங்கத்தைவிட்டுப் புறப்பட்டுப்போய்,

௪௨ தினந்தோறுந் தேவாலயத்திலேயும் வீடுகளிலேயும் ஓயாமல் உபதேசம்பண்ணி இயேசுவைக் கிறிஸ்தென்று சுவிசேஷமாயறிவித்துவந்தார்கள்.

## ௬. அதிகாரம்.

[(௧) சபையிலே சிலகைம்பெண்கள் முறுமுறுத்தபொழுது அப்போஸ்தலர் உதவிக்காரராக ஏழுபேரைத் தெரிந்தேற்படுத்தினதும், (௬) இஸ்தேவான் எதிராளிகளுடனே தருக்கம்பண்ணினதினாலே பெரியசங்கத்திற்குமுன்பாகக் கொண்டுபோகப்பட்டதும்.]

அந்தநாட்களிற் சீஷர்கள் பெருகினபொழுது கிரேக்கரானவர்களிலுள்ள கைம்பெண்கள்தாடோறுமுள்ள விசாரணையிலே நன்றாய் எண்ணிக்கொள்ளாதபடியினாலே, கிரேக்கரானவர்கள் எபிரேயருக்குவிரோதமாய் முறுமுறுத்தார்கள்.

௨ அப்பொழுது பன்னிருவரும் சீஷர்களாகியதிரளைக் கூடிவரவழைத்துச் சொன்னதாவது, நாங்கள் பராபரனுடைய வசனம் போதிக்கிறதைவிட்டுப் பந்திகளைக்குறித்து விசாரிக்கிறது தகாது.

௩ ஆகையால் சகோதரரே! நீங்கள் உங்களுக்குள்ளே பரிசுத்த ஆவியும் ஞானமும் நிறைந்து நற்சாட்சிபெற்றிருக்கிற ஏழுபேரையுத் தெரிந்துகொள்ளுங்கள். அவர்களை இந்த வேலைக்காக ஏற்படுத்துவோம்.

௪ நாங்களோ செபம்பண்ணுதலிலும் (தேவ) வசனத்தைப்போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போமென்றார்கள்.

௫ இந்த யோசனை சபையாரெல்லாருக்கும் பிரியமாயிருந்தது. ஆதலால் அவர்கள் விசுவாசமும் பரிசுத்த ஆவியும் நிறைந்தவனாகிய இஸ்தேவானையும், பிலிப்பையும், பிரொகோரையும், நிக்கானோரையும், தீமோனையும், பர்மேனாவையும், யூதமார்க்கத்தானான அந்தியோகியபட்டணத்தானாகிய நிக்கோலாவையுந் தெரிந்துகொண்டு,

௬ அவர்களை அப்போஸ்தலருக்குமுன்பாக நிறுத்தினார்கள். இவர்கள் செபம்பண்ணி அவர்கள்மேலே தங்கள்கைகளைவைத்தார்கள்.

௭ பின்பு பராபரனுடைய வசனம் வளர்ந்தது. சீஷருடைய இலக்கம் எருசலேமிலே மிகவும்பெருகிற்று. ஆசாரியர்களில் அநேகரும் விசுவாசத்திற்குக் கீழ்ப்பட்டார்கள்.

௮ அன்றியும் இஸ்தேவானென்பவன் கிருபையினாலும் பலத்தினாலும் நிறைந்து சனங்களுக்குள்ளே பெரிய அற்புதங்களையும் அதிசயங்களையுஞ்செய்தான்.

௯ அப்பொழுது லிபர்த்தீனர் என்னப்பட்டவர்களின் செபஆலயத்தைச்சேர்ந்தவர்களிலுங் சிரேனேபட்டினத்தாரிலும் அலெக்சந்திரியபட்டினத்தாரிலுங் சிலிக்கியாத்தேசத்தாரிலும் ஆசியாதேசத்தாரிலுஞ்சிலர் எழும்பி இஸ்தேவானுடனே தருக்கம்பண்ணிக்கொண்டார்கள்.

௰ அவன்பேசின ஞானத்தோடும் ஆவியோடும் எதிர்த்துநிற்க அவர்களுக்கு வல்லமையில்லை.

௰௧ அப்பொழுது அவர்கள் இரகசியமாய்ச்சிலமனிதரைச் சம்பாதித்து இவன்மோசேயுக்கும் பராபரனுக்கும் விரோதமாகத் தூஷணமான வசனங்களைப் பேசக்கேட்டோமென்றுசொல்லும்படிசெய்து,

௰௨ பின்பு சனங்களையும் மூப்பரையும் வேதபாரகரையும் எழுப்பி அவன்மேற்பாய்ந்து அவனைப்பெரிய சங்கத்தாருக்குமுன்பாக இழுத்துக்கொண்டுபோய்,

௧௩ பொய்ச்சாட்சிகளையும் ஏற்படுத்தினார்கள். அவர்கள் சொன்னது. இவன் பரிசுத்த ஸ்தலத்திற்கும் வேதநூலுக்கும் தூஷணமான வசனங்களை ஓயாமற் பேசுகிறான்.

௧௪ நாசரேத்தூராகிய அந்த இயேசுவென்பவர் இந்த ஸ்தலத்தையழித்துமோசே நமக்குக் கொடுத்த முறைமைகளை மாற்றுவாரென்று இவன் சொல்லக்கேட்டோமென்றார்கள்.

௧௫ பெரிய சங்கத்திலுட்கார்ந்திருந்தயாவரும் அவன்மேற் கண்ணோக்கமான பொழுது அவனுடைய முகந் தேவதூதன் முகம்போலிருக்கக்கண்டார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) இஸ்தேவான் பெரிய சங்கத்தாருக்கு முன்பாகப் பிரசங்கம் பண்ணினதும், (௫௪) சங்கத்தார் அவனைக் கொலைசெய்வித்ததும், (௫௯) இஸ்தேவான் சந்தோஷமாய் மரித்ததும்.]

௧ பிரதான ஆசாரியன் அவனை நோக்கி இப்படியா நடந்ததென்றான்.

௨ அதற்கவன் சொன்னதாவது. சகோதரரும் பிதாக்களுமானவர்களே! கேட்பீர்களாக. நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம் காரானூரிலே குடியிருக்கிறதற்கு முன்னே மெசொப்பொத்தாமியா நாட்டிலேயிருந்தபொழுது மகிமைபொருந்திய பராபரன் அவனுக்குத் தரிசனையாகி,

௩ நீ உன் தேசத்தையும் இனத்தாரையும் விட்டுப் புறப்பட்டு நான் உனக்குக் காண்பிக்கும் தேசத்திற்குப் போவென்றார்.

௪ அப்பொழுது அவன் கல்தேயர் தேசத்தைவிட்டுப் புறப்பட்டுக் காரானூரிலே வாசம்பண்ணினான். மேலும் அவனுடைய தகப்பன் மரித்தபின்பு அவ்விடத்தைவிட்டு நீங்களிப்பொழுது குடியிருக்கிற இத்தேசத்திற்கு வந்து குடியிருக்கும்படி செய்தார்.

௫ இதில் ஒரு அடி நிலத்தையாகிலும் அவனுக்குச் சுதந்தரமாகக் கொடாமல், அவன் பிள்ளையில்லாதிருந்த காலத்திலே உனக்கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் இதைக் காணியாட்சியாகத் தருவேனென்று அவனுக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்.

௬ அன்றியும் பராபரன் அவனுடனே சொன்னது. உன்னுடைய சந்ததியார் அந்நியதேசத்திலே குடியிருப்பார்கள். அத்தேசத்தார் அவர்களை அடிமைகளாக்கி நானூறு வருஷம் உபத்திரவப்படுத்துவார்கள்.

௭ அவர்கள் அடிமைவேலைசெய்யும் அந்தத்தேசத்தாரை நான் ஆக்கினைக்குட்படுத்துவேன். அதற்குப்பின்பு உன் சந்ததியார் புறப்பட்டுவந்து, இவ்விடத்திலே என்னை ஆராதனை செய்வார்களென்று பராபரன் சொன்னார்.

௮ அன்றியும் விருத்தசேதனம் பண்ணுதலை அவர் அவனுக்கு ஏற்படுத்தினார். அந்தப்படியே அவன் ஈசாக்கைப் பெற்றபொழுது எட்டாம் நாளில் அவனுக்கு விருத்தசேதனம் பண்ணினான். ஈசாக்கானவன் யாக்கோபையும் யாக்கோபானவன் கோத்திரத் தலைவராகிய பன்னிரண்டுபேரையும் பெற்று அவர்களுக்கு விருத்தசேதனம் பண்ணினார்கள்.

௯ பின்பு கோத்திரத் தலைவராகிய அவர்கள் பொறாமைகொண்டு யோசேப்பை எகிப்திற்கு (போன வியாபாரிகளுக்கு) விற்றுப்போட்டார்கள்.

௧௦ பராபரன் அவனுடனேயிருந்து எல்லா உபத்திரவங்களினின்றும் அவனைத் தூக்கியெடுத்து எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்கு முன்பாக அவனுக்குக் கிருபையையும் ஞானத்தையுங் கொடுத்தார். அந்த இராசா இவனை எகிப்துத் தேசத்திற்குந் தனக்குமெல்லாவற்றிற்குந் தலையாக வைத்தான்.

௧௧ பின்பு எகிப்துக்கானான் தேசங்கள் முழுவதிலும் பஞ்சமும் மிகுந்த உபத்திரவமுமுண்டாயின. நம்முடைய பிதாக்களுக்கும் ஆகாரங் கிடைக்கவில்லை.

௧௨ அப்பொழுது எகிப்திலே தானியமுண்டென்று யாக்கோபு கேள்விப்பட்டு நம்முடைய பிதாக்களை முதலாந்தரம் (அவ்விடத்திற்கு) அனுப்பினான்.

௧௩ இரண்டாந்தரம் யோசேப்பு தன் சகோதரருக்கு அறியப்பட்டான். அல்லாமலும் யோசேப்பினுடைய வமிசம் பார்வோனுக்குத் தெரியவந்தது.

௧௪ பின்பு யோசேப்பு தன் தகப்பனாகிய யாக்கோபும் (மற்ற) இனத்தாருமாகிய எழுபத்தைந்துபேரையும் அழைக்க அனுப்பினான்.

௧௫ அந்தப்படியாக யாக்கோபு எகிப்திற்குப் போனார். பின்பு அவரும் நம்முடைய பிதாக்களும் மரித்து, அங்கேயிருந்து சீகேமூருக்குக் கொண்டுபோகப்பட்டு,

௧௬ ஆபிரகாம் சீகேமின் தகப்பனாகிய எமோருடைய சந்ததியாரிடத்தில் விலைக்கிரயமாக வாங்கியிருந்த சமாதியிலே வைக்கப்பட்டார்கள்.

௧௭ பின்பு ஆபிரகாமுக்குப் பராபரன் ஆணையிட்டுப் பண்ணின வாக்குத்தத்தத்தின் காலஞ் சமீபமானபொழுது யோசேப்பையறியாத வேறொரிராசா தோன்றின காலமளவும்,

௧௮ சனங்கள் எகிப்திலே அதிகமாய்ப் பெருகினார்கள்.

௧௯ அவன் நம்முடைய வம்சத்தாரைக் குறித்து வஞ்சனையாய் நடந்து நம்முடைய பிதாக்களின் குழந்தைகள் உயிரோடிராதபடிக்கு அவர்கள் அவைகளை வெளியேபோ

டக்கிவிடும்படிசெய்து அவர்களை உபத்திரவப்படுத்தினான்.

௨௦ அக்காலத்திலே மோசேயென்பவன் பிறந்து பராபரனாலே அழகுள்ளவனாயிருந்து, மூன்றுமாதம்வரைக்குந் தகப்பனுடைய வீட்டிலே வளர்க்கப்பட்டான்.

௨௧ அவனும் வெளியே போட்டுவிடப்பட்டபொழுது பார்வோனுடைய குமாரத்தி அவனையெடுத்துத் தனக்குக் குமாரனாக வளர்த்தாள்.

௨௨ அதினாலே மோசே எகிப்தியருடைய கல்வி சாஸ்திரங்களையெல்லாங் கற்றுக்கொண்டு வசனங்களிலேயுஞ் செய்கைகளிலேயும் வல்லவனானான்.

௨௩ அவன் நாற்பது வயதுள்ளவனானபொழுது இஸ்ரவேல் சந்ததியாராகிய தன்னுடைய சகோதரரைச் சந்தித்துப் பார்க்கும்படி விருப்பமுள்ளவனாகிப் போனபொழுது,

௨௪ அநியாயம் அனுபவிக்கிற ஒருவனைக் கண்டு (அவனைக்) காப்பாற்றி எகிப்தியனை வெட்டினான்.

௨௫ அன்றியும் அவன் தன் கையினாலே பராபரன் தங்களுக்கு இரட்சிப்பைத் தருவாரென்று தன் சகோதரர் அறிந்துகொள்வார்களென்று நினைத்தான். அவர்கள் அப்படி அறிந்துகொள்ளவில்லை.

௨௬ மறுநாளிலே சண்டைபண்ணிக்கொண்டிருக்கிறவர்களுக்கு அவன் தன்னைக் காண்பித்து புருஷரே! நீங்கள் சகோதரராயிருக்கிறவர்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் அநியாயஞ்செய்கிறதென்னவென்று அவர்களைச் சமாதானப்படுத்தும்படி பேசினான்.

௨௭ (அவர்களில்) பிறனுக்கு அநியாயஞ்செய்தவன் சொன்னது: எங்களுக்கு உன்னைத் தலைவனென்றும் நியாயாதிபதியென்றும் வைத்தவன் எவன்?

௨௮ நேற்று நீ எகிப்தியனைக் கொலைசெய்ததுபோல, என்னையுங் கொலைசெய்ய மனதாயிருக்கிறாயோவென்று அவனைத் தள்ளினான்.

௨௯ இந்த வார்த்தையினாலே மோசே ஓடிப்போய், மாதியான் தேசத்திலே அந்நியனாய்ச் சஞ்சரித்து, அங்கே இரண்டு குமாரரைப் பெற்றான்.

௩௦ அன்றியும் நாற்பது வருஷஞ்சென்றபின்பு சீனாய்மலையின் வனாந்தரத்திலே பராபரனுடைய தூதனானவர் ஒரு முட்செடி எரிகிற அக்கினிச்சுவாலையிலே அவனுக்குத் தரிசனையானார்.

௩௧ மோசே அதைக்கண்டு, அந்தத் தரிசனையைக்குறித்து அதிசயப்பட்டு, அதைப் பார்க்கும்படி சேர்ந்துவருகிறபொழுது பராபரனானவர்,

௩௨ நான் உன் பிதாக்களாகிய ஆபிரகாமுடைய தேவனுமாய் ஈசாக்கினுடைய தேவனுமாய் யாக்கோபினுடைய தேவனுமாயிருக்கிற பராபரனென்று திருவுளம்பற்றின சத்தம் அவனுக்குத் தோன்றிற்று. அப்பொழுது மோசே நடுக்கம் அடைந்து, (அதினாலே அதைப்) பார்க்கும்படி துணியாமலிருந்தான்.

௩௩ பின்னும் பராபரன் அவனுடனே சொன்னது: நீ நிற்கிற இடம் பரிசுத்தபூமியாகையால், உன்பாதரட்சைகளைக் கழற்றிப்போடு.

௩௪ எகிப்திலிருக்கிற என்னுடைய சனங்களின் உபத்திரவத்தை நான்தானே பார்த்து, அவர்களுடைய கவிப்பைக் கேட்டு, அவர்களை விடுவிக்கும்படிக்கு இறங்கினேன். ஆகையால் இப்போது நான் உன்னை எகிப்திற்கு அனுப்புகிறேனென்றார்.

௩௫ உன்னைத் தலைவனென்றும் நியாயாதிபதியென்றும் வைத்தவன் எவனென்று, அவர்கள் சொல்லி மறுதலித்திருந்த அந்த மோசேயையே பராபரன் முட்செடியிலே அவனுக்குத் தரிசனையான தூதனாலே தலைவனாகவும் மீட்பனாகவும் அனுப்பினார்.

௩௬ அவன் அவர்களை அங்கேயிருந்து நடத்திக்கொண்டுபோய், எகிப்து தேசத்திலேயுஞ் சிவப்பான சமுத்திரத்திலேயும் நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்திலேயும் அற்புதங்களையுந் திருஷ்டாந்தங்களையுஞ் செய்தான்.

௩௭ அந்தமோசேயே இஸ்ரவேல் சந்ததியாரைநோக்கி, உங்களுக்காக உங்கள் தேவனாகிய பராபரன் உங்கள் வமிசத்திலிருந்து என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை எழும்பப்பண்ணுவார். அவருக்குச் செவிகொடுப்பீர்களாகவென்று சொன்னவன்.

௩௮ அவனே சீனாய்மலையிலே தன்னுடனே பேசின தூதரோடும் நம்முடைய பிதாக்களோடுங் கூடவனாந்தரத்திலே சபைக்குள்ளேயிருந்து, நமக்குக் கொடுக்கும்படி சீவவாக்கியங்களைப் பெற்றவன்.

௩௯ நம்முடைய பிதாக்கள் அவனுக்குக் கீழ்ப்படமனதாயிராமல் அவனைத் தள்ளி, எகிப்துதேசத்திற்குத் திரும்ப மனதிருப்ப,

௪௦ ஆரோனைநோக்கி, எகிப்துதேசத்திலிருந்து எங்களை அழைத்துக்கொண்டுவந்த அந்தமோசேயுக்குச் சம்பவித்ததை அறியோம். ஆதலால் எங்களுக்கு முன்பாக நடக்குந் தேவர்களை நீர் எங்களுக்காக உண்டுபண்ணவேண்டுமென்று சொல்லி,

௪௧ அந்நாட்களிலே ஒரு கன்றுக்குட்டியைச்செய்து, அந்த விக்கிரகத்திற்குப் பலியிட்டுத் தங்கள் கைகளால் செய்த கிரியைகளைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.

௪௨ அப்பொழுது பராபரன் அவர்களை விட்டுத்திரும்பி, வானத்திலுள்ள சேனையைப் பணிந்துகொள்ளும்படி அவர்களை ஒப்புக்கொடுத்துவிட்டார். (அதைக்குறித்து)

இஸ்ரவேல் குடும்பத்தாரே! நீங்கள் வனாந்தரத்திலிருந்த நாற்பது வருஷமளவாயிலே காணிக்கைகளையும் பலிகளையும் எனக்குச் செலுத்தினீர்களா!

௪௩ பணிந்துகொள்ளும்படிக்கு நீங்கள் செய்த சொரூபங்களாகிய மோளோகினுடைய கூடாரத்தையும் உங்கள் தேவனாகிய இரம்பானென்னும் நட்சத்திரத்தையும் எடுத்துவந்தீர்களே. ஆதலால் நான் உங்களைப் பாபிலோனுக்கப்புறத்திலே குடியிருக்கும்படி போகப்பண்ணுவேனென்று தீர்க்கதரிசிகளின் புத்தகத்திலே யெழுதியிருக்கின்றதே;

௪௪ மேலும் நீ பார்த்த உருவின்படியே சாட்சிப் பொருளையுடைய கூடாரத்தைச் செய்யென்று மோசேயுடனே பேசினவர் கட்டளையிட்டபிரகாரமாக, அது வனாந்தரத்திலே நம்முடைய பிதாக்களுக்குள்ளே யிருந்தது.

௪௫ மேலும் யோசுவாவுடனேகூட நம்முடைய பிதாக்கள் அதைப் பெற்றுக்கொண்டு, தங்களுக்கு முன்னின்று பராபரன் துரத்தின அஞ்ஞானிகளுடைய தேசத்திற்குள்ளே அதைக்கொண்டுபோய்த் தாவீது இருந்த நாள்வரைக்கும் வைத்திருந்தார்கள்.

௪௬ அவன் பராபரனிடத்திலே தயவுபெற்றபடியினாலே, யாக்கோபினுடைய தேவனுக்காக ஒரு வாசஸ்தலத்தைக் கட்டும்படிக்கு உத்தரவுகேட்டுக்கொண்டான்.

௪௭ (அவனல்ல) சாலோமோனே அவருக்காக ஆலயத்தைக் கட்டினான்.

௪௮ உன்னதமானவர் வானம் எனக்குச் சிங்காசனமாயும் பூமியென்னுடைய பாதப்படியாயுமிருக்கின்றது. எனக்காக நீங்கள் எப்படிப்பட்ட ஆலயத்தைக் கட்டுவீர்கள். அல்லது நான் தங்கும்படிக்கேற்ற ஸ்தலமெது.

௪௯ இவையெல்லாவற்றையும் என்னுடைய கையுண்டாக்கவில்லையாவென்று பராபரன் திருவுளம்பற்றினாரென்று, தீர்க்கதரிசி சொன்னபடியே,

௫௰ கைகளாற்செய்யப்பட்ட ஆலயங்களில் வாசமாயிருக்கமாட்டார்.

௫௧ ஆ, வணங்காதகழுத்துள்ளவர்களே. இருதயமுங்காதும் விருத்தசேதனம் பெறாதவர்களே. உங்கள் பிதாக்களைப்போல நீங்களும் பரிசுத்த ஆவியை எப்பொழுதும் விரோதிக்கிறீர்கள்.

௫௨ தீர்க்கதரிசிகளில் யாரை உங்கள் பிதாக்கள் துன்பப்படுத்தாமலிருந்தார்கள். நீதிபரர் வருகையை முன்னறிவித்தவர்களையும் அவர்கள் கொலைசெய்தார்கள். அவருக்கே நீங்கள் இப்பொழுது துரோகிகளுமாய் அவரைக்கொலைசெய்தவர்களுமாயிருக்கிறீர்கள்.

௫௩ தேவதூதரின் அணிவகுப்புகளுக்குள்ளே வேதப்பிரமாணத்தைப் பெற்றுக்கொண்டிருந்தும் அதைக் கைக்கொள்ளாமலிருக்கிறீர்களென்றுசொல்ல,

௫௪ அவர்கள் அவைகளைக் கேட்டு தங்கள் இருதயங்களில் அறுக்கப்பட்டவர்களாய் அவனைக்குறித்துப் பற்கடித்தார்கள்,

௫௫ அவன் பரிசுத்த ஆவியினாலே நிறைந்து, வானத்தையண்ணாந்துபார்த்துக்கொண்டு, பராபரனுடைய மகிமையையும் பராபரனுடைய வலதுபாரிசத்திலே நிற்கிற இயேசுவையுங் கண்டு,

௫௬ அதோ, வானந்திறக்கப்பட்டிருக்கிறதையும் மனிதகுமாரனானவர் பராபரனுடைய வலதுபாரிசத்திலே நிற்கிறதையும் பார்க்கிறேனென்று சொன்னபொழுது,

௫௭ அவர்கள் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டு தங்கள் காதுகளை யடைத்துக்கொண்டு,

௫௮ ஒருமனப்பட்டு அவன்மேலேபாய்ந்து, அவனைப் பட்டணத்துக்குப் புறம்பே தள்ளி, அவன்மேற் கல்லெறிந்தார்கள்.

௫௯ சாட்சிகளானவர்களுந் தங்கள் வஸ்திரங்களைச் சவுலென்னப்பட்ட ஒரு வாலிபனுடைய பாதங்களருகே வைத்து, இஸ்தேவான்மேற் கல்லெறிந்தார்கள். அவன் கர்த்தராகிய இயேசுவே. என் ஆவியையேற்றுக்கொள்ளுமென்று தொழுதுகொண்டு,

௬௰ முழங்காற்படியிட்டு, ஆண்டவரே! இவர்கள்மேல் இந்தப்பாவத்தைச் சுமத்தாதிருமென்று, மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு, பின்பு நித்திரையடைந்தான். அவனைக் கொலைசெய்கிறது சவுலென்பவனுக்கு மிகவும் பிரியமாயிருந்தது.

## அ. அதிகாரம்.

[(௧) சபையார் மிகவுந் துன்பப்படுத்தப்பட்டதும், (௫) பிலிப்பு சமாரியாவுக்குப்போய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ண, அநேகப்பட்ட ஜனத்தார் மிகவுஞ் சந்தோஷப்பட்டு, விசுவாசிகளானதும், (௰௪) பேதுருவும்யோவானும் அவர்களிடத்திற்குப்போய்ப் பரிசுத்த ஆவியினவர்களுக்குக் கொடுத்ததும், (௰௮) சீமோன் அந்த வல்லமையைப் பணத்தினாற் சம்பாதிக்கப்பார்த்ததும், (௨௬) பிலிப்பு எத்தியோப்பிய மனிதனுக்குச் சுவிசேஷத்தைப் போதித்து ஞானஸ்நானத்தைக்கொடுத்ததும்.]

௧ அக்காலத்திலே எருசலேமிலுள்ள சபைக்கு மிகுந்த துன்பமுண்டாயிற்று. அப்போஸ்தலர் தவிர மற்றயாவரும் யூதேயா சமாரியா தேசங்களிற் சிதறப்பட்டார்கள்.

௨ இஸ்தேவானைத் தேவபத்தியுள்ள சிலபேர்கள் எடுத்தடக்கம்பண்ணி, அவனைக்குறித்து மிகவும்புலம்பியழுதார்கள்.

௩ சவுல வீடுகளெல்லாம் பிரவேசித்து புருஷரையும், ஸ்திரிகளையும், வெளியேயிழுத்துப்போய்க் காவலிற்போடுவித்து சபையைப்பாழாக்கினான்.

௪ சிதறப்பட்டபேர்கள் திரிந்து தேவவசனத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசிங்கம்பண்ணினார்கள்.

௫ அப்படியே பிலிப்பென்பவன் சமாரியா நாட்டிலுள்ள ஒரு ஊருக்குப்போய் அங்கே கிறிஸ்துவைக்குறித்துப் பிரசங்கித்தான்.

௬ அப்பொழுது அநேகம்பேரிடத்திலிருந்த அசுத்த ஆவிகள் மிகுந்தசத்தத்தோடே கூப்பிட்டு, அவர்களைவிட்டுப்புறப்பட்டன். அநேகந்திமிர்வாதக்காரரும் சப்பாணிகளுஞ் சுகமாக்கப்பட்டார்கள்.

௭ பிலிப்புசெய்த அதிசயங்களைச் சனங்கள்கேள்விப்பட்டுங் கண்டுமிருக்கையில், அவனாற்சொல்லப்பட்டவைகளுக்கு ஒருமனப்பட்டு எச்சரிக்கையாயிருந்தார்கள்.

௮ அந்த ஊரிலேமிகுந்த சந்தோஷமுண்டாயிற்று.

௯ அன்றியுஞ்சீமோன் என்றுபேர்கொண்ட ஒருவன் முன்னே அந்தவூரிலேஸ்தம்பன்வித்தைக்காரனாயிருந்து தன்னைப்பெரியவனென்றுசொல்லிச் சமாரியா நாட்டினச் சனங்களைப்பிரமிக்கப் பண்ணிக்கொண்டிருந்தான்.

௰ சிறியோர் பெரியோர்யாவரும் இவன் பராபரனுடைய பெரியசத்தியென்று அவனுக்கெச்சரிக்கையாயிருந்தார்கள்.

௰௧ அநேககாலம் அவன் தன்னுடைய மந்திரதந்திரங்களினாலே அவர்களைப்பிரமிக்கச்செய்தபடியால் அவர்கள் அவனுக்கு எச்சரிக்கையாயிருந்தார்கள்.

௰௨ பின்பு பராபரனுடைய இராச்சியத்திற்கும் இயேசுக்கிறிஸ்துவின் நாமத்திற்கும் ஏற்றவைகளைச் சுவிசேஷமாய் அறிவிக்கிற பிலிப்புவை அவர்கள் விசுவாசித்தபொழுது புருஷரும் ஸ்திரிகளும் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௰௩ அப்பொழுது அந்தச் சீமோனும் விசுவாசித்து ஞானஸ்நானம்பெற்று பிலிப்புவைப்பற்றிக்கொண்டு, (அவனாலே) நடந்த அதிசயங்களையும் பலத்த செய்கைகளையும் பிரமிப்புடனேபார்த்தான்.

௰௪ சமாரியாநாடு பராபரனுடைய வசனத்தையேற்றுக்கொண்டதை எருசலேமிலுள்ள அப்போஸ்தலர் கேள்விப்பட்டபொழுது அவர்கள் பேதுருவையும் யோவானையும் அவர்களிடத்திற்கனுப்பினார்கள்.

௰௫ அவர்கள்போய் அவர்களிலொருவனிலும் பரிசுத்த ஆவியைப்பெறுமற்கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினாலே ஞானஸ்நானத்தைமாத்திரம்பெற்றவர்களானபடியினாலே,

௰௬ அவர்கள் பரிசுத்த ஆவியைப்பெற்றுக்கொள்ளும்படிக்கு,

௰௭ அவர்களுக்காக ஜெபம்பண்ணி (தங்கள்) கைகளையவர்கள்மேல்வைத்தார்கள். உடனே பரிசுத்த ஆவியைப்பெற்றார்கள்.

௰௮ அப்போஸ்தலர் தங்கள் கைகளை (அவர்கள்) மேல்வைத்ததினாலே பரிசுத்த ஆவி கொடுக்கப்படுகிறதைச் சீமோன் கண்டபொழுது, அவர்களிடத்திற் பணங்கொண்டுபோய்,

௰௯ என்கைக்கீழ் வைக்கப்படுகிறவனெவனோ அவன் பரிசுத்த ஆவியைப்பெறத்தக்கதாக, நீங்கள் எனக்கும் இந்த அதிகாரங் கொடுக்கவேண்டுமென்றான்.

௨௰ அதற்குப்பேதுருசொன்னதாவது. பராபரனுடைய ஈவைப் பணத்தினாலே சம்பாதித்துக்கொள்ளலாமென்று நீ நினைக்கிறபடியால், உன்பணம் உன்னோடே கெட்டுக்குள்ளாகக்கடவது.

௨௧ உன்னிருதயம் பராபரனுக்குமுன்பாகச் செம்மையாயிராதபடியால் இந்தக்காரியத்திலே உனக்குப் பங்கும் பாகமுமில்லை.

௨௨ நீ கசப்புள்ள பிச்சும், அநீதியின் கட்டுமுடையவனாயிருக்கிறதைப் பார்க்கிறேன்.

௨௩ ஆனபடியினாலே உன் இருதயத்தின் சிந்திப்பு உனக்கு மன்னிக்கப்படக்கூடுமானால் உன் துற்குணத்தைவிட்டு மனந்திரும்பிப் பராபரனை நோக்கி வேண்டிக்கொள்வாயாகவென்றான்.

௨௪ சீமோன்சொன்னது. நீங்கள் உரைத்தவைகளிலொன்றும் எனக்குவராதபடிக்கு, நீங்களே எனக்காகக் கர்த்தரை வேண்டிக்கொள்ளுங்களென்றான்.

௨௫ இவ்விதமாய் அவர்கள் கர்த்தருடைய வசனத்தைச் சாட்சியாய் அறிவித்துச் சொன்னபின்பு, எருசலேமுக்குத் திரும்பிச் சமாரியருடைய அநேக கிராமங்களிற் சுவிசேஷத்தைப்பிரசங்கித்தார்கள்.

௨௬ அன்றியுங் கர்த்தருடைய தூதன் பிலிப்புடனேசொன்னது, நீ யெழுந்து தெற்கேபோய்ப் பாழாய்க்கிடக்கிற காட்சாப்பட்டினத்திற்கு எருசலேமிலிருந்துபோகிற மார்க்கத்திற்குப்போவென்றான்.

௨௭ அந்தப்படி அவன் எழுந்துபோனான். அப்பொழுது எத்தியோப்பியரையாண்ட இராசஸ்திரியாகிய கந்தாகியென்பவளுடைய மந்திரியுமாய் அவளுக்குண்டான பொக்கிஷமெல்லாவற்றின்மேலும் வைக்கப்பட்ட தலைவனுமாயிருந்த ஒரு எத்தியோப்பியமனிதன் தொழுதுகொள்ளும்படி எருசலேமுக்குவந்திருந்து.

௨௮ ஊருக்குத்திரும்பித், தன் இரதத்திலுட்கார்ந்து ஏசாயாதீர்க்கதரிசியின் புஸ்தகத்தை வாசித்துக்கொண்டுபோனான்.

லிக்கு உள்ளுக்கழைத்துக்கொண்டு போனார்கள்.

௯ அங்கே அவன் மூன்றுநாள் பார்வையில்லாமலும், புசியாமலும் பானம்பண்ணாமலுமிருந்தான்.

௰ அன்றியும், தமஸ்குவூரில் அன்னியாவென்னும்பேருள்ள ஒருசீஷனிருந்தான். அவனுக்குக் கர்த்தர் தரிசனையாகி, அன்னியாவே! யென்றார். அவன், ஆண்டவரே! இதோ, அடியேனென்றான்.

௰௧ கர்த்தர் அவனுடனே சொன்னது. செம்மையென்னப்பட்ட தெருவிலே யூதாவின்வீட்டில் தருசுவூரானாகிய சவுலென்பவன் இப்பொழுதே செபம்பண்ணுகிறான்.

௰௨ அல்லாமலும் பார்வையடையும்படிக்கு அவன் தரிசனத்திலே அன்னியாவென்னும்பேருள்ள மனிதன் உள்ளே வரவுங் கையைத் தன்மேல்வைக்கவுங் கண்டான். ஆதலால் நீயெழுந்து, அங்கேபோய், அவனைத்தேடிவாயாகவென்றார்.

௰௩ அதற்கு அன்னியா சொன்னது. ஆண்டவரே! அந்த மனிதனைக்குறித்து நான் அநேகராலே கேள்விப்பட்டிருக்கிறபடி, அவன் எருசலேமிலுள்ள உம்முடைய பரிசுத்தவான்களுக்கு எத்தனை பொல்லாங்குகளைச்செய்தான்.

௰௪ இங்கேயும் உம்முடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறயாவரையுங் கட்டும்படிக்கு, அவன் பிரதான ஆசாரியரால் அதிகாரம்பெற்றிருக்கிறானேயென்றான்.

௰௫ அதற்குக்கர்த்தர்சொன்னது, அவன் என்னுடைய நாமத்தினிமித்தம் இவ்வளவு பாடுபடவேண்டுமென்று அவனுக்குக் காண்பிப்பேன்.

௰௬ ஆதலாற்புறச்தேசத்தார்களுக்கும் இராசாக்களுக்கும் இஸ்ரவேல் சனங்களுக்கும் என்னுடைய நாமத்தை யறிவிக்கும்படிக்கு, அவன் எனக்குவிசேஷமாகத் தெரிந்துகொள்ளப்பட்ட ஊழியக்காரனாயிருக்கிறான். ஆகையால் நீபோவென்றார்.

௰௭ அப்பொழுது அன்னியாபோய், வீட்டிற்குட்பிரவேசித்துக் கைகளையவன்மேல் வைத்துச்சகோதரனாகிய சவுலே! நீ வந்தவழியிலேயுனக்குத்தரிசனையான இயேசுவென்னுங் கர்த்தாவானவர் நீபார்வையடைந்துபரிசுத்த ஆவியினாலேநிரப்பப்படும்படிக்கு என்னையனுப்பினாரென்றான்.

௰௮ உடனே அவனுடைய கண்களிலிருந்து மீன் செதிள்களைப்போல விழுந்துபோக, அவன் பார்வையடைந்து எழுந்திருந்து, ஞானஸ்நானம்பெற்று,

௰௯ பின்பு போசனம்பண்ணித் திடப்பட்டான். பின்புசவுலென்பவன் தமஸ்குவூரிலுள்ளசீஷருடனே சிலநாளிருந்தான்.

௨௰ அல்லாமலும் இயேசுவானவரே பராபரனுடைய குமாரனென்று அவன் உடனே செப ஆலயங்களிற் பிரசங்கித்தான்.

௨௧ (அதை)க்கேட்டயாவரும் பிரமிப்படைந்து, எருசலேமில் இந்த நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களைப் பாழாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக் கட்டிப் பிரதான ஆசாரியரிடத்திற்குக் கொண்டுபோகும்படி வந்தவன் இவனல்லவாவென்றார்கள்.

௨௨ சவுலென்பவன் அதிகமதிகமாகத் திடன்கொண்டு, இவரே கிறிஸ்துவென்று திருஷ்டாந்தப்படுத்தித் தமஸ்குவூரிற்குடியிருக்கிறயூதர்களைக் கலங்கப்பண்ணினான்.

௨௩ அநேகநாள் சென்றபின்பு யூதர்கள் அவனைக் கொலைசெய்ய ஆலோசனைபண்ணினார்கள். அவர்களுடைய யோசனை சவுலுக்குத் தெரியவந்தது.

௨௪ அவனைக் கொலைசெய்யும்படிக்கு, அவர்கள் இரவும் பகலும் கோட்டைவாசல்களைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

௨௫ அப்பொழுது சீஷர் இராத்திரியிலே அவனையெடுத்துக்கொண்டுபோய்க் கூடையிலவைத்து, மதிலின்வழியாய் இறக்கிவிட்டார்கள்.

௨௬ பின்பு சவுல் எருசலேமுக்குப்போய்ச் சீஷரோடே சேர்ந்துகொள்ளப் பார்த்தான். அவர்களெல்லாரும் அவனைச் சீஷனென்று நம்பாமல், அவனுக்குப் பயப்பட்டார்கள்.

௨௭ அப்பொழுது பர்னபாவென்பவன் அவனைச்சேர்த்துக்கொண்டு, அப்போஸ்தலரிடத்திற்கழைத்துக்கொண்டுபோய் வழியிலேயவன் கர்த்தரைக் கண்டவிதத்தையும் அவர் அவனுடனே பேசினதையுந் தமஸ்குவூரில் அவன் இயேசுவின் நாமத்தைத் தைரியமாய்ப் பிரசங்கம்பண்ணினதையும் அவர்களுக்கு விவரித்துச்சொன்னான்.

௨௮ அதின்பின்பு அவன் எருசலேமிலே யவர்களுடனே கூடப் போக்குவரவுமாய் வருகிறவனுமாயிருந்து,

௨௯ கர்த்தராகிய இயேசுவின்நாமத்தினிமித்தம் தைரியமாய்ப் பிரசங்கம்பண்ணிக் கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு தருக்கம்பண்ணினான். அவர்கள் அவனைக்கொலைசெய்யத்தேடினார்கள்.

௩௰ சகோதரர் அதையறிந்து அவனைச் செசரியாபட்டினத்திற்கழைத்துக்கொண்டுபோய்ப் பின்பு தருசுவூருக்கனுப்பினார்கள்.

௩௧ அப்படியிருக்குங் காலத்தில் யூதேயா, கலிலேயா, சமாரியா, நாடுகளெங்குமுள்ள சபைகள் சமாதானம் பெற்றிருந்து, கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்திலேயும் பரிசுத்த ஆவியின்போதிப்பிலேயும் வளர்க்கப்பட்டு நடந்துபெருகின.

௩௨ பேதுருவென்பவன் அவர்களெல்லாருக்குள்ளுஞ் சென்றுவருகையில், உவிதா

ஊரிலே குடியிருக்கிற பரிசுத்தவான்களிடத்திற்கும் போனான்.

௩௩ அங்கே எட்டு வருஷமாகக் கட்டிலின்மேல் கிடந்த திமிர்வாதமுள்ள ஐனேயா என்பவனைக் கண்டான். அவனுடனே பேதுரு சொன்னது.

௩௪ ஐனேயாவே! இயேசுக்கிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார். நீ எழுந்து, உன் படுக்கையை நீதானே போட்டுக்கொள் என்றான். உடனே அவன் எழுந்திருந்தான்.

௩௫ லித்தா ஊரிலும் சாரோன் திசையிலும் குடியிருந்தவர்களெல்லாரும் அவனைக் கண்டு கர்த்தரிடத்தில் மனந்திரும்பினார்கள்.

௩௬ அன்றியும் யோப்பா பட்டினத்திலே தொற்காளென்று அருத்தங்கொள்ளுகிற தபீத்தாளென்னப்பட்ட ஒரு சீஷியிருந்தாள். அவள் நற்கிரியைகளையும் தருமங்களையும் நிறைவாய்ச் செய்துகொண்டுவந்தவள்.

௩௭ அக்காலத்திலே அவள் வியாதிப்பட்டு மரணமடைந்தாள். அவளை அவர்கள் குளிப்பாட்டி மேல் வீட்டிற்கிடத்தி வைத்தார்கள்.

௩௮ யோப்பா பட்டினம் லித்தா ஊருக்குச் சமீபமான படியினாலே, பேதுரு அவ்விடத்திலிருக்கிறானென்று சீஷர்கள் கேள்விப்பட்டு, அவன் தாமதமில்லாமல் தங்களிடத்திற்கு வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ளும்படிக்கு இரண்டு மனிதரை யவ்விடத்திற்கு அனுப்பினார்கள்

௩௯ அந்தப்படி பேதுரு எழுந்து அவர்களுடனே கூடப்போனான். அவன் போய்ச் சேர்ந்த பொழுது, அவர்கள் அவனை மேல் வீட்டிற்கழைத்துக்கொண்டு போனார்கள். அப்பொழுது சகல கைம்பெண்களும் அவனருகே சேர்ந்து நின்று, அழுதுகொண்டு, தொற்காள் தங்களுடனே கூடவிருக்கையிற் செய்த அங்கிகளையும், வஸ்திரங்களையுங் காண்பித்தார்கள்.

௪௰ பேதுரு எல்லாரையும் வெளியே போகப்பண்ணிப் பின்பு முழங்காற்படியிட்டு ஜெபம்பண்ணிப் பின்பு சவத்தின்புறமாய்த் திரும்பித் தபீத்தாளே! எழுந்திரு என்றான். அப்பொழுது அவள் தன் கண்களைத் திறந்து பேதுருவைப் பார்த்து உட்கார்ந்தாள்.

௪௧ அவன் அவளுக்குக் கைகொடுத்து, அவளை யெழுந்திருக்கப்பண்ணிப் பரிசுத்தவான்களையுங் கைம்பெண்களையும் அழைத்து, அவளை யுயிருள்ளவளாக அவர்களுக்கு முன் நிறுத்தினான்.

௪௨ அது யோப்பா பட்டின மெங்கும் அறியப்பட்டபொழுது, அநேகம்பேர் கர்த்தாவினிடத்தில் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

௪௩ அவன் யோப்பா பட்டினத்திலே தோற்பதனிடுகிறவனாகிய சீமோனென்பவனிடத்திலே யநேகநாள் தங்கினான்.

## ௰. அதிகாரம்.

[(௧) கொர்நேலி சுவிசேஷத்தைக் கேட்கும்படி பேதுருவை யழைப்பித்ததும், (௯) பேதுரு தரிசனையடைந்து அவனிடத்திற்குப் போனதும், (௩௪) பிரசங்கம்பண்ணினதும், (௪௪) கொர்நேலி முதலானவர்கள் தேவ ஆவியின் வரங்களையடைந்து ஞானஸ்நானத்தைப் பெற்றதும்.]

அன்றியுஞ் செசாரியா பட்டினத்திலே இத்தாலியா தண்டென்னப்பட்ட தண்டிலே நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனாகிய கொர்நேலி யென்பவனிருந்தான்.

௨ அவன் தன் குடும்பத்தார் யாவரோடுங்கூடத் தேவபத்தியுள்ளவனும் பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாயிருந்து ஜனங்களுக்கு மிகுந்த தருமங்களைச் செய்து, எப்பொழுதும் பராபரனை நோக்கி ஜெபம்பண்ணிக்கொண்டுவந்தான்.

௩ பகலிலே யேறக்குறைய ஒன்பதாம் மணிநேரத்திலே அவன் தரிசனையடைந்து தன்னிடத்திற் பராபரனுடைய தூதன் பிரவேசிக்கவுங் கொர்நேலியே யென்று சொல்லவும் பிரத்தியட்சமாகக் கண்டு,

௪ அவனையுற்றுப்பார்த்துப் பயமுள்ளவனாகி ஆண்டவரே என்ன என்றான். அப்பொழுது அவன் சொன்னதாவது. உன் ஜெபங்களையும் உன் தருமங்களையும் பராபரன் திருவுளத்திலே நினைவிருக்கிறார்.

௫ ஆதலால் யோப்பா பட்டினத்திலே கடலின் ருகான் வீட்டிலே வாசம்பண்ணித் தோற்பதனிடுகிறவனாயிருக்கிற சீமோனென்பவனிடத்திலே பேதுரு என்றும் பேர்கொண்ட சீமோன் தங்கியிருக்கிறான்.

௬ அவனை யழைத்துவரும்படிக்கு நீ மனிதரை யவ்விடத்திற்கு அனுப்புவாயாக. நீ செய்யவேண்டுவதை யவன் உனக்குச் சொல்லுவானென்றான்.

௭ கொர்நேலியுடனே பேசின தேவதூதன் போனபின்பு அவன் தன் வீட்டு மனிதரில் இரண்டுபேரையுந் தன்னிடத்திற் காத்திருக்கிற போர்ச்சேவகரில் தேவபத்தியுள்ள ஒருவனையும் அழைத்து,

௮ எல்லாவற்றையும் அவர்களுக்கு விவரித்துச் சொல்லி, அவர்களை யோப்பா பட்டினத்திற் கனுப்பினான்.

௯ மறுநாளிலே யவர்கள் பிரயாணமாய் அந்தப் பட்டினத்திற்குச் சமீபமாய்ச் சேருகையிற் பேதுரு ஆறாம் மணிநேரத்திலே ஜெபம்பண்ணும்படிக்கு வீட்டின்மேல் ஏறினான்.

௰ அப்பொழுது அவன் மிகுந்த பசியடைந்து சாப்பிட மனதாயிருந்தான். அதற்காக அவர்கள் எத்தனம்பண்ணுகையில்,

௧௧ அவன் ஞானதிருஷ்டியடைந்து (அதிலே) வானந்திறந்திருக்கவும் நான்கு தொ

ங்கட்கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப்போல ஒரு கூடு தன்னிடத்திற்கு இறங்கி தத்தரையில் விடப்பட்டிருக்கவும்,

௰௨ அதிலே பூமியிலுள்ள சகலவிதமான நாலுகாற்சீவன்களுங் காட்டுமிருகங்களும ஊரும்வன்வைகளும் ஆகாயத்துப்பறவைகளுமிருக்கவுங்கண்டான்.

௰௩ அல்லாமலும் பேதுருவே! எழுந்திரு. அடித்துப்புசிப்பாயாகவென்றொரு சத்தம அவனுக்குண்டாயிற்று.

௰௪ அதற்குப்பேதுரு ஆண்டவரே! அப்படியல்ல. ஏலாத்தாயும அசுத்தமாயுமிருக்கிறதை நான ஒருக்காலும்புசிக்கவில்லையேயென்றான.

௰௫ அப்பொழுது பராபரனசுத்தமாக்கினவைகளை நீ அசுத்தமென்றெண்ணாதிருப்பாயாகவென்று இரண்டாந்தரஞ் சத்தம் அவனுக்குண்டாயிற்று.

௰௬ மூன்றுந்தரமும அப்படியே யுண்டாயிற்று. பின்பு அந்தக்கூடு திரும்பவானத்திற்கெடுத்துக்கொள்ளப்பட்டது.

௰௭ அப்பொழுது பேதுரு, தான்கண்ட தரிசனையின்கருத்தைக்குறித்துத் தன்னுக்குள்ளே சந்தேகப்படுகையிற், கொருநேலியினால அனுப்பப்பட்ட மனிதர் சீமோனுடையவீட்டைவிசாரித்துக்கொண்டு, வாசற்படியிலேநின்று,

௰௮ பேதுருவென்று பேர் கொண்ட சீமோன இங்கே தங்கியிருக்கிறானோவென்று சத்தமிட்டுக்கேட்டார்கள்.

௰௯ அப்பொழுது பேதுரு அந்தத்தரிசனையைக் குறித்துச் சிந்தனைபண்ணிக்கொண்டிருக்கையில,

௨௰ மூன்று மனிதருன்னைத் தேடுகிறார்கள. அவர்களை நான அனுப்பினேன. ஆதலால நீயெழுந்துதாழ இறங்கி, ஒன்றுக்குஞ்சந்தேகப்படாமல அவர்களுடனே கூடப்போவென்று, ஆவியானவர் அவனுக்குச்சொன்னார்.

௨௧ அந்தப்படி பேதுரு, கொருநேலியினாலே தன்னிடத்திற்கு அனுப்பப்பட்ட மனிதனிடத்திற்கிறங்கிப்போய, நீங்களதேடுகிறவன நானதான. நீங்கள வந்திருக்கிற காரணமென்னவென்றான.

௨௨ அவர்கள சொன்னதாவது. நீதிமானுமாயப் பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாய எல்லாயூதர்களுக்குள்ளும நல்லவனென்று சாட்சிபெற்றிருக்கிறவனுமாயிருக்கிற கொருநேலியென்னுஞ் சேனைத்தலைவன உம்மைத் தனவீட்டிற் கழைப்பித்து, உம்மாலவார்த்தைகளைக் கேட்கும்படிக்குப் பரிசுத்த தூதனாலே தேவேத்தனமாயக் கட்டளைபெற்றுக்கொண்டானென்றார்கள.

௨௩ அப்பொழுது பேதுரு, அவர்களையுள்ளேயழைத்து, உபசாரம்பண்ணினான. மேலுமமறுநாளிலேயவன அவர்களுடனே கூடப்புறப்பட்டான. யோப்பாபட்டினத்திலிருந்த சகோதரரிற் சிலரும அவனுடனே கூடப்போனார்கள.

௨௪ மறுநாளிலே சேசாரியா பட்டினத்திற்சேர்ந்தார்கள. கொருநேலி தனஉறவின்முறையாரையுந் தனக்கு விசேஷமான சிநேகிதரையும வரவழைத்துக்கொண்டு, பேதுரு முதலானவர்கள வரக் காத்திருந்தான.

௨௫ பேதுரு உட் பிரவேசிக்கையிற், கொருநேலி அவனுக்கெதிர்கொண்டு போய, அவனுடைய பாதத்தினருகேவிழுந்து, தொழுதுகொண்டான.

௨௬ பேதுரு அவனைத் தூக்கியெடுத்து, எழுந்திரும. நானும மனிதனதானேயென்றுசொல்லி,

௨௭ அவனுடனேசமபாஷணை பண்ணி, பின்பு உள்ளேபோய, அநேகர்கூடிவந்திருக்கிறதைக்கண்டு அவர்களுடனேசொன்னதாவது.

௨௮ நீங்கள அறிந்திருக்கிறபடி யூதனானவன் அந்நியதேசத்தாரோடே கலந்து, அவனிடத்திற்குப்போகத்தகாததாயிருக்கின்றது. அப்படியிருந்தும, எந்தமனிதனையும ஏலாதவனென்றும அசுத்தனென்றும நானசொல்லாதபடிக்குப் பராபரன எனக்குக்காண்பித்தார்.

௨௯ ஆதலால நீங்கள எனனையழைப்பித்தபொழுது, நான எதிர்பேசாமல வந்தேன. இப்படியிருக்க, எந்தக்காரியத்திற்காக நீங்கள எனனையழைப்பித்தீர்களென்று கேட்கிறேனென்றான.

௩௰ அதற்குக்கொருநேலி சொன்னதாவது. நாலாம்நாள இந்நேரத்திலே நானுபவாசித்து, ஒன்பதாம மணிநேரத்திலே என்வீட்டிற் செபம்பண்ணிக்கொண்டிருந்தேன. அப்பொழுதுபிரகாசமுள்ளஉடையைத்தரித்திருந்த ஒருவன எனக்குமுன்பாக நின்று,

௩௧ கொருநேலியே, பராபரன உன்செபத்தைக்கேட்டருளி. உன்தருமங்களை நினைத்திருக்கிறார்.

௩௨ ஆதலால யோப்பாபட்டினத்திலே கடலினருகே தோற்பதனிடுகிறவனாகிய சீமோனுடைய வீட்டிலே தங்கியிருக்கிற பேதுரு என்றுமறுபேர்கொண்ட சீமோனைவரவழைக்கும்படிக்கு, அவ்விடத்திற்குமனிதரையனுப்பு. அவனவந்து, உனக்குச்சொல்லுவானென்றார்.

௩௩ அந்தப்படிநான உடனே உம்மிடத்திலமனிதரை யனுப்பினேன. நீர்வந்தது நலமாயிருக்கின்றது. இப்பொழுது பராபரனாலேயுமக்குக் கட்டளையிடப்பட்டயாவையுங்கேட்கும்படிக்கு நாங்களெல்லாரு மிங்கே பராபரனுக்குமுன்பாகவிருக்கிறோமென்றான.

தும், (எ) தேவதூதன் பேதுருவைப் புறப்படப்பண்ணினதும், (௨௰) ஏரோது பராபரனுக்குக் கனத்தைச் செலுத்தாததினாலே செத்துப்போனதும்.]

அக்காலத்திலே ஏரோதே என்னும் இராசா சபையிற் சிலரைத் துன்பப்படுத்தும்படிக்குத் தொடங்கினான்.

௨ யோவானுடைய சகோதரனாகிய யாக்கோபையவன் கத்தியினாலே கொலைசெய்தான்.

௩ மேலும் அது யூதருக்குப் பிரியமாயிருக்கிறதென்று, அவன் கண்டு, பேதுருவையும் பிடிக்கத் தொடர்ந்தான். அந்நாட்கள் புளிப்பில்லாத அப்பப்பண்டிகை நாட்களாயிருந்தன்.

௪ அவனைப் பிடித்தபின்பு, பண்டிகைகழித்து அவனைச் சனங்களுக்கு முன்பாகக் கொண்டுபோகவேண்டுமென்று, ஏரோதே எண்ணி, அவனைச் சிறைச்சாலையிலே வைத்து, ஒருவருக்குப்பிற்கு நான்கு போர்ச்சேவகராக நான்கு வகுப்புகள் அவனைக் காக்கும்படி யொப்புக்கொடுத்தான்.

௫ அப்படிப் பேதுரு காவலிலே காக்கப்பட்டிருக்கையிற், சபையார் அவனைக் குறித்து இடைவிடாமற் பராபரனை நோக்கிச் செபம்பண்ணினார்கள்.

௬ அப்பொழுது ஏரோதே அவனை வெளியே கொண்டுவரும்படி குறித்த நாளுக்கு முன்னான இராத்திரியிலே பேதுரு இரண்டு சங்கிலிகளினாலே கட்டப்பட்டு, இரண்டு சேவகர் நடுவே நித்திரைபண்ணிக்கொண்டிருக்கக் காவற்காரரும் கதவுக்கு முன்னிருந்து, காவலறையைக் காத்துக்கொண்டிருக்க,

௭ சடுதியாய் அறையிலே பிரகாசமுண்டாகத்தக்கதாகக் கர்த்தருடைய தூதனொருவன் தோன்றிப் பேதுருவின் விலாவிலே தட்டிச், சீக்கிரமா யெழுந்திருவென்று அவனை யெழுப்பினான். அப்பொழுது சங்கிலிகள் அவனுடைய கைகளை விட்டு விழுந்தன்.

௮ மேலுந்தூதன் அவனுடனே சொன்னது. உன் அரையிற் கட்டி, உன் பாதரட்சைகளைத் தொடுத்துக் கொள்ளென்றான். அவன் அப்படிச் செய்தான். தூதன் பின்னுஞ் சொன்னது. உன் வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு, எனக்குப் பின்சென்றுவாவென்றான்.

௯ அந்தப்படி அவன் புறப்பட்டு, அவனுக்குப் பின்சென்று, தூதனாற் செய்யப்பட்டது மெய்யென்றறியாமல், இது ஒரு தரிசனமென்று நினைத்தான்.

௰ அவர்கள் முதலாங்காவலையும் இரண்டாங்காவலையுங் கடந்து, பின்பு பட்டணத்திற்குப் போகிற இருப்புக்கதவினிடத்திற் சேர்ந்தபொழுது அவர்களுக்கு அது தானாய்த் திறக்க, அதின் வழியாய் அவர்கள் புறப்பட்டு ஒரு வீதியிலே நடந்துபோனார்கள். உடனே தூதன் அவனைவிட்டு நீங்கினான்.

௰௧ பேதுருவுக்குத் தெளிவுவந்தபொழுது ஏரோதேயின் கைக்கும் யூதருடைய விருப்பங்களையாவுக்கும் என்னை விடுதலையாக்கும்படிக்குக் கர்த்தர் தம்முடைய தூதனையனுப்பினாரென்று நான் இப்பொழுது மெய்யாய் அறிந்திருக்கிறேனென்றான்.

௰௨ இப்படி அவன் சிந்தனைகொண்டு, மாற்குவென்று பேர்கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள் வீட்டிற்குப் போனான். அங்கே அநேகர் கூடிச் செபம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

௰௩ பேதுரு வாசற்கதவைத் தட்டினபொழுது, உரோதாளென்றுபேர்கொண்ட ஒரு வேலைக்காரி ஒற்றுக்கேட்கவந்து,

௰௪ பேதுருவின் சத்தத்தை யறிந்து, சந்தோஷத்தினாலே வாசலைத் திறவாமல், உள்ளே ஓடிப்போய், வாசலுக்கு முன்னே பேதுரு நிற்கிறானென்று அறிவித்தாள்.

௰௫ அவர்கள் நீ பயித்தியமாய்ச் சொல்லுகிறாயென்றார்கள். அவள், அப்படியல்ல, அவரே யிருக்கிறாரென்றாள். அப்பொழுது அவர்கள் சொன்னது. அவன் அவருடைய தூதனென்றார்கள்.

௰௬ பேதுரு பின்னுந் தட்டிக்கொண்டிருந்தபொழுது, அவர்கள் திறந்து, அவனைக் கண்டு, பிரமித்தார்கள்.

௰௭ உடனே அவர்கள் பேசாமலிருக்கும்படி அவன் கையினாற் சமிக்கைகாண்பித்துக் கர்த்தர் தன்னைக் காவலிலிருந்து விடுதலையாக்கின வகையை அவர்களுக்கு விவரமாய்க் காட்டி, இவைகளை யாக்கோபுக்கும் மற்றச் சகோதரருக்கும் அறிவியுங்களென்று சொல்லிப் புறப்பட்டு, வேறொரு இடத்திற்குப் பிரயாணமாய்ப் போனான்.

௰௮ பொழுதுவிடிந்தபின்பு பேதுருவைக் குறித்துச் சேவகருக்குள்ளே யுண்டான கலக்கங் கொஞ்சமல்ல,

௰௯ ஏரோதே அவனைத் தேடிக் காணாமற்போனபொழுது காவற்காரரைக் கேட்டியாய்ச் சோதித்து, அவர்களைக் கொலைசெய்யும்படி கட்டளையிட்டுப் பின்பு யூதேயா நாட்டைவிட்டுச் செசரியாபட்டணத்திற்குப் போய், அங்கே சஞ்சரித்தான்.

௨௰ அக்காலத்திலே ஏரோதே தீரியருக்கும் சீதோனருக்கும் மிகவும் பகையாயிருந்தான். அப்பொழுது அவர்கள் தங்கள் பிழைப்புக்கு வேண்டியவைகளை இராசாவினுடைய தேசத்திலிருந்து வாங்கிக்கொள்வதினாலே அவர்கள் ஒருமனப்பட்டு, அவனிடத்திற்குப் போய் இராசாவினுடைய வீட்டு விசாரணைக்காரனாகிய பிலாஸ்தென்பவனைத் தங்கள் வசமாக்கிக்கொண்டு சமாதானமாயிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்.

௨௧ அப்பொழுது குறித்த நாளிலே ஏரோதேயானவன் இராச அங்கியைத் தரித்துக்கொண்டு, சிம்மாசனத்தின்மேல் உட்கார்ந்து அவர்களுக்குப் பிரசங்கம் பண்ணினான்.

௨௨ அதற்கு ஜனங்கள், இது ஒருமனிதனுடைய சத்தமல்ல, தேவனுடைய சத்தமேயென்று கூப்பிட்டார்கள்.

௨௩ அவன் பராபரனுக்குப் புகழ்ச்சியுண்டாவதாகவென்று அறிக்கையிடாதபடியினாலே, உடனே கர்த்தருடைய தூதன் அவனையடித்தான். அவன் புழுக்களாலே தின்னப்பட்டு இறந்தான்.

௨௪ பராபரனுடைய வசனம் வளர்ந்து பெருகிறது,

௨௫ பின்பு பருனபாவுஞ் சவுலுந் தரும ஊழியத்தை நிறைவேற்றினபொழுது, மாற்கு என்று மறுபேர்கொண்ட யோவானைக் கூட்டிக்கொண்டு, எருசலேமை விட்டுத் திரும்பினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) அந்தியோகியிலே பவுலும் பருனபாவுஞ் சுவிசேஷத்தைப் பிரசித்தம்பண்ண அனுப்பப்பட்டதும், (௪) அவர்கள் சீப்புருதீவுக்குப்போய்ப் போதித்து ஸ்தம்பனவித்தைக்காரனாகிய ஏலியாவைக் கடிந்துகொண்டு பம்பீலியாவுக்குப் போனதும், (௰௪) பிசீதியாவிலே பவுல் பிரசங்கம்பண்ணினதும், (௪௨) புறதேசத்தார் அதைக்குறித்துச் சந்தோஷப்பட்டதும், (௪௫) யூதர்கள் விரோதஞ்செய்தபொழுது பவுல் அவர்களைக் கடிந்துகொண்டதும்.]

௧ அந்தியோகியாப் பட்டினத்திலுள்ள சபையிலே பருனபாவென்றும் நீகரென்னப்பட்ட சீமேயோனென்றுஞ் சிரேனே ஊரானாகிய லூசியென்னுந் தேசத்தின் காற்பங்குக்கு அதிபதியாகிய ஏரோதேயுடனே கூடவளர்க்கப்பட்ட மனாவென்றுஞ் சவுலென்றும் பெயர்களையுடைய இவர்கள் தீர்க்கதரிசிகளுமாய்ப் போதகருமாயிருந்தார்கள்.

௨ அவர்கள் கர்த்தருக்கு ஆராதனைசெய்து உபவாசித்துக்கொண்டிருக்கிறபொழுது பரிசுத்த ஆவியானவர் சொன்னது. பருனபாவையுஞ் சவுலையும் நான் அழைத்த கிரியைக்காக அவர்களைத் தெரிந்தெடுத்தனுப்புங்களென்றார்.

௩ உடனே அவர்கள் உபவாசித்துச் செபம்பண்ணி அவர்கள்மேற் கைகளை வைத்தனுப்பினார்கள்.

௪ ஆதலால் அவர்கள் பரிசுத்த ஆவியினால் அனுப்பப்பட்டுச் சிலேக்கிய பட்டினத்திற்குப்போய் அங்கே கப்பலேறிச் சீப்புருதீவிற் சேர்ந்தார்கள்.

௫ பின்பு அவர்கள் சாலமீஸ் பட்டினத்திற்குப் போனபொழுது யூதருடைய செப ஆலயங்களில் (அவர்களுக்கு) பராபரனுடைய வசனத்தையறிவித்தார்கள். யோவானென்பவனும் அவர்களுக்கு உதவிக்காரனாயிருந்தான்.

௬ அவர்கள் அந்தத் தீவெங்குங் கடந்து பாப்போப் பட்டினமட்டும் போனபொழுது பரியேசுவென்று பேர்கொண்ட இஸ்தம்பனக்காரனுமாய்க் கள்ளத்தீர்க்கதரிசியுமாய்,

௭ புத்திசாலியாகிய செருகியுபவுலென்னும் பிறதிநிதியினிடத்தில் தங்கினவனுமாயிருந்த ஒரு யூதனைக் கண்டார்கள். அந்தத் துரை பருனபாவையுஞ் சவுலையும் அழைப்பித்துப் பராபரனுடைய வசனத்தைக் கேட்க ஆசையாயிருந்தபொழுது,

௮ இஸ்தம்பனக்காரனென்றருத்தங்கொள்ளுகிற எலிமாவென்னப்பட்ட அவன் பிறதிநிதியை விசுவாசத்திலிருந்து விலக்கும்படி தேடி அவர்களோடெதிர்த்துப் பேசினான்.

௯ அப்பொழுது பவுலென்னுஞ் சொல்லப்பட்ட சவுல் பரிசுத்த ஆவியினாலே நிறைந்தவனாய் அவன்மேற் கண் ஊன்றச் சொன்னதாவது.

௰ எல்லாவிதமான கபடமும் எல்லாவிதமான பொல்லாங்கும் நிறைந்தவனே பிசாசின்மகனே சகல நீதிகளுக்கும் பகைஞனே நீ கர்த்தருடைய செம்மையான மார்க்கங்களைப் புரட்டுகிறதில் ஓயமாட்டாயா.

௰௧ இப்பொழுதே கர்த்தருடைய கை உன்மேல் வருகின்றது. சிலகாலம் நீ சூரியனைக் காணமற்குருடனாயிருப்பாயென்றான். உடனே மந்தாரமும் இருளும் அவன்மேல் விழுந்தன். அவன் திரிந்து கைலாகுகொடுக்கிறவர்களைத் தேடினான்.

௰௨ இப்படிச் சம்பவித்ததைப் பிறதிநிதி கண்டு கர்த்தரைக்குறித்துச் சொல்லிய உபதேசத்திற்காக அதிசயப்பட்டு விசுவாசமுள்ளவனானான்.

௰௩ பின்பு பவுலும் அவனைச் சேர்ந்தவர்களும் பாப்போப் பட்டினத்தை விட்டுப் பம்பீலியா நாட்டிலுள்ள பெருகேப் பட்டினத்திற்குப் போனார்கள். யோவான் அவர்களைவிட்டுப் பிரிந்து எருசலேமுக்குத் திரும்பினான்.

௰௪ பின்பு அவர்கள் பெருகேப் பட்டினத்தை விட்டுப் புறப்பட்டுப் பிசீதியா நாட்டிலுள்ள அந்தியோகியாவுக்குப்போய் ஓய்வுநாளிலே செப ஆலயத்திற்குப்போய் உட்கார்ந்தார்கள்

௰௫ (அங்கே) நியாயப்பிரமாணமுந் தீர்க்கதரிசன (ஆகமமும்) வாசிக்கப்பட்டுத் தீர்ந்தபின்பு சகோதரர்களே நீங்கள் ஜனங்களுக்குப் புத்திசொல்லவிரும்பினாற் சொல

வீர்களாகிலென்று ஆலயத்தலைவர் அவர்களுக்குச்சொல்லியனுப்பினார்கள்.

௰௬ அப்பொழுது பவுல் எழுந்து கையினாலே சாடைகாண்பித்துச் சொன்னதாவது. இஸ்ரவேலரே பராபரனுக்குப் பயந்து நடக்கிற சகலசனங்களே கேட்பீர்களாக.

௰௭ இந்த இஸ்ரவேல் சந்ததியாருடைய தேவன் நம் முன்னோர்களைத் தெரிந்து கொண்டு எகிப்துதேசத்திலே சஞ்சரித்து வந்த அவர்களுடைய சந்ததியை மேன்மைப்படுத்திப் பலத்த வல்லமையினாலே அதிலிருந்து அவர்களைப் புறப்படப்பண்ணி,

௰௮ நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்திலே அவர்களைப் பம்போஷித்துக்கொண்டு,

௰௯ கானான்தேசத்திலுள்ள ஏழுவகைச் சனக்கூட்டங்களை நீக்கிப்போட்டு அவர்களுடைய தேசத்தை யவர்களுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்டு,

௨௰ பின்பு ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷத்திற்குள்ளே சாமுவேல் தீர்க்கதரிசிவரைக்கும் அவர்களுக்காக நியாயாதிபதிகளை யேற்படுத்தினார்.

௨௧ சாமுவேலின் காலமுதல் அவர்கள் ஒரு இராசா வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். அதின்படி பராபரன் அவர்களுக்குப் பென்யாமினுடைய கோத்திரத்தானாகிய கீசென்பவனுடைய குமாரனாகிய சவுலைக் கொடுத்தார். அவன் நாற்பது வருஷமிருந்தான்.

௨௨ பின்பு அவர் அவனை விலக்கி இயேசேயென்பவனுடைய குமாரனாகிய தாவீதை என் திரு உள்ளத்திற்கேற்றவனென்று கண்டேன். அவன் என்னுடைய சித்தத்தின்படி முழுவதுஞ்செய்வானென்று தாவீதைக் குறித்துச் சாட்சியிட்டு அவனையே அவர்களுக்கு இராசனாக ஏற்படுத்தினார்.

௨௩ அவனுடைய சந்ததியிலே பராபரன் தமது வாக்குத்தத்தத்தின்படி இஸ்ரவேலருக்காக இயேசுவென்னும் இரட்சகரைத் தோன்றப்பண்ணினார்.

௨௪ அவருடைய பிரவேசத்திற்கு முன்னே யோவான் மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தை எல்லா இஸ்ரவேலருக்கும் பிரசங்கித்தான்.

௨௫ மேலும் யோவான் (பணிவிடை) யோட்டத்தை நிறைவேற்றுகிறபொழுது (சனங்களுடனே) சொன்னதாவது. நீங்கள் என்னை எவனென்றெண்ணுகிறீர்கள். நான் அவரல்ல எனக்குப்பின் ஒருவர் வருகிறார் அவருடைய பாதரட்சையை அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரனல்லவென்று சொன்னான்.

௨௬ ஆபிரகாமின் சந்ததியாராகிய சகோதரர்களே பராபரனுக்குப் பயப்படுகிறவர்களே இந்த இரட்சிப்பையறிவிக்கிற உபதேசம் உங்களுக்கேயனுப்பப்பட்டிருக்கின்றது.

௨௭ என்னவெனில் எருசலேமிற் குடியிருக்கிறவர்களும் அவர்களுடைய தலைவரும் அவரையாவது ஓய்வுநாள் தோறும் வாசிக்கப்படுகிற தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களையாவது அறியாமல் அவரை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்ததினாலே அவைகளை நிறைவேற்றினார்கள்.

௨௮ மரணத்திற்கேதுவான ஒன்றையும் (அவரிடத்திற்) காணாமலிருந்தும் அவர்கள் அவரைக் கொலைசெய்யும்படிக்குப் பிலாத்துவை வேண்டிக்கொண்டார்கள்.

௨௯ அவரைக்குறித்து எழுதியிருக்கிறவையாவையும் அவர் முடித்தபின்பு (சிலர்) அவரை மரத்திலிருந்திறக்கிக் கல்லறையிலே வைத்தார்கள்.

௩௰ பராபரன் அவரை மரித்தோரிலிருந்தெழுப்பினார்.

௩௧ அன்றியும் அவர் தம்முடனேகூடக் கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குப் போனவர்களுக்கு அநேகநாள் தரிசனையானார். அவர்களே சனங்களுக்கு முன்பாக அவருடைய சாட்சிகளாயிருக்கிறார்கள்.

௩௨ நீர் என்னுடைய குமாரன் இன்று நான் உம்மை ஜெனிப்பித்தேனென்று இரண்டாஞ் சங்கீதத்திலே எழுதியிருக்கிறபடி,

௩௩ இயேசுவை யெழுப்பினதினாலே பராபரன் (நம்முடைய) முன்னோர்களுக்குண்டான வாக்குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளைகளாகிய நமக்கு நிறைவேற்றினாரென்று நாங்களும் உங்களுக்குச் சுவிசேஷமாய் அறிவிக்கிறோம்.

௩௪ அவர் மறுபடியும் மரியாதபடிக்கு அவரை மரித்தோரிலிருந்தெழுப்பச் சித்தமானபடியினாலே தாவீதுக்குச் (செய்த) உறுதியான தயவுகளை உங்களுக்குக் கட்டளையிடுவேனென்று திருவுளம்பற்றினார்.

௩௫ அன்றியும் உம்முடைய பரிசுத்தவான் அழிவையடையும்படி செய்யமாட்டீரென்று வேறொரு சங்கீதத்திலே சொல்லியிருக்கின்றது.

௩௬ தாவீதானவன் தன் காலத்திலே பராபரனுடைய சித்தத்துக்கு ஊழியஞ்செய்தபின்பு நித்திரையடைந்து தன் பிதாக்களிடத்திற் சேர்க்கப்பட்டு அழிவையடைந்தான்.

௩௭ பராபரனாலே யெழுப்பப்பட்டவர் அழிவையடையவில்லை.

௩௮ ஆதலாற் சகோதரர்களே அவர்மூலமாய் உங்களுக்குப் பாவமன்னிப்புண்டாகுமென்று அறிவிக்கப்படுகின்றது.

௩௯ அல்லாமலும் மோசேயின் நியாயப்பிரமாணத்தினாலே நீங்கள் விடுதலையாகக் கூடாத காரியமெதுவோ அதினின்று விசுவாசிக்கிறயாவனும் அவராலே விடுதலையாகிறானென்று அறிந்துகொள்வீர்களாக.

௪௧ அனறியுநதிர்க்கதரிசிகளுடையபுஸ்தகத்திலே அசட்டைக்காரரேபாருங்கள். உங்கள நாட்களில ஒரு கிரியையச்செய்வேன ஒருவன அதையுங்களுக்குவிவரிநதுச சொனனாலுமநீங்களவிசுவாசியாமலிருப்பீர்கள அது அப்படிப்பட்டகிரியையாகவேயிருக்கும.

௪௨ ஆதலாற்பிரமிப்படைநது அழிநதுபோங்களென்று சொலலியிருக்கிறதினபடி உங்களுக்குவாராதபடிக்குச் சாவதானமாயிருப்பீர்களாகவென்றான.

௪௩ பினபு அவர்களபுறப்படுகையிலமறு ஓயவுநாளிலே யிநதவசனங்களைத் தங்களுக்குச் சொலலவேணடுமென்று புறத்தேசத்தார்வேணடிக்கொணடார்கள.

௪௪ மேலுஞ்செப ஆலயச்சபைகலைநது போனபினபுயூதர்களிலும யூதமார்க்கத்திற் பிரவேசித்துத தேவபத்தியாயிருநதபேர்களிலும அநேகர் பவுலுவுக்குமபருனபாவுக்கும பினசென்றார்கள. அவர்களுடனே யவர்களபேசிக்கொணடு பராபரனுடையகிருபையினாலே நிலைகொணடிருக்கும படிக்குப புத்திசொனனார்கள.

௪௫ மறு ஓயவுநாளிலேகொஞ்சங்குறையப்பட்டினத்தாரெலலாரும பராபரனுடையவசனத்தைக் கேட்கும்படிக்குக்கூடிவநதார்கள.

௪௬ யூதர்கள அவவளவுசனங்களைக்கணடபொழுது, பொறாமையினால நிறையப்பட்டுப பவுலு சொனனவைகளுக்கு விரோதமாயப்பேசினார்கள. விரோதித்துந தூஷணித்துமவநதார்கள.

௪௭ அபபொழுதுபவுலுவுமபருனபாவுநதயிரியங்கொணடு சொனனதாவது, முதலாவது உங்களுக்கே பராபரனுடைய வசனத்தைச்சொலலவேணடியதாயிருநதது. நீங்கள அதைத தளளி உங்களை நித்தியசீவனுக்கு அபாத்திரரென்று தீர்த்துக்கொளளுகிறபடியினாலே, நாங்கள புறத்தேசத்தாரிடத்திற்குபபோகிறோம.

௪௮ நீர் பூமியின எலலை பரியநதமும இரட்சகராயிருக்கும படிக்கு, உமமைபபுறத்தேசத்தார்களுக்கு ஒளியென ஏற்படுத்தினேனென்கிற வேதவாக்கியத்தினபடி பராபரன எங்களுக்குக் கட்டளையிட்டருளினபடியினாலே, அபபடிச செயகிறோமென்றார்கள.

௪௯ புறத்தேசத்தார்களஅதைக்கேட்டுச்சநதோஷமடைநது, கர்த்தருடைய வசனத்தைப்புகழ்நது, நித்தியசீவனுக்கு நியமிக்கப்பட்டவர்கள எவர்களோ அவர்கள விசுவாசித்தார்கள.

௫௰ பினபு கர்த்தருடைய வசனம அத்தேசமெங்கும பிரபலமாயிற்று.

௫௧ யூதர்கள பத்தியுங்கனமுமபொருநதிய ஸ்திரிகளையும பட்டினத்தின முதலாளிகளையும எழுப்பிப்பவுலுடனுனபா எனபவர்களைத துனபப்படுத்துமபடிசெயது, தங்கள எலலைகளிலிருநது அவர்களைத துரத்தினார்கள.

௫௨ அபபொழுது அவர்கள தங்களகாலத்தூசியைப்பட்டவர்களமேற் சாட்சியாக உதறிப்போட்டு, இக்கோனியா பட்டினத்திற்குப போனார்கள. சீஷரானவர்கள சநதோஷத்தினாலும பரிசுத்த ஆவியினாலும நிறையப்பட்டார்கள.

## ௰௪. அதிகாரம்.

[(௧) இக்கோனியா ஊரிலே பவுலுவுமபருனபாவுநதனபபடடதும, (௮) லிஸ்திரா ஊரிலே அவர்கள ஒரு அற்புதத்தைச் செயததினாலே தேவர்களென்றெணணப்பட்டதும, (௰௯) யூதர்களாலேகலலெறியப்பட்டதும, (௨௧) தொபேமுதலான ஊர்களுக்குபபோயபபோதித்ததும.]

இக்கோனியா பட்டினத்திலேயவர்களிருவரும யூதருடைய செப ஆலயத்திற்குபபோயப, பிரசங்கமபணணின பொழுது, யூதரிலுங்கிரேக்கரிலுந திரளான சனங்கள விசுவாசித்தார்கள.

௨ விசுவாசியாத யூதர்கள சகோதரருக்குவிரோதமாகப புறத்தேசத்தாருடைய மனதை யெழுப்பிப, பகை யுணடாக்கினார்கள.

௩ அபபடியிருநதும அவர்கள அங்கே நெடுங்காலஞ் சஞ்சரித்துக் கர்த்தரைக்குறித்துத் தயிரியமாயப்போதகமபணணினார்கள. அவர் தமது கிருபையைக் காட்டிய வசனத்திற்குச் சாட்சியுணடாக அதிசயங்களும அற்புதங்களும அவர்கள கைகளாற் செயயப்படுமபடி அனுக்கிரகித்தார்

௪ அநதப்பட்டினத்தின சனங்களபிரிநது, சிலர் யூதரையுஞ் சிலர் அப்போஸ்தலரையுஞ் சேர்நதார்கள.

௫ அபபொழுது அவர்களை நிநதித்து, அவர்களமேற் கலலெறியும பொருட்டாகப புறத்தேசத்தாரும யூதர்களும அவர்களுடைய தலைவருடனேயுங் கூடக் கலகமபணணுகிறதை அவர்கள அறிநது,

௬ இலிக்கவோனியா நாட்டிலுளள இலீஸ்திரா ஊருக்குந தெருபை யூருக்கும அவைகளைச் சூழநத புறத்திற்கும ஓடிப போய,

௭ அங்கேசுவிசேஷத்தை அறிவித்துக் கொணடுவநதார்கள.

௮ இலீஸ்திராவூரிலே ஒருவன தனதாயினவயிற்றிலிருநது சப்பாணியாயப்பிறநது ஒருக்காலும நடவாமற் பெலனிலலாதகாலகளோடே உளுக்கார்நதிருநது,

௯ பவுலுபேசுகிறதைக்கேட்டான. அவனமேற் பவுலுகணணூனறி, இரட்சிக்கப

படுமபடிக்கான விசுவாசம அவனுக்குண்டென்றுகண்டு,

௰ நீ உன கால்களை யூன்றிச செம்மையாய எழுந்துநில்லென்று, மிகுந்த சத்தத்தோடேசொன்னான். உடனேயவன குதித்தெழுந்துநடந்தான.

௰௧ பவுலுசெய்ததைச சனங்கள்கண்டு, தேவர்கள் மனிதரூபமெடுத்து நம்மிடத்தில் இறங்கி யிருக்கிறார்களென்று இலிக்கவோனியா பாஷையிலே சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௨ மேலும பருனபாவை யூப்பித்தர் தேவனென்றும பவுலுபிரசங்கத்தை நடத்தினவனானபடியினாலே அவனைமெர்க்கூரி தேவனென்றும அழைத்தார்கள்,

௰௩ அல்லாமலும பட்டினத்திற்கு முன்பேயிருந்த யூப்பித்தருடையபூசாரி எருதுகளையும பூமாலைகளையும வாசலினருகே கொண்டுபோயச சனங்களோடே கூடப்பலியிடமனதாயிருந்தான.

௰௪ அப்போஸ்தலராகிய பருனபாவும பவுலும அதைக்கேள்விப்பட்டு, (விசனத்தினாலே) தங்கள வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,

௰௫ கூட்டத்திற்குள ஓடி மனிதர்களே, என்னத்திற்கு இப்படிச்செய்கிறீர்கள். நாங்களும உங்களைப்போலப் பாடுள்ள மனிதராயிருந்து,

௰௬ நீங்களிந்த வீணான தேவர்களைவிட்டு வானத்தையும பூமியையுஞ சமுத்திரத்தையும அவைகளிலுள்ள யாவையுமுண்டாக்கின சீவனுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டுமென்று உங்களுக்குச சுவிசேஷமாயச சொல்லுகிறோம. சென்றகாலங்களில அவர் எல்லாப் புறதேசத்தாரையுந தங்கள தங்களவழிகளிலே நடக்கவிட்டிருந்தும,

௰௭ அவர்களுக்கு நனமைசெயதுவந்து வானத்திலிருந்து மழைகளையுஞ செழிப்புள்ளகாலங்களையும நமக்குக்கொடுத்து, ஆகாரத்தினாலுஞ சந்தோஷத்தினாலும நம்முடைய இருதயங்களை நிரப்பி இவ்விதமாய அவர்தம்மைக்குறித்துச சாட்சிகொடாமலிருக்கவில்லையென்று கூப்பிட்டார்கள்.

௰௮ இப்படியவர்கள்சொல்லித தங்களுக்குச சனங்கள்பலியிடாதபடிக்குப பிரயாசத்தோடே நிறுத்தினார்கள்.

௰௯ பின்பு அந்தியோகியா வூரிலும இக்கோனியூரிலுமிருந்து யூதர்கள அங்கே போயச சனங்களுக்குப் போதனைசெய்து பவுலின்மேற் கல்லெறிந்து, அவனமரித்தானென்றெண்ணி, அவனைப பட்டினத்திற்குவெளியேயிழுத்தார்கள்.

௨௰ அங்கே சீஷர்கள அவனைச்சூழ்ந்துகொள்ளுகையில, அவனெழுந்து ஊருக்குட்பிரவேசித்து, மறுநாளிலே பருனபாவுடனே தெருபையூருக்குப்போனான.

௨௰௧ அந்தவூராருக்குச்சுவிசேஷத்தையறிவித்து, அநேகரைச சீஷராக்கின்பின்பு, அவர்கள இலீஸ்திராவூருக்கும இக்கோனியூருக்கும அந்தியோகியா வூருக்குந்திரும்பி,

௨௰௨ சீஷருடைய ஆத்துமாக்களை ஸ்திரப்படுத்தி, விசுவாசத்திலே நிலைத்திருக்கும்படிக்குப புத்திசொல்லி, நாம அநேக உபத்திரவங்களின வழியாயப பராபரனுடைய இராச்சியத்திற பிரவேசிக்கவேண்டுமென்றுஞ்சொல்லிக்கொண்டார்கள்.

௨௰௩ அன்றியுஞ்சபைகடோறும அவர்களுக்காக மூப்பரைத தெரிந்தேற்படுத்தி உபவாசித்துச்செபமபண்ணி, அவர்களவிசுவாசித்துக்கொண்டிருந்த கர்த்தருக்கவர்களையொப்புவித்தார்கள். பின்பு அவர்கள பிசீதியாநாட்டைக் கடந்துபோயப பமபீலியாநாட்டிலேசேர்ந்து,

௨௰௪ பெருகேயூரிலே சுவிசேஷ வசனத்தையறிவித்து,

௨௰௫ அத்தாலியா பட்டினத்திற்குச்சென்று, அங்கேகப்பலேறி,

௨௰௬ தாங்கள நிறைவேற்றின கிரியைக்காகப்பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டுப புறப்பட்ட அந்தியோகியாபட்டினத்திற்குப்போனார்கள்.

௨௰௭ அங்கேசேர்ந்தபொழுது அவர்கள சபையைக் கூடிவரப்பண்ணித தங்களாற் பராபரன செயதவைகளையும அவர் புறதேசத்தார்களுக்கு விசுவாசத்தினகதவைத திறந்தானென்பதையும அறிவித்துப பின்பு அங்கே சீஷருடனேகூட அநேக காலஞ்சஞ்சரித்துக்கொண்டுவந்தார்கள்.

## ௰௫. அதிகாரம்.

[(௧) விருத்தசேதனத்தைக்குறித்துப புறதேசத்துச்சபைகளுக்குள்ளே வாக்குவாதங்களுண்டானதும,(௬) அப்போஸ்தலரும மூப்பருங்கூடியிருந்து அதைக்குறித்து ஆலோசித்துத தீர்மானமபண்ணி நிருபத்தை யெழுதியனுப்பினதும, (௩௬) பவுலுவும பருனபாவும பிரிந்துபோனதும.]

அக்காலத்திலே சிலர் யூதேயாவிலிருந்துபோய நீங்களமோசேயினமுறைமையினபடியே விருத்தசேதனம பெற்றுக்கொள்ளாவிட்டால, இரட்சிக்கப்பட மாட்டீர்களென்று சகோதரருக்குப போதகமபண்ணினார்கள்.

௨ அதினாலே கலகமும அவர்களுக்கும பவுலு,பருனபா, என்பவர்களுக்குமமிகுந்த தருக்கமுமுண்டானபொழுது,அந்தத்தருக்கக்காரியத்தைக்குறித்துப பவுலும பருனபாவுந தங்களிலவேறுசிலரும எருசலேமிலுள்ள அப்போஸ்தலரிடத்திற்கும மூப

ருக்கிறோர்களென்று நாங்கள்கேள்விப்பட்டபடியினலே,

௨௫ நாங்கள்தெரிந்துகொண்ட சிலமனிதரை நம்முடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்நாமத்திற்காகத்தங்கள் பிராணனையும்விட்ட எத்தனமாயிருந்தவர்களுமாய,

௨௬ எங்களுக்குப் பிரியமானவர்களுமாயிருக்கிறபருனபாவோடும் பவுலோடுங்கூட உங்களிடத்திற்கனுப்பவேண்டுமென்று ஒருமனப்பட்டு யோசனைபண்ணிக் கொண்டு,

௨௭ அந்தப்படியே யூதாவையுஞ் சீலாவையும் அனுப்புகிறோம். அவர்களுமிந்த வசனங்களை வாய்மொழியாயுங்களுக்குச் சொல்லுவார்கள்.

௨௮ எவையெனில் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளுக்கும் இரத்தத்திற்கும் நெருக்குண்டு செத்ததற்கும் வேசித்தனத்திற்கும் நீங்கள் விலகியிருக்கவேண்டும். இதுவேயல்லாமல்வேறதிகமான பாரமொன்றும் உங்கள்மேற் போடாமலிருக்கும்படிக்கு,

௨௯ பரிசுத்த ஆவியும் நாங்களுஞ் சித்தமாயிருக்கிறோம். மேற்சொல்லியவைகளினின்று நீங்களுங்களைக்காத்துக்கொண்டால் நன்றுசெய்வீர்கள். சுகமாயிருப்பீர்களாகவென்றெழுதி, அவர்கள்கையிற் கொடுத்தனுப்பினார்கள்.

௩௰ அவர்கள் அனுப்பிவிடப்பட்டு, அந்தியோகியாப் பட்டணத்திற்குப்போய்ச் சபையைக்கூடிவரச்செய்து அந்த நிருபத்தைக்கொடுத்தார்கள்.

௩௧ அதையவர்கள்வாசித்தபின்பு அதிலடங்கிய ஆறுதலானவசனங்களைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.

௩௨ பின்பு யூதாவுஞ்சீலாவுந் தாங்களுந் தீர்க்கதரிசிகளானபடியினலே அநேகவசனங்களினலேசகோதரருக்குப் புத்திசொல்லி அவர்களைஸ்திரப்படுத்தி,

௩௩ சிலகாலம் அங்கேயிருந்து பின்புச் சகோதரராற்சமாதானத்துடனே அப்போஸ்தலரிடத்திற்கனுப்பிவிடப்பட்டார்கள்.

௩௪ சீலாவினலும் அங்கேதங்கியிருக்கலாமென்றெண்ணியிருந்தான்.

௩௫ அன்றியும் பவுலுவும் பருனபாவும் அந்தியோகியா ஊரிலேசஞ்சரித்து வேறு அநேகரோடுங்கூடக் கர்த்தருடையவசனத்தையுபதேசித்துச் சுவிசேஷமாய்ப்பிரசங்கித்துக்கொண்டுவந்தார்கள்.

௩௬ சிலநாளுக்குப்பின்புபவுலுபருனபாவைநோக்கிக் கர்த்தருடைய வசனத்தைநாம் அறிவித்திருந்த சகலபட்டணங்களிலுமுள்ளசகோதரர்சுகமாயிருக்கிறார்களோவில்லையோவென்று அதைப்பார்க்கும்படிக்குத்திரும்பிப் பிரயாணமாய்ப்போவோமவாவென்றான்.

௩௭ அப்பொழுது பருனபாவானவன்மாற்கு என்றழைக்கப்பட்ட யோவானைக்கூட அழைத்துக்கொள்ளும்படி யோசனை சொன்னான்.

௩௮ பவுலு பம்பீலியாநாட்டிலே தங்களுடனேகூடக்கிரியைக்குவாராமல் தங்களைவிட்டுப்பிரிந்துபோன அவனையழைத்துக்கொள்ளத்தகாதென்றுசொன்னான்.

௩௯ அப்பொழுது சண்டையுண்டானதினலே அவர்கள் ஒருவரையொருவர் விட்டுப்பிரிந்தார்கள். பருனபா என்பவன் மாற்கைக்கூட்டிக்கொண்டுக் கப்பலேறிச் சீப்புருதீவுக்குப்போனான்.

௪௰ பவுலென்பவன் சீலாவைத்தெரிந்துகொண்டு சகோதரராலே பராபரனுடைய கிருபைக்கொப்புவிக்கப்பட்டு,

௪௧ புறப்பட்டுச் சீரியா நாட்டிலேயும் கிலீசியாநாட்டிலேயுந்திரிந்து சபைகளைஸ்திரப்படுத்தினன்.

## ௧௬. அதிகாரம்.

[(௧) பவுலு தீமோத்தேயுவைச்சேர்த்துப் பயணமாய்ப்போனதும, (௮) பவுலுமகெதோனியாவுக்குப் போகும்படிக்குத் தரிசனையடைந்ததும, (௰௨) பிலிப்பிலே லீதியாள் விசுவாசமுள்ளவளானதும, (௰௬) பவுலு குறிசொல்லுகிறவளைத்துரத்தினதும, (௰௯) அவனுஞ் சீலாவும் அடிக்கப்பட்டுச் சிறையிலேவைக்கப்பட்டு அதிசயமாய இரட்சிக்கப்பட்டதும, (௨௰) சிறைச்சாலைக்காரன்விசுவாசியானதும.]

பின்பு அவன் தெருபேயூருக்கும் லிஸ்திராவூருக்கும்போனான். அங்கே தீமோத்தேயு என்னப்பட்டசீஷனிருந்தான். அவனுடையதாய்விசுவாசமுள்ள ஒருயூதஸ்திரியானவள். அவனுடைய தகப்பன் கிரேக்கனானவன்.

௨ மேலும் அவன் லிஸ்திராவிலும் இக்கோனியாவிலும் இருக்கிறசகோதரராலே நற்சாட்சிபெற்றவன்.

௩ அவனைப்பவுல தன்னுடனேகூடப்புறப்படவேண்டுமென்று விரும்பி அவனுடையதகப்பன்கிரேக்கனென்று அவ்விடங்களிலிருக்கிறயூதர்களெல்லாரும் அறிந்தபடியால அவனுக்குவிருத்தசேதனம்பண்ணினான்.

௪ பின்பு அவர்கள்பட்டணங்களிலே திரிந்து நடக்கையிலே எருசலேமிலுள்ள அப்போஸ்தலராலும்மூப்பராலுந் தீர்மானம்பண்ணப்பட்ட சட்டங்களைக் காத்துக்கொள்ளும்படிக்குச்சனங்களுக்கு ஒப்புவித்தார்கள்.

௫ அதினலேசபைகள் விசுவாசத்திலே ஸ்திரப்பட்டுநாளுக்குநாள்பெருகினார்கள்.

௬ பின்பு அவர்கள்பிரிகியாநாட்டிலேயுங் கலாத்தியாநாட்டிலேயுந்திரிந்துகொண்

கிறபொழுது ஆசியாதேசத்திலே அவர்கள் கர்த்தருடைய வசனத்தைச் சொல்லாதபடிக்குப் பரிசுத்த ஆவியினாலே தடைபண்ணப்பட்டு,

௭ பின்பு மீசியா நாட்டிற்குப் போய்ப் பித்தினியா நாட்டிற்குப் போகப் பிரயத்தனம்பண்ணினார்கள். அந்தும் இயேசுவினுடைய ஆவி தடைபண்ணினார்.

௮ அப்பொழுது அவர்கள் மீசியா நாட்டைக் கடந்து துரோவாப்பட்டினத்திற்குப் போனார்கள்.

௯ அங்கே இராத்திரியிலே பவுலுக்கொரு தரிசனையுண்டாயிற்று என்னவெனில் மக்கெதோனியா தேசத்தானொருவன் நின்று நீ மக்கெதோனியாவில் வந்து எங்களுக்கு உதவிசெய்வாயாகவென்று அவனை வேண்டிக்கொண்டதாகவிருந்தது.

௰ அந்தத் தரிசனையை அவன் கண்டபொழுது அவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்குக் கர்த்தர் எங்களையழைத்தாரென்று நாங்கள் நிச்சயமாயறிந்து உடனே மக்கெதோனியா தேசத்திற்குப் புறப்பட்டுப்போகப் பிரயத்தனம்பண்ணி,

௰௧ கப்பலேறி, துரோவாப்பட்டினத்தைவிட்டு, நேராய்ச் சமொத்திராக்கே தீவுக்கும், மறுநாளிலே நேயாப்போலிப்பட்டினத்திற்கும் போய்,

௰௨ அங்கேயிருந்து மக்கெதோனியதேசத்தின் தலையானதுமாய் உரோமர் குடியேறினதுமாயிருக்கிற பிலிப்பிப் பட்டினத்திற் சேர்ந்து, சிலநாள் அதிலே சஞ்சரித்தோம்.

௰௩ பட்டினத்திற்குவெளியே ஆற்றின்கரைக்கே வழக்கமாய்ச் செபம்பண்ணுகிறதற்கான இடத்திற்கு ஓய்வுநாளில் நாங்கள் போய், அங்கே உட்கார்ந்து, கூடிவந்திருந்த ஸ்திரீகளுடனே பேசிக்கொண்டோம்.

௰௪ தியத்தீரா ஊராளுமாய் இரத்தாம்பரம் விற்கிறவளுமாய்த் தேவபத்தியுள்ளவளுமாய் லீதியாளென்று பேர்கொண்டவளுமாயிருந்தாள். அவள் பவுலால் சொல்லப்பட்டவைகளைக் கேட்டுக்கொண்டிருக்கையில், அவைகளுக்கு அவள் எச்சரிக்கையாயிருக்கும்படிக்கு, கர்த்தர் அவளுடைய இருதயத்தைத் திறந்தார்.

௰௫ பின்பு அவளும் அவளுடைய குடும்பத்தாரும் ஞானஸ்நானம்பெற்றபொழுது. அவள் எங்களை நோக்கி, நீங்கள் என்னைக் கர்த்தாவினிடத்தில் விசுவாசமானவளென்றெண்ணினால் என்வீட்டிலே வந்து, தங்கியிருப்பீர்களாகவென்று எங்களை மிகவும் வேண்டிக்கொண்டு இருந்தினாள்.

௰௬ நாங்கள் செபத்திற்குப் போகையிற் பீதத்தோனுடைய ஆவியைக்கொண்டிருந்து குறிசொல்லுகிறதினாலே தன் எசமான்களுக்கு மிகுந்த ஆதாயத்தையுண்டாக்கின ஒரு வேலைக்காரி எங்களுக்கெதிர்ப்பட்டாள்.

௰௭ அவள் பவுலுக்கும் எங்களுக்கும் பின்சென்று இந்த மனிதர் உன்னதமான பராபரனுடைய ஊழியக்காரர். உங்களுக்கு இரட்சிப்பின் மார்க்கத்தை அறிவிக்கிறவர்களென்று கூப்பிட்டாள்.

௰௮ இப்படி அநேகநாட் செய்தாள். அப்பொழுது பவுல் விசனமடைந்து திரும்பிக்கொண்டு அந்த ஆவியுடனே சொன்னது. இவளைவிட்டுப் புறப்படும்படிக்கு இயேசுக்கிறிஸ்துவினுடைய நாமத்தினாலே உனக்குக் கட்டளையிடுகிறேனென்றான். அந்நேரமே அது புறப்பட்டுப்போயிற்று.

௰௯ அவளுடைய எசமான்கள் தங்கள் ஆதாயத்தின் நம்பிக்கையற்றுப்போயிற்றென்று அறிந்து, பவுலையும் சீலாவையும் பிடித்து சந்தைவெளியிலுள்ள தலைவரிடத்திற்கு இழுத்து,

௨௰ பின்பு அவர்களைத் துரைகளுக்கு முன்பாகக் கொண்டுபோய் யூதர்களாகிய இந்த மனிதர் நம்முடைய பட்டினத்தைக் கலங்கப்பண்ணி,

௨௰௧ உரோமராகிய நம்மாலேயேற்றுக்கொள்ளவும் செய்யவும்படாத முறைமைகளையறிவிக்கிறார்களென்றார்கள்.

௨௰௨ அப்பொழுது சனங்கள் அவர்களுக்கு விரோதமாயெழும்பினதுமல்லாமல், துரைகள் அவர்களுடைய வஸ்திரங்களைக் கிழித்துப்போடவும் அவர்களையடிக்கவும் சொல்லி,

௨௰௩ மிகுதியாய் அவர்களையடிப்பித்தபின்பு, சிறைச்சாலையிலே வைத்து, அவர்களைப் பத்திரமாய்க் காக்கும்படிக்குச் சிறைச்சாலைக்காரனுக்குக் கட்டளையிட்டார்கள்.

௨௰௪ அவன் இப்படிப்பட்ட கட்டளையைப் பெற்றபொழுது, அவர்களை உள்ளான காவலறையிலே போட்டு, அவர்கள் கால்களை மரத்திலே அடித்துவைத்தான்.

௨௰௫ அப்படியிருந்தும், பாதி இராத்திரியிலே பவுலும் சீலாவும் செபம்பண்ணிப் பராபரனைத் துதித்துப்பாடினார்கள். காவலில் வைக்கப்பட்ட மற்றவர்கள் அதைக்கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

௨௰௬ சடுதியிலே சிறைச்சாலையின் அஸ்திபாரங்கள் அசையத்தக்கதாகப் பூமிமிகவும் அதிர்ந்தது. உடனே கதவுகளெல்லாந்திறக்கப்பட்டன. எல்லாருடைய கட்டியிருந்த சங்கிலிகள் அற்றுப்போயின.

௨௰௭ சிறைச்சாலைக்காரன் விழித்துச் சிறைச்சாலையின் கதவுகள் திறந்திருக்கிறதைக் கண்டு, அதில் வைக்கப்பட்டவர்கள் ஓடிப்போனார்களென்று நினைத்து, கத்தியையுருவித் தன்னைக் கொலைசெய்ய எத்தனமாயிருந்தான்.

௨௰௮ பவுலென்பவன் நாங்களெல்லாரும் இங்கேயிருக்கிறோம். ஆகையால் நீ உனக்கு

க்கேடொன்றுஞ்செய்யாதிருப்பாயாகவென்று மிகுந்தசத்தத்தோடேகூப்பிட்டான்.

௨௯ அப்பொழுது அவன் விளக்குகளையழைப்பித்து, உள்ளே ஓடி நடுக்கமடைந்தவனாய்ப் பவுலுக்குஞ் சீலாவுக்கும் முன்பாக விழுந்து,

௩௰ பின்பு அவர்களை வெளியே அழைத்துப்போய், ஆண்டவர்களே, இரட்சிக்கப்படுகிறதற்கு நான் என்னசெய்யவேண்டுமென்றான்.

௩௧ அதற்கவர்கள் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக் கொள்வாயாக, அப்பொழுது நீயும் உன்வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்களென்று சொல்லி,

௩௨ அவனுக்கும் அவனுடையவீட்டிலிருந்த யாவருக்குங் கர்த்தருடைய வசனத்தைப்போதித்தார்கள்.

௩௩ மேலும் அவ்விராத்திரியில் அந்நேரத்திலே அவன் அவர்களைச்சேர்த்துக்கொண்டு, அடிகளால்வந்த காயங்களைக் கழுவினான் அன்றியும் அவனும் அவனைச்சேர்ந்த யாவரும் உடனேஞானஸ்நானம் பெற்றார்கள்.

௩௪ பின்பு அவன் அவர்களைத் தன்வீட்டிற்குள் அழைத்துப்போய், அவர்களுக்குப் போசனங்கொடுத்துத் தானுந் தன்வீட்டாரனைவரும் பராபரனில் விசுவாசிகளானபடியினாலே மிகவும் மகிழ்ச்சியாயிருந்தான்.

௩௫ உதயமானபொழுது, துரைகள் தலையாரிகளையழைத்து அந்தமனிதரை விட்டுவிடும்படி சொல்லுங்களென்றனுப்பினார்கள்.

௩௬ சிறைச்சாலைக்காரன் பவுலுடனே சொன்னதாவது. உங்களை விடுதலையாக்கும்படிக்குத் துரைகள் கட்டளையனுப்பினார்கள். ஆகையால் நீங்கள்புறப்பட்டுச் சமாதானத்துடனே போவீர்களாகவென்றான்.

௩௭ அதற்குப்பவுல்சொன்னது. உரோமராகிய எங்களையவர்கள் நியாயம்விசாரியாமல் வெளியரங்கமாய் அடிப்பித்துச்சிறைச்சாலையிலேபோட்டு, இப்பொழுது இரகசியமாய் எங்களைவிடுதலையாக்குகிறார்களா. அப்படியல்ல அவர்களேவந்து, எங்களைவெளியே அழைத்து அனுப்பிவிடக்கடவர்களென்றான்.

௩௮ இந்தவசனங்களைத் தலையாரிகள் துரைகளுக்கறிவித்தார்கள். உரோமராயிருக்கிறார்களென்று அவர்கள்கேட்டபொழுது, பயமடைந்துவந்து அவர்களுடனே தயவாகப்பேசிக்கொண்டு,

௩௯ பின்பு அவர்களைவெளியே அழைத்துப்போய்ப்பட்டணத்தைவிட்டுப்போகும்படிகேட்டுக்கொண்டார்கள்.

௪௰ அந்தப்படி அவர்கள்சிறைச்சாலையிலிருந்துபுறப்பட்டு, லீதியாளிடத்திற்குப்போய், சகோதரரைக்கண்டு, அவர்களுக்கு ஆறுதல் சொல்லிப்புறப்பட்டுப்போனார்கள்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) அவர்கள்தெசலோனிக்கையூருக்குப்போய்ப்போதித்ததும், (௫) யூதர்கள்கலகஞ்செய்ததும், (௰) பவுலுஞ்சீலாவும் பெரோயாவூருக்குப்போய்ப் பிரசங்கிக்க அவ்வூரார் விசுவாசங் கொண்டதும், (௰௬) பவுல் அத்தேனேயுக்குப்போய்ப் பிரசங்கம்பண்ணினதும்.]

அவர்கள் அம்பிபோலிப்பட்டணத்தையும் அப்பொலோனியப் பட்டணத்தையுங் கடந்து தெசலோனிக்காப்பட்டணத்திற்குப் போனார்கள். அங்கேயூதர்களுக்காக ஒரு செப ஆலயமிருந்தது.

௨ பவுல்தன்வழக்கத்தின்படியவர்களிடத்திற்குப்போய், மூன்று ஓய்வுநாட்களில் வேதவாக்கியங்களின் நியாயங்களையெடுத்து, அவர்களுடனே சம்பாஷித்துக் கொண்டுவருகையில்,

௩ கிறிஸ்துபாடுபடவும்மரித்தோரிலிருந்தெழுந்திருக்கவும்வேண்டுமென்றுநாட்டித், தானுங்களுக்கறிவிக்கிற இயேசுவே கிறிஸ்துவென்று திருஷ்டாந்தப்படுத்தினான்.

௪ அவர்களிற்சிலர் அதற்குச்சம்மதித்துப் பவுலையுஞ் சீலாவையுஞ் சேர்ந்துகொண்டார்கள். தேவபத்தியுள்ள கிரேக்கரில் அநேகம்பேருங் கனம்பொருந்திய ஸ்திரீகளில்மிகுதியானபேரும் அப்படியே செய்தார்கள்.

௫ சம்மதியாதயூதர்கள் வயிராக்கியங் கொண்டு தெருக்களிலே திரிந்தலைகிற சில பொல்லாதமனிதரைச்சேர்த்துக்கொண்டு கூட்டங்கூடி, பட்டணத்தைக்கலகப்படுத்தி, யாசோனுடையவீட்டிற்குமுன்போய் நின்று அவர்களைச்சனங்களுக்குமுன்பாகக் கொண்டுபோகும்படிவகை தேடினார்கள்.

௬ அவர்களைக்காணாமலிருந்தபொழுது அவர்கள்யாசோனையுஞ்சிலசகோதரரையும் பட்டணத்துத்தலைவரிடத்திற்கிழுத்துக்கொண்டுபோய் உலகத்தைக்கலகப்படுத்துகிறவர்கள் இங்கேயும் வந்திருக்கிறார்கள்.

௭ யாசோன் இவர்களை யேற்றுக்கொண்டான். இவர்களெல்லாரும் இயேசுவென்னும்வேறொருவனை இராசாவென்றுசொல்லி, இராயனுடையகட்டளைகளுக்குவிரோதமாய்ச்செய்கிறார்களென்று கூப்பிட்டு,

௮ இவைகளைக்கேட்டுக்கொண்ட சனங்களையும்பட்டணத்துத்தலைவரையுங் கலங்கப்பண்ணினார்கள்.

௯ அப்பொழுது அவர்கள்யாசோனிடத்திலும்மற்றவர்களிடத்திலுங்கை யெழுத்துவாங்கிக்கொண்டு அவர்களைவிட்டு விட்டார்கள்.

௰ உடனே சகோதரர்கள் இராத்திரிகாலத்திலே பவுலையும் சீலாவையும் பெரோயா வூருக்கனுப்பிவிட்டார்கள். அவர்கள் அங்கே சேர்ந்து, யூதர்களுடைய செப ஆலயத்திற்குப் போனார்கள்.

௰௧ தெசலோனிக்கேயிலுள்ளவர்களிலும் அவர்கள் மேன்மையுள்ளவர்களாய் மிகுந்த மனப்பூர்வத்தோடே சுவிசேஷ வசனத்தையேற்றுக்கொண்டு, காரியங்கள் மெய்யாய் அப்படிப்பட்டவைகளோ அல்லவோ வென்று நாடோறும் வேத வாக்கியங்களை ஆராய்ந்தார்கள்.

௰௨ ஆதலால் அவர்களில் அநேகம்பேருங் கனம்பொருந்திய அநேகக் கிரேக்கஸ்திரிகளும் புருஷருமே விசுவாசிகளானார்கள்.

௰௩ பெரோயாவூரிலேயும் பராபரனுடைய வசனம் பவுலினாலே அறிவிக்கப்படுகின்றதென்று தெசலோனிக்கேயா யூதர்கள் அறிந்தபொழுது, அங்கேயும் போய்ச் சனங்களைக் கலக்கப்படுத்தினார்கள்.

௰௪ உடனே சகோதரர்கள் பவுலைச் சமுத்திரத்தின் வழியாய்ப் போக அனுப்பினார்கள். சீலாவுந் தீமோத்தேயும் பின்னும் அங்கே தங்கினார்கள்.

௰௫ பவுலை வழிநடத்திப் போனவர்கள் அவனை அத்தேனே பட்டினத்திற்கழைத்துப் போய் அங்கே சீலாவுந் தீமோத்தேயும் அதிசீக்கிரந் தன்னிடத்தில் வரவேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லும்படிக்கவனை பெற்றுப் புறப்பட்டுப் போனார்கள்.

௰௬ அவர்கள் வரும்படிக்குப் பவுலென்பவன் அத்தேனே பட்டினத்திற் காத்துக்கொண்டிருக்கையில், பட்டினம் விக்கிரகங்களால் நிறைந்திருக்கிறதைப் பார்த்து மனதில் மிகுந்த வயிராக்கியத்தை யடைந்து கொண்டு,

௰௭ பின்பு செப ஆலயத்திலே யூதர்களோடும் மற்றத் தேவபத்தியுள்ள பேர்களோடுஞ் சந்தைவெளியிலே தனக்கெதிர்ப்பட்டவர்களோடும் நாடோறும் பேசிக் கொண்டான்.

௰௮ அப்பொழுது எப்பிக்கூரரும் ஸ்தோயிக்கருமான ஞானிகளிற் சிலர் அவனுடனே வாக்குவாதம் பண்ணிக்கொண்டுவருங் காலத்திலே சிலர் இந்த வாயாடி என்ன பேசுவானென்றார்கள். சிலர் அவன் இயேசுவையும் மரித்தோரிலிருந்தெழுந்திருக்குதலையும் அவர்களுக்குப் பிரசங்கித்தபடியினாலே, இவன் அந்நிய தேவர்களையறிவிக்கிறவனென்று தோன்றுகின்றதென்றார்கள்.

௰௯ அப்பொழுது அத்தேனேபட்டினத்தாரெல்லாரும் அங்கே தங்கும்படி வருகிற அந்நியரும் புதியவைகளைக் கேட்கிறதிலும் பேசுகிறதிலுமேயன்றி, மற்றொருவிதமாய்த் தங்கள் காலத்தைப் போக்கவிரும்பாதவர்களானபடியால்,

௨௰ அவர்கள் அவனை மாருஸ் தேவனுடைய மேடையிலுள்ள நியாய ஸ்தலத்திற் கழைத்துப்போய், நீ சொல்லுகிற புதிய உபதேசத்தை நாங்கள் அறியலாமா.

௨௧ நவமான காரியங்களையே எங்கள் காதுகேட்கப்பண்ணுகிறீர் ஆகையால் நாங்கள் அவைகளை அறியவேணுமென்றிருக்கிறோமென்றார்கள்.

௨௨ அப்பொழுது பவுல் மாருஸ்மேடையின் நடுவிலே நின்று சொன்னதாவது. அத்தேனரே! எல்லாவற்றிலும் நீங்கள் தேவபத்தியேயுங்களுக்கு மிகவுமுண்டாயிருக்கிறதென்று எனக்குத் தோன்றுகின்றது. எப்படியென்றால், நான் திரிந்து, உங்கள் தேவ ஆராதனைக்கேற்றவைகளை நோக்கிப் பார்த்தபொழுது, அறியப்படாத தேவனுக்கென்றெழுதியிருக்கிற ஒரு பீடத்தையுங் கண்டேன்.

௨௩ நீங்கள் அறியாமற் பணிவுசெய்கிறவரையே நானுங்களுக்கறிவிக்கிறேன்.

௨௪ உலகத்தையும் அதிலுள்ள யாவையுமுண்டாக்கின தேவனானவர் வானத்திற்கும் பூமிக்கும் ஆண்டவரானதால், கைகளாற் செய்யப்பட்ட கோவில்களில் வாசம்பண்ணுகிறதுமில்லை.

௨௫ யாதொன்று தமக்கு வேண்டுவதாக மனிதர்கைகளாற் பணிவிடை கொள்ளுகிறதுமில்லை. எல்லாருக்குஞ் சீவனையுஞ் சுவாசத்தையும் மற்றயாவையும் அவர் கொடுத்திருக்கிறாரே.

௨௬ அல்லாமலும் அவரே ஒரே இரத்தத்திலிருந்து மனிதரெல்லாருந் தோன்றப்பண்ணி, நம்மிலொருவருக்குந் தூரமல்லாத பராபரனுடைய தம்மையவர்கள் தடவியடைந்து கொள்ளத்தக்கதாக,

௨௭ தம்மைத் தேடும்படிக்கு, அவர்களுக்காக முன்திட்டமாக்கப்பட்ட காலங்களையுங் குடியிருப்பெல்லைகளையுங் குறித்து, அவர்கள் பூமியெங்குங் குடியிருக்கும்படி செய்தார்.

௨௮ அவராலே நாம் பிழைக்கிறோம் அசைகிறோம் இருக்கிறோம். அதுபோல உங்களில் சில புலவர்களும், அவருடைய வமிசத்தாராயிருக்கிறோமென்று சொன்னார்கள்.

௨௯ ஆதலால் நாம் பராபரனுடைய வமிசத்தாராயிருக்கத் தெய்வம் மனிதருடைய சித்திரவேலையினாலும் தோற்றுவித்தலும் பொன்வெள்ளி கல் இவைகளாற் செய்யப்பட்டதற்கொப்பாயிருக்கின்றதென்று நாம் நினைக்கலாகாது.

௩௰ அறியாமையுள்ள காலங்களைப் பராபரன் காணாதவர்போலிருந்தார். இப்பொழுதும் மனந்திரும்பவேண்டுமென்று எவ்விடத்திலுமுள்ள மனிதர் யாவருக்குங் கட்டளையிடுகிறார்.

௩௧ மேலும் ஒரு நாளைக் குறித்தார். அதிலேயவர் தாம் நியமித்த ஒருவனைக்கொண்டு

டு பூச்சக்கரத்திலுள்ள யாவருக்கும் நியாயந்தீர்ப்புக்கொடுப்பார், அவரை மரித்தோரிலிருந்தெழுப்பினதினாலே அவர் அந்த நிச்சயத்தை எல்லாருக்கும் விளங்கப் பண்ணினாரென்றான்.

௩௨ மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக்குறித்து அவர்கள் கேட்டபொழுது சிலர் இகழ்ந்தார்கள். சிலர் பின்னொருவிசை இதைக்குறித்து உன்னிடத்திற்கேட்போமென்றார்கள்.

௩௩ அப்பொழுது பவுலு அவர்களிலிருந்து புறப்பட்டுப்போனான்.

௩௪ சிலர் அவனைப்பற்றிக்கொண்டு பின்புவிசுவாசிகளானார்கள். அவர்களில் தியொனீசியென்னும் நியாயாதிபதியும், தாமரியென்னும் பேருள்ள ஒரு ஸ்திரீயும் இவர்களுடனே கூடவேறு சிலருமிருந்தார்கள்.

## ௰௮. அதிகாரம்.

[(௧) பவுலு கொரிந்துவுக்குப்போய்ப்போதித்ததும், (௯) தரிசனையையடைந்ததும், (௰௨) யூதர்கள் கலகஞ்செய்ததும், (௰௮) பவுலு சீரியாவுக்கும் எபேசுவுக்கும் போனதும், (௨௪) அங்கே அப்பொல்லோவைக் கண்டதும்.]

அதன்பின்பு பவுலு அத்தேனேப்பட்டினத்தை விட்டு, கொரிந்து பட்டினத்திற்குப் போய்,

௨ இராயனாகிய கிலவுதி யூதரெல்லாரையும் உரோமை நகரியைவிட்டுப்போகும்படி கட்டளையிட்டபடியினாலே, இத்தாலி நாட்டினின்று நவமாய் வந்திருந்த ஆக்கில்லாவென்னும் நாமமுள்ள பொந்துதேசத்தானாகிய ஒரு யூதனையும் அவனுடைய மனைவியாகிய பிரிஸ்கில்லாளையும் அங்கே கண்டு,

௩ அவர்களிடத்திற்போய்த் தானும் அவர்களும் ஒரே தொழில் செய்தவர்களானபடியினாலே, அவர்களிடத்திலே தங்கித் தொழில் செய்தான். அவர்களுடைய தொழில் கூடாரம்பண்ணுதல்.

௪ அன்றியும் அவன் ஓய்வுநாடோறும் செப ஆலயத்திலே சம்பாஷணைபண்ணி, யூதருக்கும் கிரேக்கருக்கும் புத்திசொன்னான்.

௫ மக்கேதோனிநாட்டிலிருந்து சீலாவும் தீமோத்தேயும் வந்தபொழுது, பவுலு தன் ஆவியிலே அதிக வயிராக்கியங்கொண்டு இயேசுவானவரே கிறிஸ்து என்று யூதருக்குக் காண்பித்தான்.

௬ அவர்களே எதிர்பேசித் தூஷணித்தபொழுது, அவன் தன் வஸ்திரங்களை யுதறி, உங்களுக்குக் கேடுவரும்படிக்கு நீங்களே ஏதுவாயிருக்கிறீர்கள்.

௭ நான் சுத்தமாயிருக்கிறேன். இது முதல் நான் புறதேசத்தார்களிடத்திற் போகிறேனென்று அவர்களுடனே சொல்லி, அவ்விடத்தைவிட்டுத் தேவபத்தியுள்ள யூஸ்து என்பவனுடைய வீட்டிலே போனான். அந்தவீடு செப ஆலயத்திற்கு அடுத்ததாயிருந்தது.

௮ மேலும் செப ஆலயத் தலைவனாகிய கிறிஸ்புவென்பவன் தன் வீட்டார் யாவரோடுங்கூடக் கர்த்தரை விசுவாசித்தான். கொரிந்தியரில் அநேகரும் சுவிசேஷத்தைக்கேட்டு, விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றார்கள்.

௯ பின்பு இராத்திரியிலே கர்த்தர் ஒரு தரிசனத்திலே பவுலுடனே சொன்னதாவது. இந்தப்பட்டினத்திலே அநேகம்பேர் என்னுடைய சனங்களாயிருக்கிறார்கள். ஆகையால் நான் உன்பக்கத்திலிருப்பேன். ஒருவனும் உனக்குத் தீமை செய்யும்படிக்கு உன்மேல் கைபோடுவதில்லை.

௰ ஆனபடியினாலே நீ பயப்படாமற்பேசுவாயாக. மவுனமாயிராதிருப்பாயாகவென்றார்.

௰௧ அந்தப்படி அவன் ஒருவருஷமும் ஆறுமாதமும் அங்கே தங்கிப் பராபரனுடைய வசனத்தை அவர்களுக்குள்ளே யுபதேசம்பண்ணிக்கொண்டு வந்தான்.

௰௨ பின்பு கல்லியோனென்பவன் அகாயா நாட்டிலே பிரதிதுரையான பொழுது, யூதர்கள் ஒருமனப்பட்டுப் பவுலுவுக்கு விரோதமாயெழும்பி, அவனை நியாயாசனத்திற்குமுன்பாகக் கொண்டுபோய்,

௰௩ இவன் வேதநூலுக்கு விரோதமான விதமாய்ப் பராபரனைச் சேவிக்கும்படி மனிதருக்குப் போதிக்கிறானென்றார்கள்.

௰௪ அதற்குப் பவுலு தன் வாயைத் திறக்கையிற், கல்லியோன் யூதருடனே சொன்னதாவது. யூதரே, இது அநீதியல்லது மிகவும் பொல்லாங்கான காரியமானால் நான் உங்களுக்குப் பொறுமையாய்ச் செவிகொடுக்க நியாயமுண்டாயிருக்கும்.

௰௫ இது உபதேசத்திற்கும் நாமங்களுக்கும் உங்கள் வேதநூலுக்கும் மாறுதருக்கமானபடியினாலே இப்படிப்பட்டவைகளைக் குறித்து நான் நியாயாதிபதியாயிருக்க விரும்புகிறதில்லை. ஆகையால் நீங்களே பார்ப்பீர்களாகவென்று சொல்லி,

௰௬ அவர்களை நியாயாசனத்தைவிட்டுப் போகப்பண்ணினான்.

௰௭ அப்பொழுது கிரேக்கரெல்லாரும் செப ஆலயத் தலைவனாகிய சொஸ்தேனேயைப்பிடித்து நியாயாசனத்திற்குமுன்பாகத் தாக்கி அடித்தார்கள். அதைக்குறித்துக் கல்லியோன் விசாரணை பண்ணாமலிருந்தான்.

௰௮ பின்னும் பவுலு அநேகநாள் அங்கே தரித்திருந்தபின்பு அவன் சகோதரருடைய உத்தரவு வாங்கிக்கொண்டு தனக்கொரு பிரார்த்தனையுண்டாயிருந்தபடியாற் கெங்கிரேயாப்பட்டினத்திலே சிரசு சவரம

பண்ணிச் சீரியா தேசத்திற்குப் போகும்படி கப்பலேறிப் போனான். பிரிஸ்கில்லாளும் ஆக்கில்லாவும் அவனுடனே கூடப் போனார்கள்.

௰௯ அவன் எபேசுபட்டினத்திற்குச் சேர்ந்தபொழுது அவர்களை அங்கே விட்டுச் செப ஆலயத்திற்குட் பிரவேசித்து யூதருடனே சம்பாஷணை பண்ணினான்.

௨௰ அவர்கள் அவனைச் சிலகாலந் தங்களுடனே யிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபொழுது அவன் சம்மதியாமல்,

௨௰௧ வருகிற பண்டிகையிலே நான் எப்படியும் எருசலேமிலிருக்கவேண்டும். பராபரனுக்குச் சித்தமானால் திரும்பி உங்களிடத்தில் வருவேனென்று சொல்லி அவர்களுடைய உத்தரவு வாங்கிக்கொண்டு கப்பலேறி எபேசுபட்டினத்தை விட்டு,

௨௰௨ செசாரியாப் பட்டினத்திற்குப் போய்ப் பின்பு (எருசலேமுக்குப்) போய்ச் சபையாரின் சுகத்தை விசாரித்துக்கொண்டு, பின்பு அந்தியோகியா ஊருக்குச் சென்று,

௨௰௩ அங்கே சிலகாலஞ் சஞ்சரித்தப்பின்பு, புறப்பட்டுக் கலாத்தியா நாட்டிலேயும் பிரீஜியா நாட்டிலேயும் ஊர்கள்தோறுந் திரிந்து, சீஷரெல்லாரையுந் திடப்படுத்திக்கொண்டு வந்தான்.

௨௰௪ அக்காலத்திலே அலேக்குசந்திரி பட்டினத்திற் பிறந்தவனுமாய்ச், சாதுரியவானுமாய் வேதஎழுத்துக்களில் வல்லவனுமாயிருக்கிற அப்பொல்லோஸ் என்னும் பேர்கொண்ட ஒரு யூதன் எபேசுபட்டினத்திற்குப் போனான்.

௨௰௫ அவன் கர்த்தருடைய மார்க்கத்தைக் குறித்து உபதேசங் கேட்டு, யோவான் கொடுத்த ஸ்நானத்தைமாத்திரம் அறிந்தவனாயிருந்தும், கர்த்தாவுக்குரியவைகளை மிகுந்த சாக்கிரதையுள்ள மனதோடே பேசித் திட்டமாய்ப் போதகம்பண்ணிக்கொண்டு வந்தான்.

௨௰௬ செப ஆலயத்திலே தயிரியமாய்ப் பேசினான். ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் அவன் பேசுகிறதைக் கேட்டபொழுது, அவனைச் சேர்த்துக்கொண்டு, பராபரனுடைய மார்க்கத்தை யவனுக்கு அதிக திட்டமாய்க் காண்பித்தார்கள்.

௨௰௭ பின்பு அவன் அகாயா நாட்டிலே போகவேண்டுமென்றிருக்கையில், சீஷர்கள் அவனை யுபசாரஞ் செய்யும்படிக்குச் சகோதரர் அவர்களுக்கெழுதினார்கள்.

௨௰௮ அவன் அங்கே சேர்ந்தபின்பு, அவன் வெளியரங்கமாய் யூதர்களுடனே பலமாய்த் தருக்கம்பண்ணிக்கொண்டு, இயேசுவே கிறிஸ்து என்று வேதவாக்கியங்களாலே தெளிவாய்க் காண்பித்தபடியால் கிருபையினாலே விசுவாசிகளாயிருந்தவர்களுக்கு மிகுந்த உதவியாயிருந்தான்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) பவுல் எபேசிலே சிலருக்கு ஞானஸ்நானத்தைக் கொடுத்தபொழுது அவர்கள் மேல் தேவ ஆவியின் வரங்களைப் பெற்றதும், (௮) அவன் பின்னும் போதித்து அற்புதங்களைச் செய்ததும், (௰௩) ஸ்கேவாவின் மக்கள் பசாசுக்களாலே செயிக்கப்பட்டதும், (௰௭) தேவவசனம் வளர்ந்ததும் (௨௰௧) தெமேத்திரியென்பவனாலே கலகமுண்டானதும்.]

அப்பொல்லோவென்பவன் கொரிந்துபட்டினத்திலிருக்கையிற் பவுல் மேலான தேசங்களில் திரிந்துகொண்டு, எபேசுபட்டினத்திற்குப் போனபொழுது,

௨ சில சீஷரைக் கண்டு, நீங்கள் விசுவாசிகளானபொழுது, பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டீர்களாவென்றான். அதற்கவர்கள் பரிசுத்த ஆவியுண்டென்று நாங்கள் கேள்விப்படவுமில்லையென்றார்கள்.

௩ அப்பொழுது அவன் சொன்னது. அப்படியானால், எப்படிப்பட்ட ஞானஸ்நானம்பெற்றீர்களென்றான். அவர்கள் யோவான் கொடுத்த ஸ்நானத்தைப் பெற்றோமென்றார்கள்

௪ அப்பொழுது பவுல் சொன்னது. யோவான் தனக்குப்பின் வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கவேண்டுமென்று சனங்களுக்குச் சொல்லி, மனந்திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தைக் கொடுத்தானேயென்றான்.

௫ அதையவர்கள் கேட்டபொழுது அவர்கள் கர்த்தராகிய இயேசுவினுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம்பெற்றார்கள்.

௬ அல்லாமலும் பவுல் அவர்கள்மேலே கைகளை வைத்தபொழுது, பரிசுத்த ஆவியானவர் அவர்களிடத்திலே வந்தார். அவர்கள் அந்நியபாஷைகளைப் பேசித் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்.

௭ அந்த மனிதரெல்லாரும் ஏறக்குறைய பன்னிரண்டுபேராம்.

௮ பின்பு (பவுல்) செப ஆலயத்திற்குப் போய்த் தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, மூன்றுமாதமளவும் பராபரனுடைய இராச்சியத்திற்குரியவைகளைப் பேசித் தெளிவாய்க் காண்பித்துக்கொண்டு வந்தான்.

௯ சில கடினமான மனதுள்ளவர்களுமாய் அவிசுவாசிகளுமாயிருந்து, கூட்டத்திற்கு முன்பாக இந்த மார்க்கத்தை நிந்தித்தபொழுது, அவன் அவர்களை விட்டு விலகிச் சீஷரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு, திறன்னு என்பவனுடைய பள்ளிக்கூடத்திலே நாடோறுஞ் சம்பாஷித்துக்கொண்டு வந்தான்.

௰ இப்படி இரண்டுவருஷம் நடந்தது. அதினாலே ஆசியாவிலே குடியிருந்த யூதர்களும் கிரேக்கர் இவர்களெல்லாருங் கர்த்தராகிய இயேசுவைக்குறித்து வசனத்தைக் கேள்விப்பட்டார்கள்.

௰௧ அன்றியும் அதிசயமான அற்புதங்களைப் பராபரன் பவுலின் கைகளினாலே செய்துவருகையில்,

௰௨ அவனுடைய சரீரத்திலிருந்த வேர்வைச்சேலைகளையுங் கச்சைகளையும் வியாதியுள்ளவர்கள்மேல் வைத்தவுடனே, வியாதிகள் அவர்களைவிட்டு நீங்கிப்போயின. பொல்லாத ஆவிகளும் அவர்களிலிருந்து புறப்பட்டன.

௰௩ அப்பொழுது தேசாந்திரிகளாய்த் திரிகிற மந்திரவாதிகளாகிய யூதரிற் சிலர் பொல்லாத ஆவிகள் பிடித்திருந்தவர்கள் மேற் கர்த்தராகிய இயேசுவின்நாமத்தைச் சொல்லத்துணிந்து, பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின்பேரிலே உங்களுக்கு ஆணையிடுகிறோமென்றார்கள்.

௰௪ பிரதான ஆசாரியனாகிய இஸ்கேவா வென்னும் யூதனுடைய குமாரர் ஏழுபேர் களேயப்படிச்செய்தார்கள்

௰௫ அவர்களுக்குத் தர்வாகப் பொல்லாத ஆவிசொன்னதாவது. இயேசுவை யறிந்திருக்கிறேன். பவுலையும் அறிவேன். நீங்களியாரென்றுசொன்னவுடனே,

௰௬ பொல்லாத ஆவியையுடைய மனிதன் அவர்கள்மேற் பாய்ந்து, அவர்களைத் தனக்குட்படுத்திச்செயிக்க, அவர்கள் நிருவாணிகளாயுங் காயமபட்டவர்களாயும் அந்த வீட்டைவிட்டோடிப்போனார்கள்.

௰௭ அது எபேசிலேகுடியிருக்கிற யூதர் கிரேக்கரெல்லாருக்குந் தெரியவந்தபொழுது அவர்களெல்லாரும் பயமடைந்தார்கள். அல்லாமலுங் கர்த்தராகிய இயேசுவின்நாமம் அவர்களுக்குள்ளே மேன்மைப்பட்டது.

௰௮ அன்றியும்விசுவாசிகளானவர்களில் அநேகர்சேர்ந்து, தங்கள்செய்கைகளை வெளிப்படுத்தி, அறிக்கையிட்டார்கள்.

௰௯ அன்றியும் வீணவித்தைக்காரராயிருந்தவர்களில் அநேகர் தங்கள் புஸ்தகங்களைக்கொண்டுவந்து, எல்லார் முன்பாகவுஞ் சுட்டெரித்தார்கள்.

௨௰ அவைகளின்கிரயம் ஐம்பதினாயிரம் வெள்ளிக்காசென்று மதிக்கப்பட்டது. இவ்வளவு பலமாய்க்கர்த்தருடையவசனம்வளர்ந்து, வல்லமையைக்காண்பித்தது.

௨௧ இவைநிறைவேறினபின்பு பவுல் மக்கெதோனியா அகாயா என்னுந் தேசங்களின்வழியாய் எருசலேமுக்குப்போகும்படி மனதிலே யோசனைகொண்டு, நான் அங்கேயிருந்து, பின்பு உரோமை நகரியையும் பார்க்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு,

௨௨ தனக்கு உதவிசெய்தவர்களில் இரண்டுபேராகிய தீமோத்தேயுவையும் எரஸ்துவையும் மக்கெதோனியா நாட்டிற்கனுப்பித் தான் பின்னுஞ்சிலகாலம் ஆசியா நாட்டிலேயிருந்தான்.

௨௩ அக்காலத்திலேதானே இந்தமார்க்கத்தைக் குறித்து மிகுந்த கலகமுண்டாயிற்று.

௨௪ எப்படியென்றால், தெமேத்திரியென்னுநாமமுள்ள ஒருதட்டான் தியானாளின் தேவிக்காக வெள்ளியினாற் சிறுகோவில்களைச் செய்துகொண்டு, தொழிலாளிகளுக்கு மிகுந்த ஆதாயம்வருவித்துவந்தான்.

௨௫ அவர்களையும் அப்படிப்பட்ட தொழிலைச்செய்கிறமற்றவர்களையும் அவன் கூடிவரச்செய்து சொன்னதாவது மனிதர்களே! உங்களுக்குத்தெரிந்திருக்கிறபடி, இந்தத் தொழிலினாலே நமக்குவருமானம்வருகிறது.

௨௬ மேலும் நீங்கள் கண்டுங்கேட்டுமிருக்கிறபடி, இந்தப் பவுலென்பவன் கைகளாற் செய்யப்பட்டவைகள் தேவர்களல்லவென்றுசொல்லி, எபேசிலமாத்திரமல்ல கொஞ்சங்குறைய ஆசியா நாட்டிலெங்கும் அநேக சனங்களுக்குப் போதித்து, அவர்களைமாறுபாடாக்குகிறான்.

௨௭ அதினாலே நமமுடைய அலுவலகனமடைவதற்கேதுவாயிருக்கிறதுமல்லாமல் மகாதேவியாகிய தியானாளுடைய கோவில் எண்ணமற்றுப்போகிறதற்கும் ஆசியாதேசத்தாரெல்லாரும் பூசசகத்திலுள்ளயாவராலுஞ் சேவிக்கப்படுகிற அவளுடையமகிமை அழிந்துபோகிறதற்கும் ஏதுவுண்டாயிருக்கிறதென்றான்.

௨௮ அதையவர்கள் கேட்டு, மிகுந்த கோபமடைந்து, எபேசியருடைய தியானாளே பெரியவளென்று கூப்பிட்டுக் கொண்டார்கள்.

௨௯ பட்டினமுழுவதுங்கலக்கத்தினாலே நிரப்பப்பட்டது. மேலும் அவர்கள் பவுலுடனேகூடப் பிரயாணமாய்வந்த மக்கெதோனியராகிய காயுவையும் அரிஸ்தர்க்குவையும் இழுத்துக்கொண்டு ஒருமனப்பட்டு வேடிக்கைசாலைக்குப்பாய்ந்தோடினார்கள்.

௩௰ அப்பொழுது பவுல் கூட்டத்திற்போகமனதாயிருந்தான். சீஷர் அவனைப்போகவிடவில்லை.

௩௧ மேலும் வேடிக்கைசாலைக்குள் அவன் போகாமலிருக்கும்படி வேண்டிக்கொள்ளும்படிக்கு அவனுடைய சிநேகிதராகிய ஆசியாதேசத்தலைவரிற்சிலர் அவனிடத்திற்கு ஆள் அனுப்பினார்கள்.

௩௨ அன்றியுங்கூட்டங்கலக்கமுள்ளதாயிருக்க, அநேகர் தாங்கள் கூடிவந்தகாரணத்தையறியாதவர்களானபடியினாலே, சனங்கள் பலவிதமாய்க்கூக்குரலிட்டார்கள்.

௩௩ அப்பொழுது யூதர்கள் அலெக்சந்தரென்பவனை முன்னிறுத்தக், கூட்டத்திற்சிலர் அவனை முன்னே பிடித்தார்கள். அலெக்சந்தர் கையினாற் சைகைகாட்டிச் சனங்களுக்கு உத்தரவு சொல்லவிரும்பினான்.

௩௪ அவன் யூதனென்று அவர்கள் அறிந்தபொழுது எல்லாரும் ஏபேசியருடைய தியானாளே பெரியவளென்று இரண்டுமணி நேரமளவும் ஏகமாய்க் கூப்பிட்டுக்கொண்டார்கள்.

௩௫ பின்பு மணியக்காரனானவன் சனங்களைப் பேசாமலிருக்கும்படிசெய்து சொன்னதாவது. ஏபேசியரே, ஏபேசிப் பட்டினம் மகா தேவியாகிய தியானாளுக்கும் வானத்திலிருந்து விழுந்தசொரூபத்திற்குங் கோவில்பரிசாரியாயிருக்கிறதையறியாதவனுண்டோ.

௩௬ அது எதிர்பேசப்படாதகாரியமானபடியினாலே, நீங்கள் ஒன்றும் பதறிச்செய்யாமல், அமைந்திருக்கவேண்டும்.

௩௭ இந்தமனிதர் கோவிற்கொள்ளைக்காரரல்ல, உங்கள்தேவியைத் தூஷணித்தவர்களுமல்ல, இப்படியிருந்தும், இவர்களை யிங்கே கொண்டுவந்தீர்கள்.

௩௮ தெமேத்திரியுக்கும் அவனைச்சேர்ந்திருக்கிறதொழிற்காரருக்கும் ஒருவன்மேல் ஒருகாரியமுண்டாயிருந்தால், நியாயம் விசாரிக்கும்நாட்களுந் துரைகளுமிருக்கிறபடியினாலே, ஒருவருக்கொருவர் விரோதமான பிராது அங்கே பண்ணக்கடவர்கள்.

௩௯ நீங்கள்வேறொருகாரியத்தைவிசாரித்தால், அது நியாயசங்கத்திலே தீர்க்கப்படும்.

௪௰ இன்றைக்குண்டான கலகத்திற்காக நாம் உத்தரவுசொல்ல அழைக்கப்படுவதற்கு, ஏதுவுண்டாயிருக்கின்றது. இந்தக்கலகம் பண்ணுவதற்கு நிமித்தமில்லாதபடியால் நாம் அதைக்குறித்து உத்தரவுசொல்லத் திராணியில்லாதிருப்போமேயென்று சொல்லி,

௪௧ பின்பு கூட்டத்தை யனுப்பி விட்டான்.

## ௨௰. அதிகாரம்.

[(௧) பவுல்மக்கெதோனியாவுக்குப்போய்த் துரோவாவிலே பிரசங்கம்பண்ணி, (௯) ஐத்திகுசென்பவனை உயிரோடெழுந்திருக்கச் செய்த்தும், (௰௭) மிலேத்துவிலே அவன் ஏபேசுச்சபையாரின் மூப்பர்களையழைத்து அன்பாயப் புத்திகளைச்சொன்னதும்.]

கலகம் அமைந்தபின்பு பவுல் சீஷரைத் தன்னிடத்தில் அழைத்து, உத்தரவுவாங்கிக்கொண்டு, மக்கெதோனியாவுக்குப்போகப் புறப்பட்டுப்போய், அந்தப்புறங்களில் திரிந்துகொண்டு,

௨ சீஷர்களுக்கு அநேக வார்த்தைகளினாற் புத்திசொல்லிக்கொண்டு, கிரேக்கை தேசத்திலே சேர்ந்தான்.

௩ அங்கே மூன்றுமாதஞ் சஞ்சரித்தபின்பு, அவன் கப்பலேறிச் சீரியா நாட்டிற்குப் போக மனதாயிருந்தபொழுது, யூதர்கள் அவனுக்குத் தீமைசெய்ய இரகசியமாய் யோசனைகொண்டிருந்த படியால் மக்கெதோனியாநாட்டின் வழியாய்த் திரும்பிப் போகத்தீர்மானம்பண்ணினான்.

௪ அப்பொழுது ஆசியாத்தேசமட்டும் அவனோடே கூடப்போனவர்கள். பெரோயா ஊரானாகிய சொபத்தர் தெசலோனிக்கேயரில் அரிஸ்தர்க்கு, செக்குந்து, தெருபையூரானாகிய காயு, தீமோத்தேயு, ஆசியத்தேசத்தாராகிய தீக்கிக்கு, துரோப்பீமு, இவர்களே.

௫ அவர்கள் முன்னுக்குப்போய்த் துரோவாப்பட்டினத்திலே நாங்கள்வரும்படிகாத்திருந்தார்கள்.

௬ நாங்கள் புளியாத அப்பப்பண்டிகை நாட்களுக்குப்பின்பு, கப்பலேறிப்பிலிப்புப் பட்டினத்தைவிட்டு ஐந்துநாளைக்குள்ளே துரோவாப்பட்டினத்திலே அவர்களிடத்திற் சேர்ந்து, அங்கேஏழுநாள்சஞ்சரித்தோம்.

௭ அப்பொழுது வாரத்தின்முதல்நாளிலே சீஷர் அப்பம்பிட்கும்படிக்குக் கூடிவந்திருக்கையில், பவுல் மறுநாளிலே புறப்படவேண்டுமென்றிருந்து, அவர்களுடனே பேசிக்கொண்டு, பாதிராத்திரியளவும் பிரசங்கத்தை நீடித்துப்பேசினான்.

௮ நாங்கள் கூடியிருந்த மெத்தைவீட்டிலே அநேக விளக்குகள் வைக்கப்பட்டிருந்தன.

௯ அப்பொழுது ஐத்திகுவென்று பேர்கொண்ட ஒருவாலிபன் சாளரவாசலிலுட்கார்ந்திருந்து, பவுல்மிகுந்தகாலம் பேசிக்கொண்டுவருகையிற், கண்தூக்கம் அடைந்து, நித்திரையாற்செயிக்கப்பட்டுச்சாய்ந்து, மூன்றும்மெத்தையிலிருந்து தாழவிழுந்து, மரித்தவனாய் எடுக்கப்பட்டான்.

௰ உடனே பவுல் இறங்கிப்போய், அவன்மேலே விழுந்து, அணைத்துக்கொண்டு, பின்பு உயிர் இவனுக்குள்ளிருக்கின்றதாகையாற்கலக்கப்படாதிருங்களென்றுசொல்லி,

௰௧ பின்பு ஏறிப்போய், அப்பம் பிட்டுப் போசித்து, மிகுந்தநேரம்விடியற்காலமளவும்பேசிக்கொண்டு, பின்பு புறப்பட்டான்.

௰௨ அந்தவாலிபனை அவர்கள் உயிருள்ளவனாக அழைத்துவந்து, மிகவும் ஆறுதலடைந்தார்கள்.

௰௩ பவுல் (அசு பட்டினம் வரைக்குந்) தான்கால்நடக்கவிரும்பி, நாங்கள் முன்னாலேகப்பலேறி, அவ்விடத்திற்குப்போய், அங்கேதன்னை ஏற்றிக் கொள்ளும்படி எங்களுக்குத் தர்வுகொடுத்தபடியினாலே

றைப் பார்த்திருக்கிறாய். அவர்களெல்லாரும் நியாயப்பிரமாணத்துக்காக வயிராக்கியமுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

௨௧ நீ புறஜாதிகளுக்குள்ளே யிருக்கிற யூதரெல்லாரும் (தங்கள்) பிள்ளைகளை விருத்தசேதனம்பண்ணவும் மற்ற முறைமைகளின்படியே நடக்கவும் வேண்டுவதில்லையென்று சொல்லி, இவ்விதமாய் அவர்கள் மோசேயை விட்டுவிலகும்படி உபதேசிக்கிறாயென்று அவர்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.

௨௨ இப்பொழுது என்ன செய்யலாம்? நீ வந்ததை அவர்கள் கேள்விப்பட்டு, மெய்யாய்க் கூட்டங்கூடுவார்கள்.

௨௩ ஆகையால் நாங்கள் உனக்குச் சொல்லுகிறபடி, நீ செய்யவேண்டும். என்னவென்றால், நாலு பேர் பிரார்த்தனைபண்ணிக்கொண்டு, எங்களிடத்திலிருக்கிறார்கள்.

௨௪ அவர்களை நீ சேர்த்து, அவர்களுடனே கூடச் சுத்திபண்ணிக்கொண்டு, அவர்கள் சிரசு சவரம்பண்ணுவதற்கு வேண்டிய செலவுபண்ணுவாயாக. அப்படிச் செய்தால் எல்லாருந் தங்களுக்கு உன்னைக்குறித்து அறிவிக்கப்பட்டதொன்றுமில்லையென்றும், நீதானே நியாயப்பிரமாணத்தைக் கைக்கொண்டு நடக்கிறவனென்றும், அறிவார்கள்.

௨௫ விசுவாசிகளான புறஜாதியார் இப்படிப்பட்டவைகளைக் கைக்கொள்ளாமல் விக்கிரகங்களுக்குப் படைத்ததற்கும், இரத்தத்திற்கும், நெருக்குண்டு செத்ததற்கும், வேசைத்தனத்திற்கும், மாத்திரம் விலகியிருக்கவேண்டுமென்று நாங்கள் தீர்மானம்பண்ணி, அவர்களுக்கெழுதியனுப்பினோமே யென்றார்கள்.

௨௬ அப்பொழுது பவுல் அந்த மனிதரைச் சேர்த்துக்கொண்டு, மறுநாளிலே யவர்களுடனே கூடச் சுத்தம்பண்ணி, பின்பு தேவாலயத்திலே பிரவேசித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காக வேண்டிய பலி செலுத்தப்படுமளவும் சுத்தமாகுதற்கேற்ற நாட்களை நிறைவேற்றுவேனென்று அறிவித்தான்.

௨௭ அதற்கேற்ற ஏழுநாளும் நிறைவேறி வருகையில், ஆசியா தேசத்திலிருந்து வந்த யூதர்கள் தேவாலயத்திலே யவனைக்கண்டு கூட்டமெல்லாங் கூடிவர அழைத்து,

௨௮ அவன்மேற் கைகளைப்போட்டு, ஓ இஸ்ரவேலரே! உதவிசெய்யுங்கள். இவனே நம்முடைய சனத்திற்கும் வேதப்பிரமாணத்திற்கும், இந்தஸ்தலத்திற்கும், விரோதமாக எங்கும் எல்லாருக்கும் போதித்துவருகிறான். அதுவுமல்லாமல், இந்தத் தேவாலயத்திலே கிரேக்கரையும் அழைத்துவந்து இந்தப் பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினானென்று கூப்பிட்டார்கள்.

௨௯ முன்பு எபேசியனாகிய திரொப்பீமு வைப் பட்டினத்திலே அவனுடனே கூட விருக்கக்கண்டிருந்து, பின்பு பவுல் அவனைத் தேவாலயத்திலே அழைத்துவந்தானென்று நினைத்தபடியினாலே அப்படிச் சொன்னார்கள்.

௩௰ அப்பொழுது நகரமுழுவதுங் கலக்கப்பட்டது. மேலும் சனங்கள் கூட்டமாய் ஓடிவந்து, பவுலைப்பிடித்து அவனைத் தேவாலயத்திற்குப் புறம்பே யிழுத்தார்கள். உடனே, வாசல்கள் பூட்டப்பட்டன.

௩௧ மேலும் அவர்கள் அவனைக் கொலை செய்யவகைதேடுகையில், எருசலேம் முழுவதுங் கலக்கமடைந்திருக்கிறதென்று போர்ச்சேவகரின் சேனாபதி கேள்விப்பட்டு,

௩௨ உடனே போர்ச்சேவகரையும் அவர்களுடைய தலைவரையுஞ் சேர்த்துக்கொண்டு, அவர்களிடத்திற்கு ஓடினான். சேனாபதியையும் போர்ச்சேவகரையும் அவர்கள் கண்டபொழுது பவுலையடிப்பதைவிட்டார்கள்

௩௩ அப்பொழுது, சேனாபதி சேர்ந்து அவனைப்பிடித்து இரண்டு சங்கிலிகளினாலே கட்டும்படி சொல்லி இவன் யாவனென்றும் என்ன செய்தானென்றும் விசாரித்தான்.

௩௪ அதற்குச் சனங்கள் பலவிதமாயக் கூப்பிட்டார்கள். அப்பொழுது கலகத்தினாலேயவன் நிச்சயத்தையறியக்கூடாதிருந்தபடியால் அவனைக் கோட்டைக்குக்கொண்டுபோகச் சொன்னான்.

௩௫ அவன் படிகள்மேலேறினபொழுது, கூட்டம் பின்சென்று அவனைக் கொலைசெய்யுமென்று கூப்பிட்டுக்கொண்டு,

௩௬ உக்கிரமாயிருந்தபடியினாலே சேவகர் அவனைத் தூக்கியெடுத்துக்கொண்டு போனார்கள்.

௩௭ அவர்கள் பவுலைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோக எத்தனமாயிருக்கையில் அவன் சேனாபதியை நோக்கி நான் உம்முடனே ஒருவார்த்தை பேசலாமா என்றான். அதற்கவன் சொன்னது கிரேக்கைப்பாஷையுனக்குத் தெரியுமா.

௩௮ இந்தக் காலத்திற்கு முன்னே கலகமுண்டாக்கி நாலாயிரங் கொலையாதகரை வனாந்தரத்திலே கொண்டுபோன எகிப்தியனல்லவா நீ யல்லவாவென்றான்.

௩௯ பவுல் சொன்னது, நான் கிலீக்கியா நாட்டிலுள்ள கீர்த்தியடைந்திருக்கிற தருசுப்பட்டினத்தானாகிய யூதன் நான் சனங்களுடனே பேசும்படி, எனக்குத் தர்வு கொடுக்கவேண்டுமென்று உம்மைவேண்டிக்கொள்ளுகிறேனென்றான்.

௪௰ அவனுக்குத் தர்வு கொடுத்தபின்பு பவுல் படிகளின்மேல் நின்று கையினாலே சனங்களுக்குச் சமிக்கைகாட்டினான். மிகுந்

த அமைந்துண்டானபொழுது அவன் எபிரேயபாஷையிலே சொல்லத்தொடங்கிச் சொன்னதாவது.

## ௨௨. அதிகாரம்.

[(௧) பவுல் தான் மனந்திரும்பினதைக் குறித்து ஜனங்களுக்கு அறிவிக்கிறதும், (௨௨) அவர்கள் கலகம்பண்ணினதும்.]

௧ சகோதரர்களே, பிதாக்களே, உங்களுக்கு நான் இப்பொழுது சொல்லும் உத்தரவுக்குச் செவிகொடுப்பீர்களாக வென்று சொன்னபொழுது,

௨ எபிரேயபாஷையிலே தங்களுடனே பேசுகிறதை அவர்கள் கேட்டு அதிக அமைதலாயிருந்தார்கள். அவன் பின்னும் சொன்னதாவது,

௩ நான் யூதன். கிலிக்கியா நாட்டிலுள்ள தர்சுபட்டணத்திலே நான் பிறந்தேன், பின்பு இந்த நகரத்திலே கமாலியேலின் பாதத்தினிடத்தில் வளர்ந்து முன்னோர்களுடைய வேதப்பிரமாணத்தின்படியே கண்டிப்பாய்ப் போதிக்கப்பட்டு இன்றைத்தினம் நீங்களெல்லாரும் இருக்கிறதுபோல பரமனைக் குறித்து வைராக்கியமுள்ளவனாயிருந்து,

௪ இந்த மார்க்கத்தாரை மரணபரியந்தம் துன்பப்படுத்தி, புருஷரையும் ஸ்திரீகளையும் கட்டிச் சிறைச்சாலைகளுக்கு கொண்டுபோய்க் கொடுத்து வந்தேன்.

௫ அதற்குப் பிரதான ஆசாரியரும் மூப்பர்களனைவரும் சாட்சிகொடுப்பார்கள். அவர்கள் கையிலே நான் சகோதரருக்கு நிருபங்களை வாங்கிக்கொண்டு தமஸ்குவூரிலிருக்கிறவர்களும் ஆக்கினைக்குள்ளாக்கப்படுவதற்கு அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டுவரும்படி அவ்விடத்திற்குப் போனேன்.

௬ அப்படி நான் பிரயாணப்பட்டுத் தமஸ்குவூருக்குச் சமீபமானபொழுது மத்தியானவேளையிலே சடுதியாய் வானத்திலிருந்து மிகுந்த ஒளியுண்டாகி என்னைச் சுற்றிப்பிரகாசித்தது.

௭ உடனே நான் தரையிலே விழுந்து சவுலே சவுலே என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய் என்று என்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்டேன்.

௮ அதற்கு நான் ஆண்டவரே நீர் யார் என்றேன். அவர் என்னுடனே சொன்னது. நீ துன்பப்படுத்துகிற நாசரேத்தூரானாகிய இயேசுவே நான் என்றார்.

௯ என்னுடனே கூடவிருந்தவர்கள் அந்த ஒளியைக் கண்டு பயமடைந்தார்கள். என்னுடனே பேசினவருடைய சத்தத்தை அவர்கள் கேட்கவில்லை.

௰ பின்னும் நான் ஆண்டவரே நான் என்ன செய்யவேண்டும் என்றேன். அதற்குக் கர்த்தர் சொன்னது. நீ எழுந்து தமஸ்குவூருக்குப் போ நீ செய்யும்படிக் குறிக்கப்பட்டவையாவும் அங்கே உனக்குச் சொல்லப்படுமென்றார்.

௰௧ பின்பு அந்த ஒளியின் மகிமையினாலே பார்வையற்றுப்போனபடியால் என்னோடிருந்தவர்களால் கைலாகு கொடுத்தழைக்கப்பட்டுப் போய்த் தமஸ்குவூரிற் சேர்ந்தேன்.

௰௨ அப்பொழுது வேதப்பிரமாணத்தின்படியே பக்தியுள்ளவனுமாய் அங்கே குடியிருக்கிற சகல யூதராலும் நல்லவனென்று நற்சாட்சிபெற்றவனுமாயிருக்கிற அனனியா வென்னும் ஒருவன் என்னிடத்தில் வந்து நின்று,

௰௩ என்னை நோக்கிச் சகோதரனாகிய சவுலே பார்வையடைவாயாக வென்றான். அந்நேரமே நான் அவனை நோக்கிப்பார்த்தேன்.

௰௪ பின்பு அவன் சொன்னது. நீ கண்டு கேட்டவைகளைக் குறித்துச் சகல மனிதருக்கும் சாட்சிகொடுக்கிறவனாயிருக்கும்படிக்கு,

௰௫ நம்முடைய முன்னோர்களின் தேவன் உன்னை முன்குறித்திருந்து தம்முடைய சித்தத்தை நீ அறியவும் நீதிபரரைக் காணவும் அவருடைய திருவாயின் சத்தத்தைக் கேட்கவும் பண்ணினார்.

௰௬ இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன நீ எழுந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு ஞானஸ்நானம்பெற்று உன் பாவங்களை நீக்குவாயாகவென்றான்.

௰௭ பின்பு நான் எருசலேமுக்குத் திரும்பவந்து தேவாலயத்திலே செபம்பண்ணிக்கொண்டிருக்கையில் நான் ஞானதிருஷ்டியடைந்து அவரைத் தரிசித்தேன்.

௰௮ அவர் என்னுடனே நீ என்னைக் குறித்துச் சொல்லுஞ் சாட்சியை இவர்கள் ஏற்றுக்கொள்ளாமலிருப்பதால் நீ தாமதப்படாமற் சீக்கிரமாய் எருசலேமை விட்டுப் போவென்றார்.

௰௯ அப்பொழுது நான் சொன்னது. ஆண்டவரே உம்மை விசுவாசித்தவர்களை நான் காவலில் வைத்துச் செப ஆலயங்களிலே யவர்களையடிப்பித்திருந்ததையும்,

௨௰ உமக்குச் சாட்சியாகிய இஸ்தேவானுடைய இரத்தஞ் சிந்தப்பட்டபொழுது நானும் அருகே நின்று அவனைக் கொலைசெய்வதற்குச் சம்மதித்து அவனைக் கொலைசெய்தவர்களின் வஸ்திரங்களைக் காத்துக்கொண்டதையும் இவர்கள் அறிந்திருக்கிறார்களேயென்றேன்.

௨௰௧ அவர் சொன்னது நான் உன்னைத் தூரமாயப் புறத்தேசத்தாரிடத்திற்கு அனுப்புவேன். ஆதலால் நீ போவென்று சொன்னார்.

௨௨ இந்தவார்த்தைவரைக்கும் அவர்கள் அவனுக்குச் செவிகொடுத்து இப்படிப்பட்டவனைப் பூமியிலிருந்து அகற்றவேண்டும். இவன் உயிரோடிருக்கிறது நியாயமல்லவென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டார்கள்.

௨௩ இப்படியவர்கள் கூக்குரலிட்டுத் தங்கள் வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டு ஆகாசத்திலே புழுதி தூற்றிக்கொண்டு வருகையில்,

௨௪ சேனாதிபதி அவனைக் கோட்டைக்குள்ளே கொண்டுவரும்படி கட்டளையிட்டு பின்பு அவர்கள் அவன்மேல் இப்படிக் கூக்குரலிட்டதற்குக் காரணத்தையறியும்படிக்கு அவனைச் சவுக்காலேயடித்து விசாரிக்கச் சொன்னான்.

௨௫ அந்தப்படியவர்கள் அவனை வார்களினாலே கட்டுகையில் பவுலு சமீபமாய் நின்ற படைத்தலைவனை நோக்கி உரோமனுமாய் நியாயமாய் ஆக்கினைக்குட்படாதவனுமாயிருக்கிற மனிதனை நீங்கள் அடிக்கிறது நியாயமா என்றான்.

௨௬ தலைவன் அதைக்கேட்டு சேனாதிபதியினிடத்திற்குப்போய் அந்த மனிதன் உரோமன். ஆதலால் நீர் செய்வதைக்குறித்துச் சாவதானமாயிருக்கவேண்டுமென்று அறிவித்தான்.

௨௭ அப்பொழுது சேனாதிபதி பவுலுவினிடத்தில் வந்து நீ உரோமனா எனக்குச் சொல்லென்றான். அதற்கவன் அப்படித்தானென்றான்.

௨௮ சேனாதிபதி சொன்னது. நான் மிகுந்த திரவியத்தினாலே இந்த மேன்மையைச் சம்பாதித்தேனென்றான். அதற்குப் பவுல் சொன்னது. நான் அப்படிப்பட்டவனாகப் பிறந்தேனென்றான்.

௨௯ ஆதலால் அவனையடித்து விசாரிக்கும்படி எத்தனமாயிருந்தவர்கள் உடனே அவனைவிட்டார்கள். மேலும் சேனாதிபதி அவன் உரோமனென்றறிந்து தான் அவனைக் கட்டினதினாலே பயந்தான்.

௩௰ மறுநாளிலே பவுலு யூதரால் ஏற்படுத்தப்பட்ட குற்றமின்னதென்று அவன் நிச்சயத்தையறியமனதாய் அவனுடைய கட்டவிழ்க்கும்படிசெய்து பிரதான ஆசாரியரையும் அவர்களுடைய பெரிய சங்கத்தாரெல்லாரையுங் கூடிவரும்படி கட்டளையிட்டு பின்பு பவுலுவைத் தாழக்கொண்டுபோய் அவர்களுக்குமுன் நிறுத்தினான்.

## ௨௩. அதிகாரம்

[(௧) பவுலு சேனாதிபதிக்குமுன்பாக யூதர்களுக்கு மாறுத்தரவு சொன்னதும், (௭) அவர்களுக்குள்ளே பிரிவினையுங் கலகமும் உண்டானதும், (௰௨) சிலர் அவனைக் கொலைசெய்யும்படி சபதம் பண்ணினதும், (௰௬) பவுலுவின் மருமகன் அதைச் சேனாதிபதியினிடத்திற்குப் போய் அறிவித்ததும், (௨௩) சேனாதிபதி பவுலுவைப் பெரியதனையாகிய பெலிக்ஸினிடத்திற்கு அனுப்பினதும்.]

அப்பொழுது பவுலு பெரியசங்கத்தாரை நோக்கிச் சொன்னதாவது. சகோதரர்களே இந்நாள்வரைக்கும் என் மனது எனக்கு எவ்விதத்தாலும் நற்சாட்சிகொடுக்கத் தக்கதாய்ப் பராபரனுக்குமுன்பாக நடந்து வந்தேனென்று சொன்னபொழுது,

௨ பிரதான ஆசாரியனாகிய அனனியா அவனுக்குச் சமீபமாய் நின்றவர்களை நோக்கி இவனை வாயிலேயடியுங்களென்று கட்டளையிட்டான்.

௩ அப்பொழுது பவுலு அவனுடனே சொன்னது. சாந்துபூசப்பட்ட சுவரே. பராபரன் உம்மையடிப்பார். நியாயப்பிரமாணத்தின்படியெனக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படியுட்கார்ந்திருக்கிற நீர் நியாயப்பிரமாணத்துக்கு விபரீதமாய் என்னையடிக்கச் சொல்லலாமா என்றான்.

௪ சமீபத்திலே நின்றவர்கள் சொன்னது. பராபரனுடைய பிரதான ஆசாரியனையா வைகிறாய் என்றார்கள்.

௫ அதற்குப் பவுலு சொன்னது. சகோதரரே இவன் பிரதான ஆசாரியனென்று நான் நினைக்கவில்லை. உன் சனத்தின் தலைவனைக் குறித்துத் தீதுசொல்லாதிருப்பாயாகவென்றெழுதியிருக்கிறதே யென்றான்.

௬ பின்பு அவர்களில் ஒரு பங்கு சதுசேயரென்றும் ஒரு பங்கு பரிசேயரென்றும் பவுலு அறிந்து மிகுந்த சத்தத்தோடே சங்கத்தாருக்குள்ளே கூப்பிட்டுச் சொன்னதாவது. சகோதரர்களே நான் பரிசேயனுமாய் ஒரு பரிசேயனுடைய மகனுமாயிருக்கிறேன். நித்தியசீவனுக்கேற்ற நம்பிக்கையைக் குறித்தும் மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக் குறித்தும் நான் நியாயத்தீர்ப்படையும்படியிருக்கிறேனென்று சொன்னபொழுது,

௭ சதுசேயர் உயிரோடெழுந்திருக்குதலில்லை. தூதனும் ஆவியுமில்லையென்று சொல்லுகிறபடியினாலும் பரிசேயர் அவ்விரண்டையுமுண்டென்று அறிக்கைபண்ணுகிறபடியினாலும்,

௮ பரிசேயருக்குஞ் சதுசேயருக்கும் வாக்குவாதமுண்டாயிற்று. கூட்டமும் பிரிவினையடைந்தது.

௯ மிகுந்த கூக்குரலுண்டாயிற்று. அப்பொழுது பரிசேயரைச் சேர்ந்த வேதபாரகர் எழுந்து மிகவும் விரோதமாய்ப் பேசி இந்த மனிதனிடத்தில் ஒரு பொல்லாங்கையுங் காணோம். ஒரு ஆவி அல்லது ஒரு தூதன் இவனுடனே பேசினதுண்டானால் (அதினாலென்ன) என்றார்கள்.

தாவியினாலாவது எங்களிடத்திலிருந்து வந்ததாகக் காட்டுகிற நிருபத்தினாலாவது நீங்கள் சீக்கிரமாய் உங்கள் மனதிலே அசைவுபடாமலும் கலங்காமலுமிருப்பீர்களாக.

௩ உங்களை எந்தவிதத்திலும் ஒருவனும் எவ்விதத்தினாலும் இடங்கொடாதிருங்கள். ஏனென்றால், அந்தநாள் வருகிறதற்குமுன்னே, சுவிசேஷத்தைவிட்டு விலகுதலுண்டாகவேண்டும். அல்லாமலும் கேட்டின்மகனாகிய பாவமனிதனும் வெளிப்படவேண்டும்.

௪ அவன் தேவனென்னப்பட்ட யாவர்க்கும் தேவ ஆராதனையடைகிறயாவர்க்கும் விரோதமாய்த் தன்னையுயர்த்தி இப்படிப்பராபரனுடைய ஆலயத்திலே தேவன்போல உட்கார்ந்து, தானே தேவனென்று தன்னைக் காண்பிப்பான்.

௫ நான் உங்களிடத்திலிருந்தபொழுது இவைகளையுங்களுக்குச் சொன்னேனென்று உங்களுக்கு ஞாபகமில்லையா.

௬ அவன் தனது காலத்திலே வெளியாகும்படிக்கும், இப்பொழுது அவனுக்குத் தடையாயிருக்கிறதின்னதென்றும் அறிந்திருக்கிறீர்கள்.

௭ அக்கிரமமுள்ள அந்த இரகசியம் இப்பொழுதே கிரியை செய்கின்றது. இக்காலத்தில (அதற்கு) தடையாயிருக்கிறவன் நீக்கப்படுவதுமாத்திரம்வேண்டும்.

௮ அப்பொழுது அந்த அக்கிரமக்காரன் வெளிப்படுவான். அவனைக் கர்த்தராகிய இயேசு தம்முடைய வாயின் சுவாசத்தினாலே அழித்துத் தமது வருகையின் பிரகாசத்தினாலே நாசம்பண்ணுவார்.

௯ அவன் எப்படித் தோன்றுவானென்றால், சாத்தானுடைய நடத்தையின்விதமாய்ப் பொய்யான அற்புதங்களோடும் அடையாளங்களோடும் மிகுந்த வல்லமையோடும்,

௰ அநீதியினாலுண்டாகும் எல்லாவித வஞ்சகத்தோடுங் கெட்டுப்போகிறவர்களுக்குள்ளே தோன்றுவான். இரட்சிக்கப்படும்படிக்கேதுவான சத்தியத்தின்மேலுள்ள அன்பை அவர்கள் தரித்துக்கொள்ளாமலிருப்பதால் அப்படி நடக்கும்.

௰௧ அதினாலே சத்தியத்தை நம்பாமல் அநீதியில் பிரியமானயாவரும் ஆக்கினைக்குள்ளாக்கப்படும்படிக்கு,

௰௨ அவர்கள் பொய்யானதை நம்புதற்கேதுவாக வஞ்சகத்தை நடப்பிக்கிறதைப் பராபரன் அவர்களுக்கு அனுப்புவார்.

௰௩ கர்த்தராலே அன்புகூரப்பட்ட சகோதரராகிய நீங்கள் ஆவியினால் பரிசுத்தமாக்கப்படுகிறதினாலும் சத்தியத்தை விசுவாசிக்கிறதினாலும் இரட்சிப்படையும்படிக்கு ஆதிமுதற் பராபரன் உங்களைத் தெரிந்துகொண்டபடியினாலே, நாங்கள் உங்களைக்குறித்து எப்பொழுதும் பராபரனைத் தோத்திரிக்கக்கடனாளிகளாயிருக்கிறோம்.

௰௪ நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் மகிமையையடையும்பொருட்டாக எங்கள் சுவிசேஷத்தினாலே அந்த இரட்சிப்புக்கு அவர் உங்களை அழைத்தார்.

௰௫ ஆனபடியினாலே சகோதரரே! நீங்கள் நிலைகொண்டு, எங்கள் வார்த்தையினாலாவது நிருபத்தினாலாவது நாங்கள் உங்களுக்கு உபதேசித்த முறைமைகளைப் பற்றிக்கொள்வீர்களாக.

௰௬ நம்மிடத்தில் அன்புகூர்ந்து, நித்திய ஆறுதலையும் நல்ல நம்பிக்கையையுங் கிருபையாய் நமக்குக் கொடுத்திருக்கிற நம்முடைய பிதாவாகிய பராபரனும் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும் உங்களிருதயங்களுக்கு ஆறுதல்செய்து,

௰௭ எல்லாவித நல்வசனத்திலும் நற்கிரியையிலும் உங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ௩. அதிகாரம்.

[(௧) தனக்காகச் செபம்பண்ணவேண்டுமென்றும், (௬) ஒழுங்கில்லாதவிதமாய் நடக்கிறவர்கள் இப்படிச்செய்யவேண்டுமென்றும் புத்திசொல்லியது.]

சகோதரரே! கடைசியிலே உங்களிடத்திலே நடக்கிறதுபோலக் கர்த்தருடைய வசனம் ஓடி மகிமைப்படும்படிக்கும்,

௨ துர்க்குணராகிய பொல்லாத மனிதர் கையினின்று நாங்கள் இழுக்கப்படும்படிக்கும், எங்களுக்காக விண்ணப்பம்பண்ணுவீர்களாக. விசுவாசம் எல்லாரிடத்திலுமில்லையே.

௩ கர்த்தரோ உண்மையுள்ளவர். அவர் உங்களை ஸ்திரப்படுத்தி, பொல்லாங்கனுக்கு விலக்கிக்காத்துக்கொள்வார்.

௪ மேலும் நாங்கள் உங்களுக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்கிறீர்களென்றும் இனிமேலுஞ் செய்வீர்களென்றும் உங்களைக்குறித்துக் கர்த்தரிடத்தில் நம்பிக்கையாயிருக்கிறோம்.

௫ கர்த்தர் உங்களிருதயங்களைப் பராபரனுடைய அன்புக்குங் கிறிஸ்துவின் பொறுமைக்கும் நேராக நடத்தக்கடவர்.

௬ பின்னுஞ் சகோதரரே, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே நாங்கள் உங்களுக்குக் கட்டளையிடுகிறதென்னவெனில், நீங்கள் எங்களிடத்திற் கேட்டு ஏற்றுக்கொண்ட முறைமையின்படி நடவாமல், ஒழுங்கில்லாமையாய் நடக்கிற எந்தச் சகோதரனையும் விட்டுவிலகவேண்டும்.

௭ எங்களை இன்னவின்னவிதமாய்ப் பின்பற்றவேண்டுமென்று நீங்கள் அறிந்திருக்க

கிறீர்களே. நாங்கள் உங்களுக்குள்ளே ஒழுங்கில்லாமையாய் நடவாமல்,

௮ ஒருவனுடைய அப்பத்தையுங் கைமாறில்லாமற் சாப்பிடாமல், உங்களில் ஒருவனுக்கும் பாரமாயிராதபடிக்கு, இரவும் பகலும் பிரயாசத்தோடும் வருத்தத்தோடும் வேலைசெய்து சாப்பிட்டோம்.

௯ அப்படிப் பார்த்தை வைப்பதற்கான அதிகாரம் எங்களுக்கில்லையென்றல்ல, நீங்கள் எங்களைப் பின்பற்றும்படிக்கான திருட்டாந்தமாக எங்களை உங்களுக்குக் காண்பிக்க மனதாயிருந்தபடியினாலே அப்படிச் செய்தோம்.

௰ ஒருவன் வேலைசெய்ய மனதில்லாதிருந்தால், அவன் சாப்பிடவுங் கூடாதென்று நாங்கள் உங்களிடத்திலிருந்தபொழுது உங்களுக்குக் கட்டளையிட்டோம்.

௰௧ இப்பொழுது உங்களிற் சிலர் வேலையொன்றுஞ் செய்யாமல் வீணலுவலாய் நடந்து, ஒழுங்கில்லாமையாய்த் திரிகிறார்களென்று கேள்விப்படுகிறோம்.

௰௨ இப்படிப்பட்டவர்கள் அமைதலோடே வேலைசெய்து தங்கள் அன்னத்தைச் சாப்பிடவேண்டுமென்று நமமுடைய கர்த்தரா-

கிய இயேசுகிறிஸ்துவினாலே பவர்களுக்குப் புத்தியாகக் கட்டளையிடுகிறோம்.

௰௩ சகோதரரே, நீங்கள் நன்மைசெய்கிறதிலே இளைப்படையாமலிருப்பீர்களாக.

௰௪ மேலும் ஒருவன் இந்த நிருபத்தின்படி யெங்கள் வசனத்திற்குக் கீழ்ப்படியாமற் போனால், அவனைக் குறித்துக் கொண்டு அவன் வெட்கப்படும்படிக்கு அவனுடனே கலவாதிருப்பீர்களாக.

௰௫ அப்பொழுதும் அவனைச் சத்துருவைப்போல எண்ணாமல், சகோதரனென்றெண்ணி அவனுக்குப் புத்திசொல்லுங்கள்.

௰௬ சமாதானத்தின் கர்த்தர் எப்பொழுதுஞ் சகல விதத்திலும் உங்களுக்குச் சமாதானத்தை யனுக்கிரகிக்கக்கடவர். கர்த்தர் உங்களெல்லாரோடுங்கூடவிருப்பாராக.

௰௭ பவுலாகிய நான் என் கையெழுத்தோடே வாழ்த்துதலை யெழுதினேன். நிருபங்கள்தோறும் இதுவே அடையாளம். அப்படியெழுதுகிறேன்.

௰௮ நமமுடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபை உங்களனைவரோடுங் கூடவிருக்கக்கடவது. ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

தீமோத்தேயு என்பவனுக்கெழுதின

# முதலாம் நிருபம்.

## ௧. அதிகாரம்.

[(௧) பவுல் தீமோத்தேயுவை வாழ்த்தி, (௩) தான் முன்னே அவனுக்குக் கொடுத்த கட்டளையை ஞாபகப்படுத்தி, (௫) நியாயப்பிரமாணத்தின் பொருளைக் காட்டி, (௰௨) தனக்குக் கர்த்தர் செய்த இரக்கத்தைப் புகழ்ந்தது.]

நம்முடைய இரட்சகராயிருக்கிற பராபரனும் நமது நம்பிக்கைக்குரித்தான கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுங் கொடுத்த கட்டளையினாலே இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கிற பவுலு.

௨ விசுவாசத்தினாலே உத்தமகுமாரனாகிய தீமோத்தேயுக்கு எழுதுகிறதாவது, நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலுங் கிருபையும் இரக்கமுஞ் சமாதானமுமுண்டாகக்கடவது.

௩ வேற்றுமையாய்ப் போதகம் பண்ணாதபடிக்கும் விசுவாசத்தினால் வருகிற தேவபக்திய எழுப்புதலையல்ல, தருக்கங்களையுண்டாக்குகிற முடியாத வமிச அட்டவணைகளையுங் கட்டுக்கதைகளையும் பற்றிக்கொள்ளாதபடிக்கும் நீ சிலருக்குக் கட்டளையிடும்பொருட்டாக,

௪ நான் மக்கெதோனியாவுக்குப் போனபொழுது உன்னை எபேசுப்பட்டினத்திலிருக்கக் வேண்டிக்கொண்டதின்படி (நீ செய்வாயாக.)

௫ கட்டளையின் கடைசிப் பொருளென்னவெனில் சுத்தமான இருதயத்தினாலும் நல்மனச்சாட்சியினாலும் வஞ்சனையில்லாத விசுவாசத்தினாலும் பிறக்கிற அன்பே.

௬ சிலர் அந்தப் பொருளைவிட்டு விலகி, வீணான பேச்சைப் பேசிவருகிறார்கள்.

௭ அவர்கள் தாங்கள் சொல்லுகிறதின்னதென்றுந் தாங்கள் திருட்டாந்தப்படுத்து-

கிறதின்னதென்றும் அறியாதிருந்தும், நியாயசாஸ்திரிகளாயிருக்கவிரும்புகிறார்கள்.

௮ நியாயப்பிரமாணத்தை யொருவன் நியாயப்படி அனுசரித்தால், அது (அவனுக்கு) நன்மையாயிருக்குமென்று அறிந்திருக்கிறோம்.

௯ அன்றியும் எங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, நியாய பிரமாணம் நீதிமானுக்கல்ல, அக்கிரமக்காரருக்குங் கீழ்ப்படியாதவர்களுக்குந் தேவபக்தியில்லாதவர்களுக்கும் பாவிகளுக்கும் அசுத்தருக்கும் லவுகீக நடக்கையுடையவர்களுக்குந் தாய்தகப்பன்மாரைக் கொலைசெய்கிறவர்களுக்கும் மற்ற மனிதரைக் கொலைசெய்கிறவர்களுக்கும்,

௰ வேசிமார்க்கருக்கும் ஆண்புணர்ச்சிக்காரருக்கும் மனிதரைத் திருடுகிறவர்களுக்கும் பொய்க்காரருக்கும் பொய்யாணையிடுகிறவர்களுக்கும்,

௰௧ பாக்கியமுள்ள பராபரனுடைய மகிமையான சுவிசேஷத்தின்படியிருக்கிற ஆரோக்கியமான உபதேசத்திற்கு விரோதமாயிருக்கிற மற்றெந்தப்பொல்லாங்கைச் செய்கிறவர்களுக்குங் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

௰௨ அந்தச்சுவிசேஷம் எனக்கொப்புவிக்கப்பட்டது. என்னைப்பலப்படுத்துகிற நமது கர்த்தாகிய இயேசுக்கிறிஸ்து என்னை யுண்மையுள்ளவனென்றெண்ணி இந்த ஊழியத்திற்கு ஏற்படுத்தினபடியால் அவருக்கு தோத்திரஞ்செய்கிறேன்.

௰௩ முன்னே நான் தூஷணிக்கிறவனுமாய்த் துன்பப்படுத்துகிறவனுமாய் நிந்திக்கிறவனுமாயிருந்தேன் அப்படியிருந்தும் நான் அறியாமல் அவிசுவாசத்தினாலே அப்படிச்செய்தபடியினாலே இரக்கம்பெற்றேன்.

௰௪ மேலும் நம்முடைய கர்த்தாவின் கிருபை கிறிஸ்து இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தோடும் அன்போடுங்கூட எனக்கு மிகவுஞ்சம்பூர்ணமாயுண்டாயிற்று.

௰௫ பாவிகளை இரட்சிக்கும்படிக்குக் கிறிஸ்து இயேசு உலகத்தில்வந்தாரென்கிறது உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்கும் பாத்திரமுமானவார்த்தையாயிருக்கின்றது. பாவிகளில் நான் பிரதானமானவன்.

௰௬ அப்படியிருந்தும் நித்தியசீவனையடையும்படி இனிமேல் இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசுவாசமாயிருப்பவர்களுக்குத் திருட்டாந்தத்தைக் கொடுக்கும் பொருட்டாகப் பிரதான பாவியாகிய என்னிடத்திலே எல்லா நீடிய பொறுமையைக்காண்பிக்கும்படிக்கு இரக்கம்பெற்றேன்.

௰௭ நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள இராசனுமாய் ஒருவராகிய ஞானமுள்ளபராபரனுமாயிருக்கிற அவருக்குக் கனமுந் துதியும் என்றென்றைக்குமுண்டாயிருப்பதாக. ஆமென்.

௰௮ என் குமாரனாகிய தீமோத்தேயுவே! உன்னைக்குறித்து முன்னுண்டான தீர்க்கதரிசனங்களின்படியே, நான் இந்தக்கட்டளையை யுனக்கு ஒப்புக்கொடுக்கிறேன்.

௰௯ அந்தப்படி நீ விசுவாசமும் நற்சாட்சியையுடைய மனதுமுள்ளவனாய் அவைகளால் நல்லபோராட்டம் பண்ணுவாயாக. அப்படிப்பட்ட மனதைச் சிலர் தள்ளி விசுவாசமாகியகப்பலைச் சேதப்படுத்தினார்கள்.

௨௰ அவர்களில் இமெனேயும் அலெக்சந்தருமிருக்கிறார்கள். அவர்கள் தூஷணியாதபடிக்குக் கற்றுக்கொள்ளும் பொருட்டாய் அவர்களைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுத்தேன்.

## ௨. அதிகாரம்.

[(௧) யாவருக்காகவுஞ் செபம்பண்ண வேண்டுமென்றும், (௯) ஸ்திரிகள் இன்னவிதமாய் நடக்கவேண்டுமென்றுஞ் சொல்லியது.]

பின்னும் நான் பிரதானமாய்ப் புத்தி சொல்லுகிறதென்னவெனில், எல்லாமனிதருக்காகவும் விண்ணப்பங்களையுஞ் செபங்களையும் வேண்டுதலையுந் தோத்திரங்களையும் பண்ணவேண்டும்.

௨ நாமெல்லாப்பத்தியோடும் யோக்கியதையோடுங் கலகமில்லாமல் அமைதலுள்ள சீவனம்பண்ணும்படிக்கு, இராசாக்களுக்காகவும் அதிகாரமுள்ள யாவருக்காகவும் அப்படியேசெய்யவேண்டும்.

௩ நம்முடைய இரட்சகராகிய பராபரனுக்கு முன்பாக அது நன்மையாயும் பிரியமாயுமிருக்கின்றது.

௪ எல்லாமனிதரும் இரட்சிக்கப்படவுஞ் சத்தியத்தையறிகிற அறிவுக்குவரவும் அவரோசித்தமாயிருக்கிறார்.

௫ ஏனெனிற்பராபரன் ஒருவரே. பராபரனுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே.

௬ எல்லாரையும் மீட்கும்பொருளாகத் தம்மையொப்புக்கொடுத்த மனிதனாகிய கிறிஸ்து இயேசு அவரே (அந்தமீட்பு) தகுதியான காலங்களிற் சாட்சிசொல்லப்பட்டுவருகின்றது.

௭ அதற்காக நான் புறத்தேசத்தாருக்கு விசுவாசத்தையுஞ் சத்தியத்தையும் விளங்கப்பண்ணுகிறபோதகனாகவும் பிரசங்கியாகவும் அப்போஸ்தலனாகவும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன். நான் பொய்சொல்லாமல் உண்மையேசொல்லுகிறேன்.

௮ ஆதலால் என்னுடையசித்தமென்னவென்றால், எல்லா இடங்களிலேயும் புருஷர்கள் கோபமுந் தருக்கமுமில்லாமற், பரிசுத்தமானகைகளை யுயர்த்திச் செபம்பண்ணவேண்டும்.

௯ அந்தப்படி ஸ்திரிகளும் மயிரைப்பின்னுதலாலாவது, பொன்னாலாவது, முத்துக்களாலாவது, விலையேறப்பெற்ற வஸ்திரத்தாலாவது, தங்களை அலங்கரியாமல் தேவபத்தியைக்காண்பிக்கிற பெண்பிள்ளைகளுக்கேற்றபடியே,

௰ கற்புக்குரிய வஸ்திரத்தாலும் நாணத்தாலும் தெளிவான புத்தியாலும் நற்கிரியைகளாலும் தங்களை அலங்கரிக்கவேண்டும்.

௰௧ ஸ்திரியானவள் அமைதலோடேபடித்துக்கொண்டு இப்படியெவ்விதத்திலுங் கீழ்ப்படியுதலைக்காண்பிக்கக்கடவள்.

௰௨ உபதேசம்பண்ணும்படியாயும் புருஷன்மேலே அதிகாரத்தைச்செலுத்தும்படியாயும் நான் ஸ்திரியானவளுக்கு உத்தரவுகொடுக்கிறதில்லை.

௰௩ அவள் அமைதலாயிருக்கவேண்டும். என்னத்தினாலெனில், முதலாவது ஆதாமும் இரண்டாவது ஏவாளுமுருவாக்கப்பட்டார்கள்.

௰௪ மேலும் ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை. ஸ்திரியானவளே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்குட்பட்டாள்.

௰௫ அப்படியிருந்தும் அவர்கள் தெளிவான புத்தியோடே விசுவாசத்திலும் அன்பிலும் பரிசுத்தத்திலும் நிலைகொண்டிருந்தால், பிள்ளையைப்பெறுகிறதினாலே இரட்சிக்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

[(௧) கண்காணிகள் இப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்றும், (௮) உதவிக்காரர் இப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்றுஞ்சொல்லியது.]

௧ கண்காணிப்பை விரும்புகிறவன், நல்லவேலையைவிரும்புகிறான். இது மெய்யானவார்த்தை.

௨ ஆகையால் கண்காணியானவன் குற்றமில்லாதவனுமாய், ஒரே மனைவியையுடையபுருஷனுமாய், தெளிந்தபுத்தியுள்ளவனுமாய் விவேகியுமாய் நல்லொழுக்கமுள்ளவனுமாய் அந்நியரை உபசாரஞ்செய்கிறவனுமாய் போதிக்கிறதற்குத் தகுதியானவனுமாயிருக்கவேண்டும்.

௩ அவன் திராட்ச இரசத்திற்பிரியனுமாய் அடிக்கிறவனுமாய் அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமாயிராமல், சாந்தனுமாய்ச் சண்டைபண்ணாதவனுமாய் பணத்தின்மேற்பிரியமில்லாதவனுமாய்,

௪ தன் சொந்தக்குடும்பத்தை நன்றாய் நடத்துகிறவனுமாய்த் தன் பிள்ளைகளை எவ்விதத்திலும் யோக்கியமாய்க் கீழ்ப்படியப்பண்ணிக்கொள்ளுகிறவனுமாயிருக்கவேண்டும்.

௫ ஒருவன் தன் சொந்தக்குடும்பத்தை நடத்த அறியாதிருந்தால் பராபரனுடைய சபையையெப்படி விசாரிப்பான்.

௬ மேலும் அவன் இறுமாப்படைந்து, பசாசுவிழுந்த ஆக்கினையிலே விழாதபடிக்கு நூதனமான கிறிஸ்தவனாயிருக்கக்கூடாது.

௭ மேலும் அவன் நிந்தனையிலும் பசாசின் கண்ணியிலும் விழாதபடிக்குப் புறம்பானவர்களால் நற்சாட்சியைப்பெற்றவனாயுமிருக்கவேண்டும்.

௮ அந்தப்படியே உதவிக்காரரும் இருநாக்குள்ளவர்களாயும் திராட்ச இரசத்திற்பிரியராயும் அவலட்சணமான ஆதாயத்தை இச்சிக்கிறவர்களாயுமிராமல்,

௯ யோக்கியருமாய் விசுவாசத்தின் இரகசியத்தைச் சுத்தமான மனதிலே காத்துக்கொள்ளுகிறவர்களுமாயிருக்கவேண்டும்.

௰ அல்லாமலும் முன்பு அவர்களும் சோதிக்கப்படவேண்டும் அப்பொழுது குற்றமில்லாதவர்களானால், அவர்கள் உதவிக்காரருடைய உத்தியோகத்தைச்செய்யலாம்.

௰௧ அப்படிப்போல அவர்களுடைய ஸ்திரிகளும் யோக்கியருமாய் தூஷணியாதவர்களுமாய் தெளிந்த புத்தியுள்ளவர்களுமாய், எவ்விதத்திலேயும் உண்மையுள்ளவர்களுமாயிருக்கவேண்டும்.

௰௨ மேலும் உதவிக்காரரானவர்கள் ஒவ்வொருமனைவிக்குப்புருஷருமாய்த் (தங்கள்) பிள்ளைகளையுஞ் சொந்தக்குடும்பங்களையும் நன்றாய் நடத்துகிறவர்களுமாயிருக்கவேண்டும்.

௰௩ இப்படி உதவிக்காரருடைய உத்தியோகத்தை நன்றாய்ச்செய்கிறவர்கள் தங்களுக்கு நல்லபதவியையும் கிறிஸ்து இயேசுவினிடத்திலுள்ள விசுவாசத்தின்மேல் மிகுந்த தயிரியத்தையுஞ் சம்பாதிக்கிறார்கள்.

௰௪ நான் உன்னிடத்திற்குச் சீக்கிரமாய் வருவேனென்று நம்பியிருக்கிறேன்.

௰௫ நான் தாமதித்தாற் சத்தியத்தைத்தாங்கிறதூணுமாய் அஸ்திபாரமுமாயிருக்கிற சீவனுள்ள பராபரனுடைய சபையாகிய தேவாலயத்திலே நடக்கவேண்டியவகையை நீயறியும்படிக்கு இவைகளையுனக்கு எழுதினேன்.

௰௬ அன்றியும் பராபரன் மாமிசமுள்ளவராக வெளிப்பட்டும் ஆவியினாலே நீதியுள்ளவனென்றேற்படுத்தப்பட்டும், தேவதூதர்களாற்காணப்பட்டும், புறதேசத்தாருக்குள்ளே பிரசங்கிக்கப்பட்டும், உலகத்திலே விசுவாசிக்கப்பட்டும் மகிமையிலேயுயர்த்தப்பட்டுமிருக்கிறாரென்றுசொல்லிய மெய்த்தேவபத்திக்குரிய இந்த இரகசியமயாவராலும் அறிக்கையிடப்பட்டபடி மேன்மையாயிருக்கிறது.

## ௪. அதிகாரம்.

[(௧) கடைசிக்காலத்திலே நடக்குங் கேடுகளை முன்னறிவித்தது, (௬) அவனுக்கிறிஸ்துவுக்கு நற்சேவகனாக நடக்கும்படி பலபுத்திகளைச் சொல்லியது.]

ஆகிலும் தேவ ஆவியானவர் தெளிவாய்ச் சொல்லுகிறபடி பிற்காலங்களிலே பொய்யருடைய வஞ்சகத்தினாலே சிலர் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும் தேமோனகளைக் குறித்துச் சொல்லுகிற உபதேசங்களுக்குஞ் செவிகொடுத்து அந்தவிசுவாசத்தைத் தள்ளிநடப்பார்கள்.

௨ அந்தப் பொய்யர் சூடுண்ட மனதுள்ளவர்களாய், விவாகம்பண்ணக்கூடாதென்றும் போசனபதார்த்தங்களை விலக்கவேண்டுமென்றுங் கட்டளையிடுவார்கள்.

௩ பராபரன் அவைகளை விசுவாசிகளாலுஞ் சத்தியத்தையறிந்தவர்களாலுந் தோத்திரத்தோடே அநுபவிக்கப்படும்படிக்குப் படைத்தாரே.

௪ ஆனதாற் பராபரன் படைத்ததெல்லாம் நல்லதாயிருக்கின்றது. தோத்திரத்தோடே அது ஏற்றுக்கொள்ளப்படுகையில், ஒன்றையுந் தள்ளவேண்டுவதில்லை.

௫ அது தேவவசனத்தினாலுஞ் செபத்தினாலும் பரிசுத்தமாக்கப்படுகின்றதே.

௬ இவைகளைச் சகோதரருக்குப் போதித்தால், நீயறிந்து பற்றிக்கொண்டிருக்கிற நற்போதகத்திற்கும் விசுவாசத்திற்கு முரிய வார்த்தைகளில் வளர்ந்தவனாய் இயேசுக்கிறிஸ்துவுக்கு நல்ல ஊழியக்காரனாயிருப்பாய்.

௭ லவுகிக நடக்கைக்குரியதுமாய்க் கிழவிகளுடைய பேச்சுமாயிருக்கிற கட்டுக்கதைகளை மாத்திரந் தள்ளி, மெய்த்தேவபத்தியை முயற்சிபண்ணிக்கொள்வாயாக.

௮ சரீரத்திற்கேற்றமுயற்சி கொஞ்சப் பிரயோசனமுள்ளதே. இந்தச்சீவனுக்கும் இதற்குப்பின் வருஞ்சீவனுக்கும் வாக்குத்தத்தமுள்ளதாகிய தேவபத்தியெவ்விதத்திலும் பிரயோசனமுள்ளதாயிருக்கின்றதே.

௯ இந்தவார்த்தை உண்மையாயும் மிகவும் அங்கிகரிக்கப்படுதற்குப் பாத்திரமாயுமிருக்கின்றது.

௰ இதற்காக நாங்களும் எல்லாமனிதருக்கும் விசேஷமாக விசுவாசிகளுக்கும் இரட்சகராகிய சீவனுள்ள பராபரன் மேல் நம்பிக்கையை வைத்திருக்கிறபடியாற் பிரயாசப்பட்டும் நிந்திக்கப்பட்டுமிருக்கிறோம்.

௰௧ இவைகளை நீ கட்டளையிட்டுப் போதிப்பாயாக.

௰௨ உன் வாலிபவயதைக் குறித்து எவனும் உன்னையசட்டைபண்ணத்தக்கதாக நீ செய்யாமல், வார்த்தையிலேயும் நடக்கையிலேயும், அன்பிலேயும், ஆவியிலேயும் விசுவாசத்திலேயும், கற்பிலேயும், உன்னை விசுவாசிகளுக்குச் சட்டமாகக் காண்பிப்பாயாக.

௰௩ நான் வருமளவும் வாசிக்கிறதற்கும் புத்திசொல்லுகிறதற்கும் போதிக்கிறதற்குஞ் சாக்கிரதையாயிரு.

௰௪ மூப்பர்கள் கூட்டம் உன்மேற் கைகளை வைத்தபொழுது, தீர்க்கதரிசனத்தினாலேயுனக்குக் கொடுக்கப்பட்ட வரத்திற்காக அசதியாயிராதிருப்பாயாக.

௰௫ நீ தேறுகிறது யாவருக்குந் தோன்றும்படிக்கு, இவைகளையே சிந்தித்துக்கொண்டு, இவைகளிலே சாக்கிரதையாயிருப்பாயாக.

௰௬ உனக்காகவும் உபதேசத்திற்காகவும் எச்சரிக்கையாயிரு. இவைகளில் நிலைகொண்டிரு. அப்படிச் செய்தால், உன்னையும் உன்னிடத்திற்கேட்கிறவர்களையும் இரட்சித்துக்கொள்வாய்.

## ௫. அதிகாரம்.

[(௧) மற்றவர்களைக் கடிந்துகொள்ளுகிறதைக் குறித்தும், (௩) கைம்பெண்களைக் குறித்தும், (௰௭) கண்காணிகளைக் குறித்தும், (௨௪) மற்றவிசேஷங்களைக் குறித்தும் புத்திகளைச் சொல்லியது.]

மூப்பனை நீ கடினமாய்க் கடிந்துகொள்ளாமல், தகப்பனைப்போலவும் வாலிபவயதுள்ள ஆண்பிள்ளைகளுக்குச் சகோதரரைப்போலவும்,

௨ பெரிய ஸ்திரிகளுக்குத் தாய்களைப் போலவும் வாலிபவயதுள்ள பெண்பிள்ளைகளுக்குச் சகோதரிகளைப்போலவும் மிகுந்த கற்போடே புத்திசொல்லுவாயாக.

௩ மெய்யாய்க் கைம்பெண்களானவர்களைக் கனம்பண்ணு.

௪ ஒரு கைம்பெண்ணுக்குப் பிள்ளைகள் அல்லது பேரன்பேத்திகளிருந்தால், அவர்கள் முதலாவது தங்கள் சொந்தக்குடும்பத்தைத் தேவபத்தியாய் விசாரித்துப், பின்பு தங்கள் தாய்தகப்பன்மாருக்குப் பதில் நன்மைகளைச் செய்யப் பழக்கம்பண்ணக்கடவர்கள். அது பராபரனுக்கு முன்பாக நன்மையாயும் பிரியமுள்ளதாயுமிருக்கின்றது.

௫ தனித்திருக்கிற மெய்யான கைம்பெண் பராபரனை நம்பிக்கொண்டு, இரவும்பகலும் வேண்டுதல்களிலுஞ் செபங்களிலுந் தரித்திருப்பாள்.

௬ சிற்றின்பத்தோடே வாழ்கிறவள் உயிரோடே செத்தவளாயிருக்கிறாள்.

௭ அவர்கள் குற்றஞ்சாற்றப்படாதவர்களாயிருக்கும்படிக்கு, இவைகளைக் கட்டளையிடுவாயாக.

௮ தன்னைச்சேர்ந்தவர்களையும் விசேஷமாகத் தன்சமுசாரத்தையும் விசாரியாதிரு

கிறவனைவிசுவாசத்தைமறுதலித்தவனும் அவிசுவாசியிலுங் கெட்டவனுமாயிருக்கிறான்.

௯ மேலும் எப்படிப்பட்டகைம்பெண்ணைத்தெரிந்துகொண்டு வைக்கவேண்டுமென்றால் அறுபதுவருஷத்திற்குக்குறைவில்லாதவள். ஒரேபுருஷனுக்குமனைவியாயிருந்தவள்.

௰ பிள்ளைகளைவளர்த்தாளென்றும் அந்நியரையுபசாரஞ்செய்தாளென்றும் பரிசுத்தவான்களுடையகால்களைக்கழுவினாளென்றும் உபத்திரவப்படுகிறவர்களுக்கு உதவிசெய்தாளென்றுஞ் சகலவிதமான நற்கிரியைகளையும் நடப்பித்தாளென்றும் இப்படிப்பட்ட நற்கிரியைகளைக்குறித்து நற்சாட்சிபெற்றிருக்கிறவள். இப்படிப்பட்டகைம்பெண்ணைத்தெரிந்துகொள்ளவேண்டும்.

௰௧ வாலிபவயதுள்ள கைம்பெண்களைத்தெரிந்துகொள்ளாதிருப்பாயாக. என்னத்தினாலெனில் அவர்கள்கிறிஸ்துவுக்குவிரோதமாய்ச்சுகிக்க ஆசைகொள்ளும்பொழுது விவாகம்பண்ணமனதாகி,

௰௨ முதலிலிருந்த உண்மையைத்தள்ளினதாற்குற்றத்திலகப்படுவார்கள்.

௰௩ அதுவுமல்லாமல் அவர்கள்சோம்பற்காரிகளாகி, வீடுகடோறுந்திரியவழக்கம்பண்ணுவார்கள். சோம்பற்காரிகளாயமாத்திரமல்ல, பிதற்றுகிறவர்களாயுந்தகாதகாரியங்களைப்பேசுகிறவீண் அலுவற்காரிகளாயுமிருப்பார்கள்.

௰௪ இப்படிச்சிலர் இதற்குமுன்னேசாத்தானிடத்திற்குத்திரும்பினார்கள்.

௰௫ ஆகையால் வாலிபவயதுள்ள கைம்பெண்கள்விவாகம்பண்ணவும் பிள்ளைகளைப்பெறவும், வீட்டைவிசாரிக்கவும் விரோதக்காரன்தூஷணிக்கிறதற்கு இடமுண்டாக்காமலிருக்கவும்வேண்டுமென்றிருக்கிறேன்.

௰௬ விசுவாசியாகிய ஒருவனுக்கு அல்லது ஒருத்திக்குக்கைம்பெண்களிருந்தால் அவர்கள் இவர்களுக்குதவிசெய்யக்கடவர்கள் சபையார்மெய்யானகைம்பெண்களுக்கு உதவியாயிருக்கும்படிக்கு அந்தப்பாரம் அவர்கள்மேல்வைக்கக்கூடாது.

௰௭ போரடிக்கிற மாட்டின்வாயைக்கட்டாதிருப்பாயாகவென்றும் வேலையாளகூலிக்குப்பாத்திரனாயிருக்கிறானென்றும் வேதவாக்கியஞ்சொல்லுகிறபடியே,

௰௮ (சபையை) நன்றாய்நடத்துகிறமூப்பர்களைவிசேஷமாகத் திவ்வியவசனத்தையுபதேசிக்கிறதிற் பிரயாசப்படுகிறவர்களை இரட்டிப்பானகனத்திற்குப்பாத்திரராக எண்ணிக்கொள்ளவேண்டும்.

௰௯ மூப்பனுக்குவிரோதமாக ஒருவன பிராதுபண்ணவந்தால், இரண்டுமூன்றுசாட்சிகளகூடவிராவிட்டால்,

௨௰ நீ அதையேற்றுக்கொள்ளக்கூடாது. மற்றபாவருக்கும்பயமுண்டாகும்படிக்கு, பாவஞ்செய்தவர்களையெல்லாச்சபையாருக்குமுன்பாகக்கடிந்துகொள்வாயாக.

௨௰௧ நீ பட்சபாதத்தோடே ஒன்றுஞ்செய்யாமல், மனதிலே தகாததீர்ப்பில்லாமல் இவைகளைக்காத்து நடக்கும்படிக்குப்பராபரனுக்குங்கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குந்தெரிந்துகொள்ளப்பட்டதூதருக்கு முன்பாகக்கெட்டியாய்க் கட்டளையிடுகிறேன்.

௨௰௨ எவன்மேலாகிலும் உன்கைகளை நீ சீக்கிரமாய்வைக்கக்கூடாது. மற்றவர்கள் செய்யும்பாவங்களுக்கு ஐக்கியப்படாதிருப்பாயாக, உன்னைக்கற்புள்ளவனாகக்காத்துக்கொள்வாயாக.

௨௰௩ உன் இரைக்குடலுக்காகவும் உனக்கு அடிக்கடிவருகிற பலவீனங்களுக்காகவும் நீயினிமேல் தண்ணீர்பானம் பண்ணாமற் கொஞ்சந் திராட்ச இரசத்தைப்பானம்பண்ணு.

௨௰௪ சிலமனிதருடையபாவங்கள் தீர்ப்புச்செய்கிறதற்குமுன்னே வெளியரங்கமாயிருக்கும். சிலருடைய (பாவங்கள்) பின்னே விளங்கும்.

௨௰௫ அதுபோலச்சிலருடையநற்கிரியைகளும் (உடனே) வெளியரங்கமாயிருக்கும் அப்படியிராதவைகளும் (நெடுக) மறைந்திருக்கமாட்டாது.

## ௬. அதிகாரம்.

[(௧) அடிமைகளுடைய கடமைகளைக்குறித்தும், (௩) தகாதவைகளைப்போதிக்கிறவர்களைக்குறித்தும், (௬) தேவபத்தியின மகிமையைக்குறித்தும், (௯) பணத்தின மேலுள்ள ஆசையைக்குறித்தும் விசேஷமானபுத்திகளைச்சொல்லியது.]

பராபரனுடையநாமமும் உபதேசமுந்தூஷிக்கப்படாதபடிக்கு அடிமைத்தனத்திற்குட்பட்டிருக்கிறவேலைக்காரர் தங்கள் எசமானகளைச்சகலமான கனத்திற்குப்பாத்திரரென்றெண்ணிக் கொள்ளக்கடவர்கள்.

௨ விசுவாசிகளாகிய நாயன்மார்களையுடையவர்களும் அவர்கள்சகோதரரானதினாலே அவர்களையசட்டைபண்ணாமல் வேலையின நன்மைகளைப்பெற்றுக்கொள்ளுகிற அவர்கள் விசுவாசிகளுமாய் அன்புள்ளவர்களுமாயிருக்கிறதினாலே அவர்களுக்கு அதிகமாய ஊழியஞ்செய்யக்கடவர்கள். இந்தப்படியேபோதித்துப்புத்திசொல்லுவாயாக.

௩ நம்முடையகர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின ஆரோக்கியமானவசனங்களுக்கு

மெய்த்தேவபத்திக்கேற்ற உபதேசத்திற்கும் இசைவாயிராமல்,

௪ வேறுவிதமாய்ப் போதிக்கிறவன் இறுமாப்புள்ளவனுமாய் ஒன்றையும் அறியாதவனுமாய்த் தருக்கங்களும் வாக்குவாதங்களுமாகிய நோய்கொண்டவனுமாயிருக்கிறான் அவைகளாலே பொறாமையுஞ் சண்டையுந் தூஷணங்களும் பொல்லாத சமுசயங்களும்,

௫ கெட்டசிந்தையுள்ளவர்களாயுஞ் சத்தியமில்லாதவர்களாயும் மெய்த்தேவபத்தி லாபத்தை வருவிக்கிறதென்றெண்ணுகிறவர்களாயுமிருக்கிற மனிதர்களாலே பிறக்கப்படும் மாறுபாடான தர்க்கங்களும் வருகின்றன, அவர்களுக்கு விலகுவாயாக.

௬ போதுமென்கிற மனதுடனே கூடிய மெய்த்தேவபத்தியே மிகுந்த லாபமுள்ளது.

௭ உலகத்திலே நாம் ஒன்றையுங் கொண்டுவந்ததுமில்லை இதினின்று நாம் ஒன்றையுங் கொண்டுபோவதுமில்லையென்று வெளியரங்கமாயிருக்கின்றது.

௮ அப்படியிருக்க, அன்னவஸ்திரம் நமக்குண்டாயிருக்கையில், அதுபோதுமென்றெண்ணிக்கொள்ளக்கடவோம்.

௯ ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்கள் சோதனையிலேயுங் கண்ணியிலேயும் மனிதரை மிகவுங் கெடுத்தழிக்கிறதற்கேதுவாயிருக்கிற அநேகபுத்தியீனமுஞ் சேதமுமான இச்சைகளிலேயும் விழுகிறார்கள்.

௰ பண இச்சை தீமையாவற்றிற்கும் வேராயிருக்கின்றது. சிலர் அதையிச்சித்து, விசுவாசமார்க்கத்தைவிட்டுவழுவி, அநேகவேதனைகளாலே தங்களை உருவக்குத்தியிருக்கிறார்கள்.

௰௧ பராபரனுடைய மனிதனாகிய நீ இவைகளுக்கு விலகியோடி நீதியையும் மெய்த்தேவபத்தியையும் விசுவாசத்தையும் அன்பையும் பொறுமையையுஞ் சாந்தத்தையுந் தொடர்ந்துகொள்வாயாக.

௰௨ விசுவாசத்தின் நற்போராட்டம்பண்ணு. நித்தியசீவனைப்பிடித்துக்கொள். அதற்காகவே நீ அழைக்கப்பட்டிருக்கிறது மல்லாமல், அநேகசாட்சிகளுக்குமுன்பாக நல்லஅறிக்கையைப் பண்ணியுமிருக்கிறாய்,

௰௩ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து பிரசன்னமாகுமளவாக்கும் நீயிந்தக்கற்பனையைமாசில்லாமலுங் குற்றமில்லாமலுங் கைக்கொள்ளும்படிக்கு,

௰௪ எல்லாவற்றையும் உயிரோடிருக்கச்செய்கிற பராபரனுடைய சந்நிதானத்திலேயும் பொந்தியுபிலாத்துவின் முன்னின்று நல்ல அறிக்கையைச் சாட்சியாகப் பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதானத்திலேயும் உனக்குக் கட்டளையிடுகிறேன்.

௰௫ அந்தப் பிரசன்னத்தைப் பாக்கியமுள்ள ஒருவரேயான சுயாதிபதியுமாய் இராசாக்களின் இராசனுமாய்க் கர்த்தாக்களின் கர்த்தாவுமாய்,

௰௬ ஒருவராய்ச் சாவாமையுள்ளவருமாய் ஒருவராலுஞ் சேரக்கூடாத ஒளியிலே வாசமாயிருக்கிறவருமாய் மனிதரில் ஒருவராலுங் காணப்படாமலும் ஒருக்காலுங் காணப்படக் கூடாமலுமிருக்கிறவர் தமது காலங்களிற் காண்பிப்பார். அவருக்கே கனமும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருப்பதாக. ஆமென்.

௰௭ அன்றியும் இவ்வுலகத்திலே ஐசுவரியமுள்ளவர்கள் இறுமாப்பான சிந்தையுள்ளவர்களாயிராமலும் நிச்சயமில்லாத ஐசுவரியத்தின்மேல் நம்பிக்கையாயிராமலும் நாம் அநுபவிக்கிறதற்குச் சகலவித நன்மைகளையும் நமக்குச் சம்பூர்ணமாய்க் கொடுக்கிற சீவனையுடைய பராபரன்மேலே நம்பிக்கையாயிருக்கும்படியாயும்,

௰௮ நன்மைகளைச் செய்து நற்கிரியைகளில் ஐசுவரியவான்களாகும்படியாயும் மற்றவர்களுக்குக் கொடுக்க மனப்பூர்வமாயிருந்து உதாரகுணமுள்ளவர்களாய்,

௰௯ நித்தியசீவனைப்பிடித்துக்கொள்ளும்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்ல அஸ்திபாரத்தைப் பொக்கிஷமாக வைக்கும்படியாயும் அவர்களுக்குக் கட்டளையிடுவாயாக.

௨௰ ஓ! தீமோத்தேயுவே! உனக்கு ஒப்புவிக்கப்பட்டதை நீ காத்துக்கொண்டு லவுகீகமும் வீணுமான பேச்சுகளுக்குங் கல்வியென்று பொய்யாய்ச் சொல்லப்பட்டிருக்கிற தர்க்கத்திற்கும் விலகுவாயாக.

௨௧ சிலர் அதைப் பாராட்டி விசுவாசத்தைவிட்டு வழுவிப்போனார்கள். கிருபையுன்னோடேயிருக்கக்கடவது. ஆமென்.

## தீமோத்தேயு என்பவனுக்கெழுதின

# இரண்டாம நிருபம்.

### ௧. அதிகாரம்.

[(௧) பவுலுதிமோததேயுவைவாழ்ததி, (௩) அவனுககுத் தன பட்சதலைதக் காட்டி, (௯) அவனதனககுககிடைத்த வார்த்தை முயற்சிபண்ணுமபடிபுதநிசொலலியது.]

கிறிஸது இயேசுவிறைலவருகிற சீவனைக குறிததுசசொலலிய வாககுத்தத்தததினபடியேபராபரனுடையசித்தத்தினுலேஇயேசுக்கிறிஸதுவின அபபோஸதலனுகியபவுலு,

௨ அனபுள்ளகுமாரனுகிய தீமோததேயுவுககு எழுதுகிறதாவது, பிதாவாகியபராபரனுலும நமமுடையகர்த்தராகியகிறிஸது இயேசுவினுலுங, கிருபையும இரக்கமுஞ் சமாதானமும உனககுணடாகக்கடவது.

௩ என முன்னேர்களமுதற்கொணடு சுத்தம னமனதோடேபராபரனுககு ஆராதனைசெய்கிறநான இரவுமபகலும இடைவிடாமல என செபங்களில உனனை நினைததுஉ,

௪ உன்கண்ணீரை ஞாபகமபணணிசசநதோஷததாலநிறையப்படுமபடிககு உனனைக்காணவேணடுமென றுமிகவுமவிருமபி,

௫ உனனிலுள்ள உணமையானவிசுவாசததை ஞாபகப்படுததிப, பராபரனுககுஸ தோததிரஞ்செலுததுகிறேன. அப்படிப்பட்டவிசுவாசமமுற்காலததில உனபாட்டியாகியலோவிசாளுககுளளும உனதாயாகிய ஐனீக்கேயாளுககுளளும வாசமாயிருநதது. உனககுளளும அப்படியேவாசமாயிருககிறதெனறு நிச்சயமாய அறிநதிருககிறேன.

௬ இதுநிமித்தமாகநான உனமேல எனகைகளைவைத்ததினுலே உனககுணடான திவவியவரததை நீ திபவளர்ச்சியைபபோல எழுப்பும்படிககு உனககுஞாபகபபடுததுகிறேன.

௭ பயமுள்ள ஆவியையல்ல பெலனும அனபும சொஸதபுததியுமுள்ள ஆவியைப் பராபரன நமக்குக்கொடுததாரே.

௮ ஆகையால நமமுடைய கர்த்தரைக குறிததுச்சொல்லவேணடிய சாட்சிக்காகவும அவர் நிமித்தங்கட்டப்பட்டிருககிற எனக்காகவும நீவெட்கப்படாமல் தேவபலனுலே சுவிசேஷததிற்காக (என்னேடே) கூடததீமையையனுபவிததுககொளவாயாக.

௯ அவர் நமமுடையக்கிரியைகளினிமித்தமல்லதமமுடைய முதல் யோசனையினிமித்தமும லோகததோற்றததிற்குமுனனே கிறிஸது இயேசுவினமூலமாய நமககுககொடுத்தகிருபையினிமித்தமும நமக்கு இரட்சிபபையுணடாககி, (அதனுலே) பரிசுத்தவானகளாக நமமையழைத்தார்.

௰ நமமுடைய இரட்சகராகிய இயேசுககிறிஸதுபிரசன்னமான்தினுலே, அநதக்கிருபையிபபொழுதுவெளிப்படுத்தப்பட்டிருககினறது. அவர் மரணததைநிவர்ததிசெயது, (தமது) சுவிசேஷததினுலே சீவனையும அழியாமையையுந்தெரியப்படுததினுர்.

௰௧ அதைப்புறததேசத்தாருககு (அறிவிககுமபடி) பிரசங்கியாகவும அபபோஸதலனுகவும போதகனுகவும வைக்கப்பட்டேன.

௰௨ அதற்காக இந்தப்பாடுகளையும அனுபவிககிறேன. அப்படியிருநதும, இனனுரைவிசுவாசிததிருககிறேனென்று அறிநதிருககிறதால. நானவெட்கப்படுகிறதிலலை மேலும, எனக்கொபபுவிக்கப்பட்டதை அவர் அநதநாள்வரையிற்காததுககொள்ள வலலமையுள்ளவராயிருககிறுரொனறு நிசசயமாயிருக்கிறேன.

௰௩ நீ எனனிடததிற்கேட்டறிநத ஆரோககியமானவசனங்களினசட்டததை இயேசுககிறிஸதுவிலுள்ளவிசுவாசததோடும அனபோடுமபற்றிககொளவாயாக.

௰௪ உனக்கு ஒபபுவிக்கப்பட்டநனமையை நமமிடததிலவாசமாயிருககிற பரிசுத்த ஆவியினுலேகாததுககொள்வாயாக. நீ அறிநதிருககிறபடி ஆசியா நாட்டிலுள்ள யாவரும எனனைவிட்டுவிலகிபபோனுர்கள.

௰௫ அவர்களிற்புகெலலும எர்மொகெனேயுமிருககிறுர்கள,

௰௬ ஒநேசிபபொருவின குடுமபததிற்குக்கர்த்தர் இரக்கத்தையளிக்கக்கடவர். எனனத்தேற்காக அவனுல, அவன் அடிக்கடி என்னைச் சவுககியப்படுததினது மல்லாமல், எனசஙகிலியைககுறிததுவெட்கப்படாமல்,

தய இருதயத்தோடே கர்த்தரைத் தொழுதுகொள்ளுகிறவர்களுடனேகூட நீதியையும் விசுவாசத்தையும் அன்பையுஞ் சமாதானத்தையும் பின்தொடர்ந்துகொள்.

௨௩ அன்றியும் புத்தியீனமும் அறிவீனமுமான தருக்கங்கள் சண்டைகளைப் பிறப்பிக்கிறவைகளென்று நீ அறிந்து, அவைகளைத் தள்ளுவாயாக.

௨௪ கர்த்தருடைய ஊழியக்காரன் சண்டைபண்ணாமல், எல்லாருக்குஞ் சாந்தமுள்ளவனும் போதிக்கத்தகுதியானவனுந் தீமையைப் பொறுமையாய்ச் சகிக்கிறவனுமாயிருந்து,

௨௫ எதிர்பேசுகிறவர்களுக்குச் சாந்தமாய்ப் புத்திசொல்லவேண்டும். அப்பொழுது தன்னுடைய இஷ்டப்படி செய்யப் பசாசினாலே பிடிக்கப்பட்டிருக்கிற அவர்கள் சத்தியத்தையறிகிறதற்கேற்ற மனஸ்தாபத்தையடைந்து,

௨௬ அவனுடைய வலையினின்று நீங்கித் தெளிந்த புத்தியுள்ளவர்களாகும்படிக்குப் பராபரன் ஒருவேளை அவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்வார்.

## ௩. அதிகாரம்.

[(௧) பிற்காலத்திலே பொல்லாதவர்கள் தோன்றுவார்களென்று அறிவித்து, (௰) தன்னைப்போல அவன் பொறுமையோடே பாடுபட்டு, (௰௪) தேவவசனத்தைப் படித்துக்கொள்ளும்படி சொல்லியது.]

மேலுங் கடைசிநாட்களிலே கொடிய காலங்கள் வருமென்றறிவாயாக.

௨ எப்படியெனில், மனிதர்கள் தங்களை (மாத்திரம்) சிநேகிக்கிறவர்களாயும் பணத்திற்பிரியராயும் வீம்புக்காரராயும் அகந்தையுள்ளவர்களாயுந் தூஷணிக்கிறவர்களாயுந் தாய்தகப்பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களாயும் நன்றியறியாதவர்களாயும் பரிசுத்தமில்லாதவர்களாயுஞ்,

௩ சுபாவ அன்பில்லாதவர்களாயும் ஒப்புரவாகமனதில்லாதவர்களாயும் பொய்யாய்க்குற்றஞ்சாற்றுகிறவர்களாயும் இச்சையையடக்காதவர்களாயுங் குரூரராயும் நல்லோருக்குப் பகைஞராயும்,

௪ துரோகிகளாயுந் துணிவுக்காரராயும் இறுமாப்புள்ளவர்களாயும் பராபரனிலுஞ் செல்வத்தை விரும்புகிறவர்களாயுந் தேவபத்தியின் ரூபத்தைத் தரித்து,

௫ அதின் பலனை மறுதலிக்கிறவர்களாயுமிருப்பார்கள்.

௬ இப்படிப்பட்டவர்களுக்கு விலகுவாயாக. இப்படிப்பட்டவர்களே பாவங்களால் நிறைந்தும் பலபல இச்சைகளால் இழுக்கப்பட்டும்,

௭ எப்பொழுதும் படித்தாலும் ஒருக்காலுஞ் சத்தியத்தை யறியாமலுமிருக்கிற புத்தியீன முள்ள பெண்பிள்ளைகளுடைய வீடுகளிலே நுழைந்து அவர்களைச் சிறையாக்குவார்கள்.

௮ இயன்னேயும் இயம்பிரேயும் மோசேயுக்கு விரோதமாய் நின்றதுபோல, இவர்களுஞ் சத்தியத்திற்கு விரோதமாயிருக்கிறார்கள். இவர்கள் முழுவதுங் கெட்டபுத்தியை யுடையவர்களாயும் விசுவாசத்தைக்குறித்துத் தகுதியில்லாதவர்களாயுமிருக்கிறவர்கள்.

௯ ஆகிலும் அவர்கள் அதிகமாய்ப் பெருகுவதில்லை. அவர்களுடைய புத்தியீனம் வெளிப்பட்டதுபோல இவர்களுடையதும் எல்லாருக்கும் வெளியரங்கமாகும்.

௰ நீயோ என்னுடைய போதகத்தையும் நடக்கையையும் மனோவாஞ்சையையும் விசுவாசத்தையும் நீடியசாந்தத்தையும் அன்பையும் பொறுமையையும்,

௧௧ அந்தியோகியா இக்கோனியா லீஸ்திரா ஊர்களிலே எனக்குண்டான துன்பங்கள் பாடுகளையும் நன்றாய் அறிந்துகொண்டிருக்கிறாய். இப்படிப்பட்ட துன்பங்களைச் சகித்தேன். அவைகளெல்லாவற்றினின்றுங் கர்த்தர் என்னை மீட்டு இரட்சித்தார்.

௧௨ அன்றியுங் கிறிஸ்து இயேசுவைப் பற்றி தேவபத்தியாய்ச் சீவனம்பண்ண மனதாயிருக்கிற யாவருந் துன்பப்படுவார்கள்.

௧௩ பொல்லாத மனிதரும் வஞ்சகருமானவர்கள் மாத்திரம் (மற்றவர்களை) வஞ்சித்தும் வஞ்சிக்கப்பட்டும் மேன்மேலுங் கேடுள்ளவர்களாவார்கள்.

௧௪ நீ கற்றுக்கொண்டதெதுவோ நிச்சயிக்கப்பட்டதெதுவோ அதிலே நிலைநிற்பாயாக. உனக்குப் போதகஞ்செய்தவன் இன்னானென்று நீ அறிந்திருக்கிறதுமல்லாமல்,

௧௫ இயேசுகிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே இரட்சிப்புக்கேற்ற ஞானத்தை யுனக்குக் கொடுக்கத்தகுதியான வேதஎழுத்துக்களை நீ சிறுவயது முதற்கொண்டு அறிந்தவனென்றும் அறிந்திருக்கிறாயே.

௧௬ வேதவாக்கியங்களெல்லாந் தேவ ஆவியினாலுண்டானவைகளுமாய்ப் பராபரனுடைய மனிதன் நிறைந்த நன்மையுள்ளவனும் எந்த நற்கிரியையுஞ் செய்யமிகுந்த தகுதியுள்ளவனுமாகும்படிக்கு,

௧௭ உபதேசம்பண்ணுதற்குங் கடிந்துகொள்ளுதற்குஞ் செம்மைபாக்குதற்கும் நீதியைப் படிப்பிக்கிறதற்கும் பிரயோசனமானவைகளுமாயிருக்கின்றன.

## ச. அதிகாரம்.

[(க) அவன் திவ்வியவசனத்தை யுண்மையாய்ப் போதிக்கும்படி சொல்லி, (சு) தான் மரிக்கிறதற்குச் சந்தோஷத்தைக்காட்டி, (ய) தேமா ஆக்காமுதலானவர்களைக் குறித்துச் சொல்லியது.]

க ஆனபடியினாலே பராபரனுக்கு முன்பாகவும், தாம் பிரசன்னமாகித் தமது இராச்சியத்தின் (மகிமையை) வெளிப்படுத்துங் காலத்திலே உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தவர்களுக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்குங் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்கு முன்பாகவும்,

உ நான் உனக்குச் சாட்சியாய்க் கட்டளையிடுகிறதென்னவெனில்: சாவகாசமாயிருந்தாலும் இல்லாதிருந்தாலும் அந்த வசனத்தைவிடாமற் பிரசங்கம்பண்ணி, எல்லாவிதமான நீடியசாந்தமாயும் உபதேசத்திற்கேற்றவிதமாயும் மெய்யைவிளங்கச் செய்து, கடிந்துகொண்டு புத்திசொல்லுவாயாக.

ங ஏனெனில், அவர்கள் ஆரோக்கியமான உபதேசத்தைப் பொறுக்கமனதில்லாமற் செவிக்கு இன்பமானவைகளை விரும்பித் தங்கள் சுய இச்சைகளுக்குத் தக்கதாக,

ச தங்களுக்குப் போதகர்களைக்கூட்டிவைத்துச் சத்தியத்திற்குச் செவியைவிலக்கிக் கட்டுக்கதைகளைச் சாருங்காலம் வரும்.

ரு நீமாத்திரம் எல்லாவற்றிலேயுந் தெளிந்தபுத்தியுள்ளவனாயிருந்து, தீமையைச் சகித்துச் சுவிசேஷிகனுடைய வேலையைச் செய்து உன் ஊழியத்தை நிறைவேற்றுவாயாக.

சு நானே பான்பலியாக வார்க்கப்பட எத்தனமாயிருக்கிறேன். நான் இதைவிட்டுப் போகிறதற்குக் காலஞ் சமீபமாயிருக்கின்றது.

எ நல்லபோராட்டத்தைப் பண்ணியிருக்கிறேன். ஓட்டத்தை முடித்திருக்கிறேன், விசுவாசத்தைக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

அ இதுமுதல் நீதியென்னுங் கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது. நீதியுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அந்நாளில் அதை எனக்குமாத்திரமல்ல, அவர் பிரசன்னமாகுதலை விரும்பின யாவருக்குந் தந்தருளுவார்.

கூ நீ சீக்கிரமாய் என்னிடத்தில் வரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக.

ய தேமாவென்பவன் இப்பிரபஞ்சத்தின் மேல் ஆசைவைத்து, என்னைவிட்டுத் தெசலோனிக்கேயூருக்குப் போனான். கிரேஸ்கேயென்பவன் கலாத்திநாட்டிற்குந் தீத்தென்பவன் தலுமாத்துநாட்டிற்கும் போனார்கள்.

யக லூக்காவென்பவன் மாத்திரம் என்னோடேயிருக்கிறான். மாற்கென்பவன் என் ஊழியத்திலே எனக்குப் பிரயோசனமாயிருக்கிறபடியினாலே அவனைக்கூட்டிக்கொண்டுவா.

யஉ தீகிக்கென்பவனை நான் எபேசுவூருக்கு அனுப்பினேன்.

யங துரோவாப்பட்டினத்திலுள்ள கற்பென்பவனிடத்திலே நான் வைத்துவந்த மேலங்கியையும் புத்தகங்களையும் விசேஷமாகத் தோற்காயிதங்களையும் நீ வருகிறபொழுது எடுத்துக்கொண்டுவா.

யச கன்னானாகிய அலெக்சந்தர் எனக்கு மிகுந்த தீமைகளைச் செய்தான். அவனுடைய கிரியைகளுக்குத் தக்கதாகக் கர்த்தர் அவனுக்குப் பதிற்கொடுக்கக்கடவர்.

யரு நம்முடைய வார்த்தைகளுக்கு அவன் மிகவும் விரோதித்தபடியால், நீயும் அவனைக்குறித்து எச்சரிக்கையாயிருப்பாயாக.

யசு நான் முதலிலே எனக்காக உத்தரவுசொல்லிநின்றபொழுது, ஒருவனும் என்பக்கமிராமல், யாவரும் என்னைவிட்டார்கள். அது அவர்களுக்குக் (குற்றமாக) எண்ணப்படாதிருப்பதாக.

யஎ (திவ்வியவசனம்) என்னாலே சம்பூரணமாய்ப் பிரசங்கிக்கப்படத்தக்கதாகவும், புறத்தேசத்தார் யாவரும் அதைக்கேட்கத்தக்கதாகவுங் கர்த்தர் மாத்திரம் என்பக்கத்திலிருந்து என்னைப் பலப்படுத்தினார். இப்படி நான் சிங்கத்தின் வாயிலிருந்து இழுக்கப்பட்டேன்.

யஅ மேலும் மற்றெந்தப் பொல்லாத கிரியையினின்றுங் கர்த்தர் என்னையிழுத்துத் தமது பரம இராச்சியத்திற் பிரவேசிக்கப்பண்ணி இரட்சிப்பார். அவருக்கு என்றென்றைக்குந் துதியுண்டாவதாக. ஆமென்.

யகூ பிரிஸ்காளுக்கும் அக்கிலாவுக்கும் ஒநேசிப்போருவின் குடும்பத்தாருக்கும் வாழ்த்துதல் செய்கிறேன்.

உய ஏரஸ்தென்பவன் கொரிந்துபட்டினத்திலே தரித்திருந்தான். துரோப்பீமுவென்பவனை மிலேத்துப்பட்டினத்திலே வியாதிப்பட்டவனாகவிட்டுவந்தேன்.

உக மாரிகாலத்திற்கு முன்னே நீ இங்கே வந்துசேரும்படி சாக்கிரதையாயிருப்பாயாக. ஐபூலுவும் புதேஞ்சும் இலீனுவுங் கலவுதியாளும் மற்றெல்லாச் சகோதரரும் உனக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.

உஉ கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து உன் ஆவியுடனேயிருக்கக்கடவர். கிருபை உங்களோடேயிருப்பதாக. ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தீத்துவுக்கு எழுதின

# நிருபம்.

## க. அதிகாரம்.

[(க) பவுல் தீத்துவை வாழ்த்தி, (ரு) அவன் கிரேத்தாத்தீவிலே வைக்கப்பட்ட முகாந்தரங்களைக் காட்டியது.]

பொய்யுரையாத பராபரன் இவ்வுலக காலங்களுக்கு முன்னே, நித்தியஜீவனைக்குறித்து வாக்குத்தத்தம்பண்ணி,

உ ஏற்றகாலங்களிலே நம்முடைய இரட்சகருடைய கட்டளையின்படி என்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட பிரசங்கத்தினாலே தமது வார்த்தையை வெளிப்படுத்தினார்.

ஙு அந்த நித்தியஜீவனைக்குறித்த நம்பிக்கையுண்டாகத்தக்கதாகத் தேவபக்திக்கேதுவான சத்தியத்தையறிகிற அறிவும் விசுவாசமும் தேவனால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்குண்டாகும்படிக்கு ஏதுவாய பராபரனுடைய ஊழியக்காரனுமாய் இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனுமாயிருக்கிற பவுலு,

ச பொதுவான விசுவாசத்தினாலே என்னுடைய உத்தமகுமாரனாகிய தீத்துவுக்கு எழுதுகிறதாவது, பிதாவாகிய பராபரனாலும் நம்முடைய இரட்சகருங்கர்த்தருமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உனக்குக் கிருபையும் சமாதானமுமுண்டாவதாக.

ரு நான் உனக்குக் கட்டளையிட்டபடி, நீ கிரேத்தாத்தீவிலே மீதுவானவைகளுங் குறைவாயிருக்கிறவைகளைச் செம்மைப்படுத்தி, பட்டினங்கள்தோறும் மூப்பரையேற்படுத்தும்படிக்கு உன்னை விட்டுவந்தேனே.

சு குற்றமில்லாதவனுமாய் ஒரே மனைவிக்குப் புருஷனுமாய்க் கெட்ட மார்க்கமென்னுங் குற்றமில்லாமையுங் கீழ்ப்படியுதலும் விசுவாசமுமுள்ள பிள்ளைகளையுடையவனுமாய ஒருவனிருந்தால், (அவனை வைக்கலாம்.) கண்காணியானவன் பராபரனுடைய உக்கிராணக்காரனுக்கேற்றதாகக் குற்றஞ்சாற்றப்படாதவனுமாய்,

எ தன் இஷ்டப்படி (மாத்திரஞ்) செய்ய மனதில்லாதவனுமாய்க் கோபமில்லாதவனுமாய் பழ ஓசத்தைமிகவும் விரும்பாதவனுமாய் அடிக்கிறவனாயிராதவனுமாய் அவலட்சணமான விதமாய ஆதாயத்தைத் தேடாதவனுமாய்,

அ அந்நியருக்கு உபசாரஞ்செய்கிறவனுமாய் நல்லோர்மேற்பிரியமுள்ளவனுமாய், விவேகமும் நீதியும் பரிசுத்தமும் இச்சையடக்கமுமுள்ளவனுமாய்,

கூ ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்திசொல்லவும், எதிர்பேசுகிறவர்களுக்குப் பேயறிவைக்கொடுக்கத் திராணியுள்ளவனாயிருக்கும்படிக்குத் தான் போதிக்கப்பட்டதற்கேற்ற உண்மையான உபதேசத்தை நன்றாய் அறிந்துகொள்ளுகிறவனுமாயிருக்கவேண்டுமே.

ய என்னத்தினாலென்றால் அநேகர் விசேஷமாய் விருத்தசேதனத்தையுடையவர்கள் (சத்தியத்திற்குக்) கீழ்ப்படியாதவர்களுமாய், வீணானவைகளைப்பேசுகிறவர்களுமாய், மனதைவஞ்சிக்கிறவர்களுமாயிருக்கிறார்கள்.

யக அவர்களுடைய வாயை யடக்கிப்போடவேண்டுமே. அவர்கள் அவலட்சணமான ஆதாயத்திற்காகத் தகாதவைகளையுபதேசித்து, முழுக்குடும்பங்களையுங் கவிழ்க்கிறார்கள்.

யஉ அவர்களிலொருவனாகிய தீர்க்கதரிசியானவன்தானே. கிரேத்தாத்தீவார் எப்பொழுதும் பொய்யருமாய்த் துஷ்டமிருகங்களுமாய்ச் சோம்பலுள்ள தேகிகளுமாயிருக்கிறார்களென்று சொன்னான்.

யஙு இந்தச் சாட்சிமெய்தான். அதுமுகாந்தரமாக, அவர்கள் விசுவாசத்திலே ஆரோக்கியமடையும்படிக்கும் இயூதருடைய கட்டுக்கதைகளுக்குஞ் சத்தியத்தை விட்டுவிலகுகிற மனிதருடைய கற்பனைகளுக்குஞ் செவிகொடாதிருக்கும்படிக்கும்,

யச நீயவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்துகொள்வாயாக.

யரு சுத்தமுள்ளவர்களுக்குச் சகலமுஞ் சுத்தமாயிருக்கும். அழுக்கும் அவிசுவாசமுமுள்ளவர்களுக்குமாத்திரம் ஒன்றுஞ் சுத்தமாயிருக்கமாட்டாது. அவர்களுடைய புத்தியும் மனச்சாட்சியும் அழுக்காயிருக்கிறதே.

௰௬ அவர்கள் பராபரனையறிகிறோமென்று சொல்லியும், தங்கள் கிரியைகளாலே அதை மறுதலிக்கிறார்கள். அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களாயும், கீழ்ப்படியாதவர்களாயும், எந்த நற்கிரியையையும் வகையறுக்கத் தெரியாதவர்களாயுமிருக்கிறார்களே.

## ௨. அதிகாரம்.

[(௧) தீத்து பலவிதமான மனிதர்களுக்குச் சொல்லவேண்டிய புத்திகளைக் காட்டியது.]

நீயே ஆரோக்கியமான உபதேசத்திற்கேற்றவைகளைப் பேசிக்கொள்வாயாக.

௨ முதிர்ந்த வயதுள்ள புருஷர்கள் தெளிந்த புத்தியுள்ளவர்களாயும் போக்கியமாயும் விவேகிகளாயும் விசுவாசத்திலும் அன்பிலும் பொறுமையிலும் ஆரோக்கியமுள்ளவர்களாயுமிருக்கும்படி (போதிப்பாயாக.)

௩ அப்படிப்போல, முதிர்ந்த வயதுள்ள ஸ்திரீகளும் பரிசுத்தருக்கேற்றவிதமாய் நடக்கிறவர்களாயும், பொய்யாய்க் குற்றஞ்சாற்றாதவர்களாயும் மிகுந்த திராட்சரசத்தைக் குடியாதவர்களாயும்,

௪ பராபரனுடைய வசனம் தூஷணிக்கப்படாதபடிக்கு வாலிப ஸ்திரீகள் தங்கள் புருஷரையும் பிள்ளைகளையும் சிநேகிக்கிறவர்களுமாய்,

௫ விவேகிகளுமாய்க், கற்புள்ளவர்களுமாய், வீட்டிலிருந்து காரியம் பார்க்கிறவர்களுமாய் நல்லவர்களுமாய்த் தங்கள் புருஷருக்குக் கீழ்ப்படிகிறவர்களுமாயிருக்கும்படி, அவர்களுக்குப் புத்தி சொல்லத்தக்க நற்போதகிகளாயுமிருக்கும்படிக்கு (போதிப்பாயாக.)

௬ அப்படிப்போல, வாலிபவயதுள்ள ஆண்பிள்ளைகளும் விவேகமாயிருக்கும்படி நீ புத்தி சொல்லி,

௭ நற்கிரியைகளுக்கேற்ற மார்க்கத்தை நீதானே எல்லாவற்றிலும் (மற்றவர்களுக்கு) திருஷ்டாந்தப்படுத்துவாயாக.

௮ அந்தப்படி எதிராளியானவன் உங்களைக் குறித்துப் பொல்லாங்கைச் சொல்லுதற்கொன்றுமில்லாமல், வெட்கப்படத்தக்கதாக நீ உபதேசத்திலே விகற்பமில்லாதவனுமாய் யோக்கியமுள்ளவனுமாய்க் குற்றம் பிடிக்கப்படக்கூடாத ஆரோக்கியமுள்ள வசனத்தைப் பேசுகிறவனுமாயிருப்பாயாக.

௯ அன்றியும் வேலைக்காரர் நம்முடைய இரட்சகராகிய பராபரனுடைய உபதேசத்தை எல்லாவற்றிலும் அலங்கரிக்கத்தக்கதாக,

௰ தங்கள் எசமானர்களுக்குக் கீழ்ப்படியவும், எதிர்ப்பேசாமல் எல்லாவற்றிலும் பிரியமாய் நடக்கவும் திருட்டுத்தனமாய் நடவாமற், சகலவிதமாயும் நல்லுண்மையைக் காண்பிக்கவும் புத்தி சொல்லுவாயாக.

௰௧ என்னத்தினாலெனில், இரட்சிப்பைக் கொடுக்கிற தேவகிருபை எல்லாவிதமான மனிதருக்கும் பிரசன்னமாகி,

௰௨ நாம் அவபத்தியையும் லவுகீக இச்சைகளையும் வெறுத்து, நற்புத்தியும் நீதியும் மெய்த்தேவபத்தியுமுள்ளவர்களாயும்,

௰௩ நாம் நம்பிக்கொள்ளுகிற பாக்கியம் வருமென்றும், நமக்கு மகா தேவனும் இரட்சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் மகிமை பிரசன்னமாகுமென்றும் காத்துக்கொண்டிருக்கிறவர்களாயும், இவ்வுலகத்திலே சீவனம் பண்ணும்படி நமக்குப் போதிக்கின்றது.

௰௪ அந்த இயேசுக்கிறிஸ்து நம்மைச் சகல அக்கிரமங்களினின்றும் மீட்டுக்கொண்டு, தமக்குச் சொந்தமாயும் நற்கிரியைகளைச் செய்ய மிகுந்த விருப்பமாயிருக்கிற சனங்களாகச் சுத்திகரிக்கும்படிக்கு, நமக்காகத் தம்மைத்தாமே (மரணத்திற்கு) ஒப்புக்கொடுத்தார்.

௰௫ இவைகளை நீ மிகுந்த அதிகாரத்தோடே போதித்து, புத்தி சொல்லிக் கடிந்து கொள்வாயாக. ஒருவனும் உன்னை அசட்டை பண்ணாதிருக்கக்கடவன்.

## ௩. அதிகாரம்.

[(௧) யாவரும் தேவசயலினாலே ஏவப்பட்டு நன்மைகளைச் செய்யப்பண்ணவேண்டுமென்றும், (௰) பதிதருக்கு நீதித்தீர்வை விதமாய்ச் செய்யவேண்டுமென்றும் சொல்லியது.]

துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் கீழ்ப்படிந்து அடங்கியிருக்கும்படிக்கும் எல்லாவிதமான நற்கிரியைகளையுஞ் செய்ய எத்தனமாயிருக்கும்படிக்கும்,

௨ ஒருவனையும் தூஷணியாமலும் சண்டைபண்ணாமலுமிருந்து சாதுவான மனதுள்ளவர்களாய் எல்லா மனிதருக்கும் எல்லாவிதத்திலுஞ் சாந்தத்தைக் காண்பிக்கும்படிக்கும், அவர்களுக்கு ஞாபகப்படுத்துவாயாக.

௩ என்னத்தினாலெனில் முற்காலத்திலே நாமும் புத்தியீனருமாய்க் கீழ்ப்படியாதவர்களுமாய் வஞ்சிக்கப்பட்டவர்களுமாய்ப் பலவிதமான இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைகளுமாய்த் துற்புத்தியோடும் பொறாமையோடுஞ் சீவனம்பண்ணுகிறவர்களுமாய் அருவருக்கப்படத்தக்கவர்களுமாய் ஒருவரையொருவர் பகைக்கிறவர்களுமாயிருந்தோம்.

௪ நம்முடைய இரட்சகராகிய பராபரனுடைய தயையும் மனிதர்மேலுள்ள அன்பும் பிரசன்னமானபொழுது,

ரு நாம் செய்த நீதிக்கேற்ற கிரியைகளினிமித்தமல்ல, மறுபிறப்பாகிய முழுக்கினாலும் பரிசுத்த ஆவி செய்கிற புதிதாக்குதலினாலுமே, அவர் தமது சுய இரக்கத்தினாலே நம்மையிரட்சித்தார்.

சு தமது கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டு நித்திய சீவனைக் குறித்து உண்டாயிருந்த நம்பிக்கையின்படி சுதந்தரராகும்படிக்கு,

எ அவர் நமது இரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துவின் மூலமாய், அந்தப்பரிசுத்த ஆவியை நமக்குச் சம்பூரணமாய்க் கொடுத்தருளினார்.

அ இந்தவார்த்தை யுண்மையுள்ளது. பராபரனிடத்தில் விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச் செய்ய எச்சரிக்கையாயிருக்கும்படிக்கு நீயந்த (சுதந்தரரை) க்குறித்துக் கெட்டியாய்ப் போதிக்க வேண்டுமென்றுவிரும்புகிறேன். இவைகளே நன்மையானவைகளாயும் மனிதருக்குப் பிரயோசனமானவைகளாயுமிருக்கின்றன.

கூ புத்தியீனமான தருக்கங்களும், வமிசவரிசைகளை ஆராய்தலும் வாக்குவாதங்களும், நியாயப்பிரமாணத்தைக் குறித்துண்டாகிற சண்டைகளும், அப்பிரயோசனமும் அபத்தமுமுள்ளவைகள். ஆகையால் அவைகளுக்கிடங்கொடாதிருப்பாயாக.

ய சத்தியத்தைப் புரட்டுகிறவனாயிருக்கிற ஒருவனுக்கு நீ இரண்டொருதரம் புத்திசொன்னபின்பு, (அவன் செவிகொடாவிட்டால்) அவனை விட்டுவிலகுவாயாக.

யக அப்படிப்பட்டவன் தாறுமாறுபட்டு தன்னிலே ஆக்கினைத்தீர்ப்புள்ளவனாய்ப் பாவஞ்செய்கிறவனென்று அறிந்துகொள்வாயாக.

யஉ நான் அருத்தேமாவை யாவது தீகிக்குவை யாவது உன்னிடத்தில் அனுப்பும்பொழுது, நீ சாக்கிரதையாய் நிக்கோப்போலியூருக்கு என்னிடத்தில் வருவாயாக. மாரிக்காலத்திலே அங்கே தங்க யோசனையாயிருக்கிறேன்.

யங நியாயசாஸ்திரியாகிய சேனாவும் அப்பொல்லோவும் பிரயாணமாய் வரும்பொழுது, அவர்களுக்குக் குறைச்சலொன்றுமிராதபடிக்கு விசாரித்துச் சாக்கிரதையாய் அவர்களை யனுப்பிவிடுவாயாக.

யச (கிரேத்தைத்தீவிலே) நம்மைச்சேர்ந்தவர்களுங் கனியற்றவர்களாயிராமற் குறைச்சல்களை நீக்கத்தக்கேற்ற நல்லதொழில்களை நடத்திக்கொள்ளப்படிக்கக் கடவர்கள்.

யரு என்னோடிருக்கிறயாவரும் உனக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள். விசுவாசத்தைப் பற்றிக்கொண்டு, நம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கு நான் வாழ்த்துதல் செய்கிறேன். கிருபை உங்களனைவரோடுங் கூடவிருக்கக்கடவது. ஆமென்.

அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலேமோனுக்கெழுதின

## நிருபம்.

[(க) பவுல் பிலேமோனை வாழ்த்தி, (ச) அவனுடைய விசுவாசத்தினாலே சந்தோஷப்பட்டு, (கூ) அவன் ஒநேசிமுசென்பவனுக்குக் குற்றத்தை மன்னித்து, அவனை மறுபடியுஞ் சேர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டது.]

கிறிஸ்து இயேசுவினிமித்தங் கட்டப்பட்டிருக்கிறவனாகிய பவுலுஞ் சகோதரனாகிய தீமோத்தேயுவும் எங்களுக்குப் பிரியனுமாய் உடன்வேலையாளுமாயிருக்கிற பிலேமோனுக்கும், எங்களுக்குப் பிரியமான அப்பியாளுக்கும்,

உ எங்களுடனே கூடப்போர்ச்சேவகனாகிய அர்க்கிப்புக்கும் உமது வீட்டிலே கூடிவருகிற சபைக்கும் எழுதுகிறதாவது,

ங நம்முடைய பிதாவாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவது.

ச கர்த்தராகிய இயேசுவின்மேலும் எல்லாப்பரிசுத்தவான்கள்மேலுமுள்ள உம்முடைய அன்பையும், உமது விசுவாசத்தையும் நான் கேள்விப்பட்டு,

ரு என் செபங்களில் உம்மை நினைத்துக்கொண்டு எப்பொழுதும் என் பராபரனுக்குத் தோத்திரஞ்செய்து,

௬ உங்களிலுள்ள சகலவித நன்மைகளையும் (மற்றவர்களும்) அறிந்துகொள்ளுகிறதினாலே, உமது விசுவாசத்தின் ஐக்கியமானது குணங்களிலிருந்து இயேசுவுக்காகப் பலனைக் காண்பிக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

௭ சகோதரனே! பரிசுத்தவான்களுடைய இருதயங்கள் உம்மாலே சுவஸ்தப்பட்டதால், உம்முடைய அன்பினாலே மிகுந்த சந்தோஷமும் ஆறுதலும் அடைந்திருக்கிறோம்.

௮ ஆகையால் விருத்தாப்பியமுள்ளவனுமாய் இயேசுகிறிஸ்துவினிமித்தம் இப்பொழுது கட்டப்பட்டவனுமாயிருக்கிற பவுலாகிய நான்.

௯ தகுதியான காரியத்தைக் குறித்து உமக்குக் கட்டளையிடும்படிக்குக் கிறிஸ்துவினாலே மிகுந்த தைரியமுள்ளவனாயிருந்தும், (அப்படிச் செய்யாமல்) அன்பினாலேயும்மை வேண்டிக்கொள்ளுகிறேன்.

௰ என்னவென்றால், நான் கட்டப்பட்டிருக்கையிற் பெற்றவனும்,

௰௧ முன்னே உமக்குப் பிரயோசனமில்லாதவனும் இப்பொழுது உமக்கும் எனக்கும் நல்லபிரயோசனமுள்ளவனுமாயிருக்கிற என் மகனாகிய ஒநேசிமுவுக்காகவே உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். அவனைத் திரும்ப அனுப்பினேன்,

௰௨ அவனை நீர் என் உள்ளம்போல ஏற்றுக்கொள்வீராக.

௰௩ சுவிசேஷத்தினிமித்தம் கட்டப்பட்டிருக்கிற எனக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு உமக்குப் பதிலாக அவனை என்னிடத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்றிருந்தேன்.

௰௪ ஆனாலும் உம்முடைய நன்மை கட்டாயத்தினாலல்ல, மனப்பூர்வத்தாலிருக்கத்தக்கதாக நான் உமது சம்மதியில்லாமல் ஒன்றுஞ்செய்ய மனதில்லை.

௰௫ இனிமேல் அவன் உமக்கு அடிமையானவனாகவல்ல, அடிமையானவனுக்கு மேலாகப் பிரியமான சகோதரனாகவும் என்றென்றைக்கும் உம்முடையவனாகவுமிருக்கும்படிக்கு,

௰௬ அவன் கொஞ்சக்காலமாய் உம்மைவிட்டுப் பிரிக்கப்பட்டானென்று நினைக்கிறது. எனக்கும் அவன் பிரியமான சகோதரன்தான். உமக்குச் சரீரத்தின்படியேயுங் கர்த்தர்நிமித்தமும் மிகவும் அதிகமாய் அப்படியிருக்கிறானல்லவா?

௰௭ ஆகையால் நீர் என்னை உமக்கு ஐக்கியமானவனென்றெண்ணினால், அவனை என்னைப்போல ஏற்றுக்கொள்ளவேண்டும்.

௰௮ அவன் உமக்கு யாதொரு அநியாயஞ்செய்ததும் அல்லது கடன்பட்டது முண்டானால், அதை என் கணக்கிலே எழுதுவீராக.

௰௯ பவுலாகிய நான் என் கையெழுத்துப் போட்டேன். நானே செலுத்தித் தீர்ப்பேன். நீர் உம்மைத்தாமே எனக்குக் கடனாகச் செலுத்தவேண்டுமென்று நான் உமக்குச் சொல்லாதபடிக்கு அப்படிச் செய்கிறேன்.

உ௰ ஆ! என் சகோதரனே! கர்த்தர்நிமித்தம் உம்மாலே இந்தப் பிரயோசனம் எனக்குண்டாகக்கடவது. கர்த்தர் நிமித்தம் என் இருதயத்தை ஆறுதல்செய்வீராக.

உ௧ நீர் கீழ்ப்படிவீரென்று நான் நிச்சயமாய் அறிந்து, இப்படி உமக்கு எழுதினேன். நான் கேட்டதற்கு மேலாகவுஞ் செய்வீரென்றும் அறிந்திருக்கிறேன்.

உ௨ அல்லாமலும் உங்கள் விண்ணப்பங்களினாலே உங்களுக்கு (திரும்ப) கொடுக்கப்படுவேனென்று நான் நம்பியிருக்கிறபடியால், நான் இருக்கும்படிக்கு ஓரிடத்தையெனக்காக எத்தனம்பண்ணுவீராக.

உ௩ கிறிஸ்து இயேசுவினிமித்தம் என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்டிருக்கிற எப்பாப்பிராவும்,

உ௪ என் உடன்வேலையாட்களாகிய மாற்குவும் அரிஸ்தர்க்குவும் தேமாவும் லூக்காவும் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள்.

உ௫ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியுடனே யிருக்கக்கடவது. ஆமென்.

# எபிரேயருக்கெழுதின நிருபம்.

## ௧. அதிகாரம்.

[(௧) இயேசுகிறிஸ்துநாதருடைய திவ்விய மகிமையைக் குறித்துச் சொல்லியது.]

பூர்வகாலத்திலே பலகாலங்களிலும் பலவிதமாயும் பராபரன் (நம்முடைய) முன்னோர்களுக்குத் தீர்க்கதரிசிகளின் மூலமாய்த் திருவுளம்பற்றினதுமன்றி,

௨ இந்தக் கடைசிக்காலத்திலே குமாரன் மூலமாய் நம்முடனே திருவுளம்பற்றினார். அவரைச் சகலத்திற்குஞ் சுதந்தரவாளியாக வைத்தார். அவராலே உலகங்களையும் உண்டாக்கினார்.

௩ அவர் பராபரனுடைய மகிமையின் பிரகாசமாயும் அவருடைய தன்மையின் சொரூபமாயும் எல்லாவற்றையுந் தமது வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவராயுமிருந்து, பின்பு தம்மாலேதாமே நம்முடைய பாவங்களை நிவர்த்திசெய்து, உன்னதத்திலுள்ள மகத்துவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிருக்கிறார்.

௪ இப்படி அவர் தேவதூதரிலும் அதிக விசேஷமாகச் சுதந்தரித்துக்கொண்ட நாமம் எவ்வளவோ அவ்வளவு அதிகமாய் அவர்களிலும் மேன்மையுள்ளவராயிருக்கிறார்.

௫ எப்படியெனில் நீர் என்னுடைய குமாரனென்றும் இன்று நான் உம்மைச் செனிப்பித்தேனென்றும், அவருக்குப் பிதாவாயிருப்பேன். அவர் எனக்குக் குமாரனாயிருப்பாரென்றும் பராபரன் ஒருகாலத்திலாகிலுந் தூதர்களில் ஒருவனுக்குச் சொன்னாரா?

௬ மறுபடியுந் தமது முதற்பேறானவரை இவ்வுலகத்திற் பிரவேசிக்கச் செய்தபொழுது, தேவதூதர்யாவரும் அவரைத் தொழுதுகொள்ளக்கடவர்களென்றார்.

௭ அன்றியுந் தேவதூதரைக்குறித்துச் சொல்லியிருக்கிறதாவது, தம்முடைய தூதர்களைக் காற்றுக்களாகவுந் தம்முடைய ஊழியக்காரரை அக்கினிச்சுவாலைகளாகவுஞ் செய்தாரென்று சொல்லியிருக்கிறது.

௮ குமாரனைக்குறித்து எப்படிச்சொல்லியிருக்கிறதென்றால், பராபரனே! உமது சிம்மாசனம் என்றென்றைக்குமுள்ளதாயிருக்கும். உம்முடைய இராச்சியத்திலுள்ள செங்கோல் செம்மையான செங்கோலாயிருக்கிறது.

௯ நீதியில் அன்புகூர்ந்து அக்கிரமத்தைப் பகைத்திருக்கிறீர் ஆதலால் பராபரனே! உமது பராபரன் உம்முடைய தோழரிலும் உம்மை மகிழ்ச்சியென்னும் எண்ணெயினாலே அபிஷேகம் பண்ணினாரென்றும்,

௰ கர்த்தாவே! ஆதியிலே நீர் பூமியை அஸ்திபாரப்படுத்தினீர் வானங்கள் உமது கைகளின் கிரியைகளாயிருக்கின்றன.

௰௧ அவைகள் அழிந்துபோம் நீர்மாத்திரம் நிலைநிற்பீர். அவைகளெல்லாம் வஸ்திரம்போலப் பழமையாய்ப்போம்.

௰௨ ஒரு சால்வையைப்போல அவைகளைச் சுருட்டுவீர். அப்பொழுது மாறிப்போம் நீர்மாத்திரம் (எப்பொழுதும்) ஒரேவிதமாயிருப்பீர். உம்முடைய ஆண்டுகள் முடிந்துபோவதில்லையென்றுஞ் சொல்லியிருக்கின்றது.

௰௩ மேலும், நான் உம்முடைய சத்துருக்களை உம்முடைய பாதபடியாக்கிப் போடுமளவும், என் வலதுபாரிசத்திலுட்காருமென்று இப்படி அவர் ஒருகாலத்திலாகிலுந் தூதர்களிலொருவனுக்குச் சொன்னாரா?

௰௪ இரட்சிப்பைச் சுதந்தரிப்பவர்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு அவர்களெல்லாரும் அனுப்பப்படுகிற பணிவிடை ஆவிகளாயிருக்கிறார்களல்லவா?

## ௨. அதிகாரம்.

[(௧) நாம் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியவேண்டுமென்றும், (௫) அதற்கு அவர் மகிமையைப் பெற்றிருக்கிறாரென்றுங் காட்டியது.]

ஆகையால் நாங்கேட்டறிந்தவைகளை விட்டுவிலகாதபடிக்கு அதிக எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

௨ என்னத்தினாலெனில் தேவதூதரால் சொல்லப்பட்ட வசனத்திற்கு விரோதமான எந்தச்செய்கைக்குங் கீழ்ப்படியாமைக்கும் நீதியான தண்டனை வருத்தக்கதாக, அவர்களுடைய வசனம் உறுதிப்பட்டிருந்ததாயிருக்க,

௩ முதலாவது, கர்த்தராலேயறிவிக்கப்பட்டு, பின்பு அவரிடத்திற்கேட்டவர்களால நமக்கு உறுதியாக்கப்பட்டதுமாய்,

௪ அடையாளங்களினாலும அற்புதங்களினாலும பலவிதமான பலத்த செய்கைகளினாலும பரிசுத்த ஆவியைத்தமமுடைய சித்தத்தின்படி (நமக்கு) பகிந்துகொடுத்ததினாலும பராபரனசாட்சி கொடுக்கப்பட்டதுமாயிருக்கிற இவ்வளவு பெரிதான இரட்சிப்பைக்குறித்து நாம கவலையில்லாமற்போனால (தண்டனைக்கு) எபபடித்தப்பிப்போவோம?

௫ அன்றியும இனிமேல்வரும உலகத்தைக்குறித்துப்பேசுகிறோமே. அதையவர் தூதர்களுக்குக்கீழ்ப்படுத்தவில்லை. ஒரு இடத்திலே ஒருவன சாட்சியாயச் சொன்னது,

௬ மனிதனை நீர் நினைத்துக்கொள்ளுகிறதற்கும அவலதுமனிதனுடைய புத்திரனை நீர் விசாரித்துக்கொள்ளுகிறதற்கும அவன எமமாத்திரம்?

௭ கொஞ்சக்காலமாய் அவனைத்தேவதூதரிலுஞ்சிறியவனாக்கினீர். பின்புமகிமையோடுங்கனத்தோடும அவனுக்கு முடிசூட்டி, உமமுடையகைகளின கிரியைகளுக்கு அதிகாரியாகவைத்து சசசலத்தையும அவனுடையபாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீரென்றான்.

௮ இந்தப்படியவர்சகலத்தையும அவனுக்குக்கீழ்ப்படுத்துகையில அவனுக்குக் கீழ்ப்படடிராதபடிக்குத்தாம ஒருபொருளையுமவைத்துக்கொள்ளவில்லை. இப்பொழுதுசகலமும அவனுக்குக் கீழ்ப்படடக்காணோம.

௯ இயேசுவானவர் மாத்திரம் பராபரனுடையகிருபையினாலே, யாவருக்காகவும மரணத்தை யனுபவிக்கும்பொருட்டாக்கொஞ்சக்காலமாயத் தேவதூதரிலுஞ்சிறியவராக்கப்பட்டுப்பின்பு மரணத்தைச்சகித்ததினாலே மகிமையோடுங் கனத்தோடுமமுடிசூட்டப்படக்காணகிறோம.

௰ மேலுந்தமக்காகச் சகலத்தையுமுண்டாக்கினவர் அநேகமபிள்ளைகளை மகிமையிற்கொண்டுபோகையில அவர்களுக்கு இரட்சணணியத்தையுண்டாக்கின அதிபதியை உபத்திரவங்களினவழியாயத் தேறினவராக்குகிறது அவருக்குத்தகுதியா யிருந்தது.

௰௧ எபபடியெனறால பரிசுத்தஞ்செய்கிறவரும பரிசுத்தஞ் செய்யப்படுகிறவர்களுமாகியயாவரும ஒருவரிலிருந்துவருகிறார்கள். அதினாலேதானே, அவர்களைச்சகோதரரென்றழைக்கவெட்கப்படாமல,

௰௨ உமமுடைய நாமத்தையென் சகோதரருக்கறிவித்துச் சபையாருக்குள்ளே உமக்குத்துதியாகப் பாடுவேனென்றும,

நான அவரிடத்தில நமபிக்கையாயிருப்பேனென்றும,

௰௩ இதோ, நானும்பராபரன் எனக்குக் கொடுத்தபிள்ளைகளுமென்றுஞ் சொல்லியிருக்கிறார்.

௰௪ அன்றியும பிள்ளைகளமாமிச இரத்த தேகமுள்ளவர்களாயிருக்க, அவருமமரணத்தைவருவிக்கவல்லமையுடையவனாகிய பசாசைத் (தமது) மரணத்தினாலே யழிக்குமபடிக்கும,

௰௫ ஜீவகாலமளவும மரணத்திற்குப்பயந்து அடிமையாயிருந்தயாவரையும விடுதலைபண்ணுமபடிக்கும அவர்களைப்போல மாமிச இரத்த தேகமுள்ளவரானார்.

௰௬ ஆதலால் அவர் தேவதூதரின சுபாவத்தையெடுத்துக்கொள்ளாமல் ஆபிரகாமினசந்ததியிலே (மனித சுபாவத்தை) யெடுத்திருக்கிறார்.

௰௭ அன்றியும அவர் (தமமுடைய) சனங்களினபாவங்களை நிவர்த்திசெய்வதற்கேதுவாக இரக்கமுள்ளவராயும பராபரனுக்குரியவைகளைக்குறித்து உண்மையானபிரதான ஆசாரியராயுமிருக்குமபடிக்கு எவவிதத்திலுந (தமமுடைய) சகோதரருக்கொப்பாகவேண்டியதாயிருந்தது.

௰௮ ஆனதால அவர்தாமேசோதிக்கப்பட்டுப்பாடு அனுபவித்ததினாலே, சோதிக்கப்படுகிறவர்களுக்குச்சகாயஞ்செய்யத் திராணியுள்ளவராயிருக்கிறார்.

## ௩. அதிகாரம்.

[(௧) மோசேயிலும இயேசுவானவர் அதிகமகிமையுள்ளவரென்றும, (௭) அவராலே ஆசீர்வாதத்தைப்பெறுமபடிக்கு நாம அவிசுவாசத்திற்கு இடங்கொடுக்கக்கூடாதென்றுங்காட்டியது.]

௧ இப்படியிருக்கப, பரம அழைப்பையடைந்தவர்களாகிய பரிசுத்தசகோதரரே! நாம அறிக்கைபண்ணுகிற அப்போஸ்தலருமாயப்பிரதான ஆசாரியருமாயிருக்கிற கிறிஸ்து இயேசுவை உற்றுப்பாருங்கள்.

௨ மோசேயென்பவன் தேவ ஆலயமெங்கும உண்மையாயிருந்ததுபோல, அவருந்தமமை ஏறபடுத்தினவருக்கு உண்மையுள்ளவராயிருந்தார்.

௩ எந்த ஆலயமும மனிதனாலேயுண்டாக்கப்பட்டிருக்கின்றது. பராபரன சகலத்தையுமுண்டாக்கினவர்.

௪ ஆகையால ஆலயத்திலும ஆலயத்தையுண்டாக்கினவருக்கு உண்டாயிருக்கிறகனமெவவளவோ அவவளவாய மோசேயிலும இயேசுவானவர் அதிகமகிமைக்குப்பாத்திரராயிருக்கிறார்.

௫ அந்தப்படிசொல்லவேண்டியிருந்தவைகளுக்குச்சாட்சியாக, மோசே ஊழி

யக்காரனாய் அவருடைய ஆலயமெங்கும் உண்மையுள்ளவனாயிருந்தான்.

௬ ஆகிலுங் கிறிஸ்துவானவர் அவருடைய ஆலயத்திற்கு மேலான குமாரனாய் (உண்மையாய்) இருக்கிறார். (நித்தியஜீவனென்னும்) நம்பிக்கைக்கேற்ற தைரியத்தையும் மேன்மைபாராட்டலையும் முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக்கொண்டால், நாமே அவருடைய ஆலயமாயிருப்போம்.

௭ ஆகையால் பரிசுத்த ஆவியானவர் சொல்லுகிறபடியே, இன்று நீங்கள் அவருடைய சத்தத்தைக் கேட்கையில் வனாந்தரத்திலே,

௮ உங்கள் முன்னோர்கள் என்னைச் சோதித்து என்னைக் கோபமூட்டின நாளிலே நடந்ததுபோல,

௯ உங்களிருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள். அவர்கள் நாற்பது வருஷமாய் என்னுடைய கிரியைகளைக் கண்டிருந்தும் என்னைச் சோதித்து என்னை நிதானித்தார்கள்.

௰ ஆனதால் நான் அந்தச் சந்ததியை அரோசித்து, அவர்கள் எப்பொழுதும் வழிதப்பி நடக்கிற மனதுள்ளவர்கள்; என்னுடைய நெறிகளையறியாதிருக்கிறார்களென்று சொல்லி,

௰௧ இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்தில் அவர்கள் பிரவேசியாமலிருக்கக்கடவர்களென்று என்துகோபத்தினாலே ஆணையிட்டேனென்றார்.

௰௨ அந்தப்படி சகோதரரே! ஜீவனுடைய பராபரனை விட்டுவிலகுதற்கேதுவான அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்களிலொருவனிடத்திலும் இராதபடிக்கு நீங்கள் எச்சரிக்கையாயிருந்து,

௰௩ உங்களிலொருவனாகிலும் பாவத்தின் வஞ்சனையினாலே கடினப்பட்டுப்போகாதபடிக்கு, இன்றென்னப்படுமளவும் ஒருவருக்கொருவர் நாடோறும் புத்திசொல்லிவருவீர்களாக.

௰௪ நாம் நம்பிக்கையையடைந்த முதல் முடிவுபரியந்தம் அதை உறுதியாய்ப் பற்றிக்கொண்டால் நாங் கிறிஸ்துவினிடத்திற் பங்குள்ளவர்களாயிருப்போமே.

௰௫ இன்றைக்கு நீங்கள் அவருடைய சத்தத்தைக் கேட்கையிற் கோபமூட்டுதலுள்ள நாளிலே நடந்ததுபோல உங்களிருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்களென்று சொல்லியிருக்கிறபடியால், அப்படியே புத்திகொள்ளவேண்டும்.).

௰௬ அதெப்படியெனிற் கேட்டவர்களிற் சிலர் கோபமூட்டினார்கள். அப்படிச் செய்தவர்கள் மோசேயினாலே எகிப்திலிருந்து புறப்பட்டயாவருமல்ல, மேலும் அவர் நாற்பது வருஷமாய் எவர்களையரோசித்தார்.

௰௭ பாவஞ்செய்தவர்களையல்லவா? அவர்களுடைய சரீரங்கள் வனாந்தரத்திலே விழுந்துபோயின.

௰௮ பின்னும் இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்திலே பிரவேசியாதிருக்கக்கடவர்களென்று அவர் ஆரைக்குறித்து ஆணையிட்டார்? விசுவாசியாதவர்களைக் குறித்தல்லவா?

௰௯ ஆனதால், அவிசுவாசத்தினாலே அவர்கள் அதிற் பிரவேசிக்கக் கூடாமற்போனார்களென்று பார்க்கிறோமே.

## ௪. அதிகாரம்.

[(௧) நமக்காகப் பிரதான ஆசாரியராகிய கிறிஸ்து பரலோகத்திற்குப் போனபடியால் நாமும் அதிற் பிரவேசிக்கும்படிக்கு விசுவாசத்திலே நிற்கவேண்டுமென்று காட்டியது.]

௧ ஆனபடியினாலே இளைப்பாறுதற்கான அவருடைய இடத்திலே பிரவேசிக்கும்படிக்கேற்ற வாக்குத்தத்தம் இன்னும் நமக்குண்டாயிருக்க, நம்மிலொருவனாகிலும் (அதையடையாதபடித்) தாமதமாயிருக்கிறவனாகத் தோன்றாதபடிக்குப் பயந்திருக்கக்கடவோம்.

௨ எப்படியெனிற் சுவிசேஷம் அவர்களுக்கறிவிக்கப்பட்டதுபோல, நமக்கும் அறிவிக்கப்பட்டது. அந்த வசனத்தைக் கேட்டும் அவர்களுக்குள்ளே விசுவாசமில்லாதபடியால், அந்தக் கேள்வி அவர்களுக்குப் பிரயோசனமாயிருக்கவில்லை.

௩ விசுவாசிகளாகிய நாம் இளைப்பாறுதற்கான இடத்திற் பிரவேசிப்போம். அதற்குத் திருஷ்டாந்தமாக உலகஞ்சிருஷ்டிக்கப்பட்டபொழுது தம்முடைய கிரியைகளைச் செய்துமுடித்து இளைப்பாறின பின்பவர் சொன்னது, இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்திலே அவர்கள் பிரவேசிப்பதில்லையென்று நான் ஆணையிட்டேனென்று சொன்னார்.

௪ அதற்குத் திருஷ்டாந்தமாக ஓரிடத்திலே ஏழாம் நாளைக்குறித்துச் சொல்லியிருக்கிறதென்னவென்றால் பராபரன் ஏழாம் நாளிலே தம்முடைய கிரியைகளையெல்லாம் முடித்து, ஆரோதையாயிருந்தாரென்று சொல்லியிருக்கிறது.

௫ மறுபடியும் மேற்சொல்லிய இடத்திலேயவர்கள் இளைப்பாறுதற்கான என்னுடைய இடத்திற் பிரவேசியாமலிருக்கக்கடவர்களென்றுஞ் சொல்லியிருக்கிறார்.

௬ ஆகையால் பின்னுஞ் சிலர் அதிற் பிரவேசிக்கிறதற்கேதுவுண்டாயிருந்தபடியினாலும் முதலாவது சுவிசேஷத்தைக் கேட்டவர்களும் அவிசுவாசத்தினாலே அதிற் பிரவேசியாமற்போனபடியினாலும்,

௭ இன்று அவருடைய சத்தத்தைக் கேட்கையில் உங்களிருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்களென்று அநேககாலத்திற்குப் பின்பு தாவீதின் புத்தகத்திலே சொல்லியிருக்கிறபடி, இன்றைக்கென்பதினாலே (பராபரன்) பின்னும் ஒரு நாளைக் குறித்திருக்கிறார்.

௮ இயோசுவாவென்பவன் அவர்களை இளைப்பாறச்செய்தானானால் பின்பு அவர் வேறொரு நாளைக்குறித்துப் பேசமாட்டாரே.

௯ ஆனபடியால், இளைப்பாறும்படிக்கான காலம் பின்னும் பராபரனுடைய சனங்களுக்கு வருகிறதாயிருக்கின்றது.

௰ அந்தப்படி பராபரன் தமது கிரியைகளை முடித்து ஓய்ந்திருந்ததுபோல இளைப்பாறுதற்கான அவருடைய இடத்திற் பிரவேசித்தவனுந் தன் கிரியைகளை முடித்தோய்ந்திருப்பான்.

௰௧ ஆகையால் அந்தத் திருஷ்டாந்தத்தின்படி ஒருவனாகிலும் அவிசுவாசத்தினாலே விழாதபடிக்கு நாம் மேற்சொல்லிய இளைப்பாறுதற்கான இடத்திற் பிரவேசிக்கச் சாக்கிரதையாயிருக்கக்கடவோம்.

௰௨ பராபரனுடைய வார்த்தை யுயிர்ப்பிக்கிறதுமாயப் பலமுள்ளதுமாய் இருபுறமுங் கருக்குள்ள எந்தக் கத்தியிலுங் கருக்கானதுமாய், ஆத்துமாவையும் ஆவியையும் (சரீர) மொழிகளையும் ஊனையும் பிரிக்கத்தக்கதாக உருவக் குத்துகிறதுமாய் இருதயத்தின் சிந்தனைகளையும் யோசனைகளையும் வகையறுத்துத் தீர்க்கிறதுமாயிருக்கிறதே அவருக்குமுன்பாகத் தோன்றாதிருக்கிற சிருட்டியொன்றுமில்லை.

௰௩ சகலமும் அவருடைய கண்களுக்கு முன்பாக நிருவாணமாயும் வெளியரங்கமாயுமிருக்கின்றன. அவருக்கே நாங் கணக்கு ஒப்புவிக்கவேண்டும்.

௰௪ ஆகையால், வானங்களின்வழியாய் (பரமண்டலத்திற்குப்) போனவருங் குமாரனாகிய இயேசுவென்னும் மகாபிரதான ஆசாரியர் நமக்கிருக்கிறபடியினாலே, (அவரை) அறிக்கையிடுகிறதில் உறுதியாயிருக்கக்கடவோம்.

௰௫ அவர் நம்முடைய பலவீனங்களைக் குறித்து நமக்கிரங்கத் திராணியில்லாத பிரதான ஆசாரியரல்லவே. பாவத்தைத் தவிர மற்றெந்தவிதத்திலும் நம்மைப்போலச் சோதிக்கப்பட்டாரே.

௰௬ ஆதலால் நாம், இரக்கத்தைப் பெற்றுக்கொள்ளும்படிக்கும், காலத்திற்கேற்ற உதவியாகிய கிருபையை யடைந்துகொள்ளும்படிக்குந் தயிரியமாய்க் கிருபாசனத்தினிடத்திலே சேரக்கடவோம்.

## ௫. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் பிரதான ஆசாரியப்பட்டமுள்ளவரென்றுகாட்டியது.]

அன்றியும் மனிதரிலே சேர்க்கப்பட்ட பிரதான ஆசாரியனானவனும் பாவங்களுக்காகக் காணிக்கைகளையும் பலிகளையுஞ் செலுத்தி, இப்படி மனிதருக்காகத் தேவகாரியங்களை நடப்பிக்கும்படிக்கு வைக்கப்படுவான்.

௨ அல்லாமலும் அவன்தானும் பலவீனமுள்ளவனாயிருந்ததினாலே, அறியாதவர்களுக்கும் வழிவிட்டுப்போனவர்களுக்கும் மனதுருக்கமாயிருக்கத்தக்கவனாயிருப்பான்.

௩ அந்த முகாந்திரத்தினாலே அவன் சனங்களுடைய பாவங்களுக்காகப் பலியிடுகிறதுபோலத் தன்னுடைய பாவங்களுக்காகவும் பலியிடவேண்டியதாயிருக்கிறது.

௪ மேலும் ஒருவனாகிலும் அந்தக் கனமான உத்தியோகத்தைத் தன்னாலே யேற்றுக்கொள்ளாமல், ஆரோன் அழைக்கப்பட்டதுபோலப் பராபரனாலே யதற்கு அழைக்கப்படுவான்.

௫ அந்தப்படி கிறிஸ்துவும் பிரதான ஆசாரியராகிறதற்குத் தம்மைத்தாமே யுயர்த்தவில்லை. நீர் என்னுடைய குமாரன். இன்று நான் உம்மைச் சனிப்பித்தேனென்று அவரோடே (சொன்னவரே அவரையுயர்த்தினார்.)

௬ அப்படியே வேறொரு இடத்திலேயும், நீர் மெல்கிசேதேக்கின் முறைமையாய் என்றென்றைக்கும் ஆசாரியரானவரென்று சொல்லியிருக்கிறது.

௭ (அன்றியும்) அவர் மனிதனாகப் பூமியிலே சஞ்சரிக்கையில் தம்மை மரணத்தினின்று இரட்சிக்கவல்லமையுள்ளவரை நோக்கிப், பலத்த சத்தத்தோடும் அழுகையோடும் விண்ணப்பம்பண்ணி, மிகவும் வேண்டிக்கொண்டு, தமக்குண்டான பயத்தினின்று விடுதலையாக்கப்பட்டு,

௮ குமாரனாயிருந்துந் தாம் பட்டபாடுகளாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு,

௯ தாந் தேறினவரானபின்பு தமக்குக் கீழ்ப்படிகிற யாவருக்கும் நித்தியமான இரட்சிப்பையடைவதற்குக் காரணராகி,

௰ (இப்படி) பராபரனாலே மெல்கிசேதேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசாரியரென்று வாழ்த்தப்பட்டார்.

௰௧ இந்தச் சங்கதியைக் குறித்து நான் விஸ்தாரமாய்ப் பேசலாம். நீங்கள் தாமதமாய் அறிகிறவர்களானபடியால் அதை விவரித்துக்காண்பிக்கிறது அரிதாயிருக்கின்றது.

௰௨ காலத்தைப் பார்க்கிறபொழுது போதகராயிருக்கவேண்டிய உங்களுக்குப் பராபரனுடைய வாக்கியங்களின் முதல் நியாயங்களை மறுபடியும் உபதேசிக்கவேண்டி

யதாயிருக்கிறது. உண்மையல்ல, பாலைச்சாப்பிடத்தக்கவர்களானீர்கள்.

௰௩ பாலுண்கிறவன் குழந்தையாயிருக்கிறபடியினாலே நீதிக்குரிய வசனத்தையறிந்துகொள்ளத் திராணியானல்லவே.

௰௪ கெட்டியான உணவு நிறைவயதுள்ளவர்களாய், நன்மையையுந் தீமையையும் வகையறுக்கிறதற்கு முயற்சியினாலே தகுதியாக்கப்பட்ட புத்தியுள்ளவர்களாயிருக்கிறவர்களுக்கேயுரியதாயிருக்கிறது.

## ௬. அதிகாரம்.

[(௧) அவராலேயுண்டாயிருக்கிற நன்மைகளைத் தள்ளாமல் திவ்விய அறிவிலே வளர்ந்து விசுவாசத்திலும் பொறுமையிலும் ஜாக்கிரதையாயிருக்கும்படிக்குப் புத்திகளைச் சொல்லியது.]

ஆகையால் மரணத்திற்கேதுவான கிரியைகளை விட்டு மனந்திரும்புகிறதற்கும், பராபரனை விசுவாசிக்கிறதற்கும்,

௨ ஸ்நானங்களுக்கடுத்த உபதேசத்திற்கும், கைகளை வைக்கிறதற்கும், மரித்தோரிலிருந்துயிரோடெழும்புதற்கும், நித்தியமான நியாயத்தீர்ப்புக்கும் ஏதுவான உபதேசங்களினாலே நாம் மறுபடியும் அஸ்திபாரம் போடாதபடிக்கு, கிறிஸ்துவுக்குரிய முதல் நியாயங்களைச் சொல்லுகிற உபதேசத்தை நாம் இப்பொழுது நிறுத்தி, உயர்ந்த உபதேசங்களைக்குறித்துப் பேசிக்கொள்ளுவோமாக.

௩ பராபரனுக்குச் சித்தமானால், அப்படியே செய்வோம்.

௪ என்னத்தினாலெனில், ஒருகாலத்திலே பிரகாசமாக்கப்பட்டும், பரம ஈவை ருசிபார்த்தும், பரிசுத்த ஆவியைப் பெற்றும்,

௫ பராபரனுடைய நல்வார்த்தையையும் இனிமேல் வரும் யுகத்தின் வல்லமைகளையும் ருசிபார்த்துமிருக்கிறவர்கள் மறுதலித்து விழுந்தபின்பு,

௬ பராபரனுடைய குமாரனைத் தங்களுக்குள்ளே மறுபடியுஞ் சிலுவையில் அறைந்து அவகீர்த்திசெய்தபடியால் மனந்திரும்புதற்கேதுவாய் அவர்களை மறுபடியும் புத்தாக்கக்கூடாத காரியமாயிருக்கிறது.

௭ இதற்குத் திருஷ்டாந்தமாக, பூமியானது தனக்கு அடிக்கடி வருகிற மழையை உட்கொண்டு தன்னிடத்திற் பயிரிடுகிறவர்களுக்கேற்ற பயிரை முளைப்பிக்கும்பொழுது, பராபரனாலே ஆசீர்வதிக்கப்படுகிறது.

௮ முட்செடிகளையும் முட்பூண்டுகளையும் முளைப்பிக்கிற நிலந்தகாததாயுஞ் சபிக்கப்படுகிறதற்குச் சமீபமாயுமிருக்கிறது. கடைசியிலே அது முழுவதுங் காய்ந்துபோம்.

௯ பிரியமானவர்களே! நாங்கள் இப்படிச் சொல்லியும், இரட்சிப்புக்கேற்ற நன்மையான யோசனைகள் உங்களுக்குண்டாயிருக்கிறதென்று நம்பிக்கையாயிருக்கிறோம்.

௰ பராபரனும் உங்கள் கிரியையையும் பரிசுத்தவான்களுக்கு நீங்கள் ஊழியஞ்செய்ததினாலுஞ் செய்துவருகிறதினாலுந் தமது நாமத்திற்காகக் காண்பித்த அன்புள்ள பிரயாசத்தையும் மறக்கத்தக்கதாக அநியாயமுள்ளவரல்லவே?

௰௧ ஆகையால் நீங்கள் தாமதமாயிராமல், வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை விசுவாசத்தினாலும் நீடிய பொறுமையினாலுஞ் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களைப் பின்பற்றுகிறவர்களாயிருக்கும்படிக்கு,

௰௨ நீங்கள் யாவரும் (எங்கள்) நம்பிக்கை பரிபூரணமுள்ளதாகும்படி முடிவுபரியந்தஞ் சாக்கிரதையைக் காண்பிக்கவேண்டுமென்று ஆசையாயிருக்கிறோம்.

௰௩ ஆபிரகாமுக்குப் பராபரன் வாக்குத்தத்தம்பண்ணினபொழுது, ஆணையிடும்படி தம்மிலும் பெரியவரொருவருமில்லாதபடியினாலே தமதுபேரிலே ஆணையிட்டு,

௰௪ நான் உன்னை மிகவும் ஆசீர்வதித்து உன்னை மிகவும் பெருகப்பண்ணுவேனென்றார்.

௰௫ அவனும் அந்தப்படியே பொறுமையாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றான்.

௰௬ அதெப்படியெனில், மனிதர்கள் தங்களிலும் பெரியவன்பேரில் ஆணையிடுவார்கள். உறுதிபண்ணும்படிக்கேற்ற ஆணையே அவர்களுக்குள்ளே சகல வியாச்சியங்களையும் நிறைவேற்றும்.

௰௭ அந்தப்படி பராபரனும் வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறவர்களுக்குத் தமது யோசனையின் மாறாத நிச்சயத்தைக் காண்பிக்கும்படி அதிக சித்தமுள்ளவராய் ஓராணையினாலே அவைகளை ஸ்திரப்படுத்தினார்.

௰௮ பராபரன் பொய்பேசக் கூடாததாயிருக்க, நாம் நம்பிக்கொள்ளும்படி நமக்கு முன்வைக்கப்பட்டதைப் பிடிக்கிறதற்கு ஓடிவந்த நாம் மாறாத இரண்டு பொருட்களினாலே பலத்த ஆறுதலுள்ளவர்களாகும் பொருட்டாக அப்படிச்செய்தார்.

௰௯ அந்த நம்பிக்கை நம்முடைய ஆத்துமாவுக்கு நிலையும் உறுதியுமான நங்கூரம்போலாகித் திரைச்சீலைக்குட்போகிறதாயிருக்கிறது.

௨௰ நமக்குமுன்னோடினவராகிய இயேசு மெல்கிசேதேக்கின் முறைமையின்படி நித்தியமான பிரதான ஆசாரியராய் நமக்காக அந்தத் திரைச்சீலைக்குட் பிரவேசித்திருக்கிறார்.

## ௭. அதிகாரம்.

[(௧) இயேசுவானவர் மெல்கிசேதேக்கின் முறைமைப்படிக்கு ஆசாரியரானபடியினாலே லேவியராகிய ஆசாரியரிலும் மேன்மையுள்ளவராயிருக்கிறாரென்றுகாட்டியது.]

௧ அந்த மெல்கிசேதேக்கென்பவன் இராசாக்களை யடித்துத் திரும்பிவந்த ஆபிரகாமுக்கு எதிர்கொண்டு, அவனை யாசீர்வதித்து அவனாலே பத்திலொருபாகத்தைப் பெற்றுக்கொண்டவன்.

௨ அவன் சாலேமின் இராசாவுமுன்னதமான தேவனுக்கு முன்பாக ஆசாரியனுமிருந்தவன். முதற்பேராகிய மெல்கிசேதேக்கென்பதற்கு நீதியுள்ள இராசாவென்று அருத்தமாம். பின்பு சாலேமின் இராசாவென்பதற்குச் சமாதானமுள்ள இராசாவென்றருத்தமாம்.

௩ அவன் தகப்பனுந் தாயும் வம்ச அட்டவணையுமில்லாதவன். அவனுடைய (உற்பத்தியோக) நாட்களின் ஆரம்பமுஞ் சீவனின் முடிவுஞ் சொல்லப்படாதிருத்தலே, அவன் பராபரனுடைய குமாரனுக்கு ஒப்பாக்கப்பட்டவனாய்த் தன்முழுச்சீவ காலமளவும் ஆசாரியனாயிருக்கிறான்.

௪ அவனுடைய மேன்மையைப் பார்ப்பீர்களாக கோத்திரத் தலைவனாகிய ஆபிரகாமுங் கொள்ளையிடப்பட்டவைகளிற் பத்திலொருபாகத்தை யவனுக்குக் கொடுத்தானே.

௫ லேவியின் புத்திரரில் ஆசாரியப்பட்டத்தை யடைகிறவர்களும் ஆபிரகாமின் சந்ததியாராகவேயிருக்கிற தங்கள் சகோதரராகிய சனங்களின் கையிலே நியாயப்பிரமாணத்தின்படிப் பத்திலொன்றை வாங்குகிறதற்குக் கட்டளை பெற்றிருக்கிறார்கள்.

௬ அது மெய்தான். ஆகிலும் அவர்களுடைய வம்சத்திலிராதவனாகிய (மெல்கிசேதேக்கென்பவன்) பத்திலொன்றை ஆபிரகாமின் கையிலே வாங்கி வாக்குத்தத்தங்களைப் பெற்றவனையே ஆசீர்வதித்தான்.

௭ சிறியவன் பெரியவனாலே ஆசீர்வதிக்கப்படுவான்.

௮ அதற்குச் சந்தேகமில்லையே. அன்றியும் இவ்விடத்திலே மரிக்கத்தக்க மனிதர் பத்திலொன்றை வாங்குவார்கள். அவ்விடத்திலே பிழைத்திருக்கிறானென்று சாட்சி பெற்றவன் வாங்கினான்.

௯ அன்றியும் மெல்கிசேதேக்கென்பவன் ஆபிரகாமுக்கெதிர்கொண்டுபோனபொழுது, லேவியானவன் தன் தகப்பனுடைய அரையிலிருந்தபடியால்,

௰ பத்திலொன்றை வாங்குகிற லேவியும் ஆபிரகாமினாலே பத்திலொன்றைக் கொடுத்தானென்று சொல்லலாம்.

௰௧ அல்லாமலும் (இஸ்ரவேல்) சனங்கள் லேவிகோத்திர ஆசாரிய முறைமைக்குள்ளாயல்லவோ நியாயப்பிரமாணத்தைப் பெற்றார்கள். அந்த லேவிகோத்திர ஆசாரியமுறைமையினாலே நிறைவுள்ள ஆசீர்வாதம் மெய்யாய் வந்தால் ஆரோனுடைய முறைமையின்படியல்ல, மெல்கிசேதேக்கினுடைய முறைமையின்படியே யழைக்கப்பட்ட வேறொரு ஆசாரியன் எழும்பவேண்டுவதென்ன?

௰௨ ஆகையால் ஆசாரிய முறைமை மாற்றப்பட்டிருக்க, நியாயப்பிரமாணமும் மாற்றப்படவேண்டியதாயிருந்தது.

௰௩ இவைகள் சொல்லப்பட்டிருக்கிறவர் எவரோ அவர் வேறொருகோத்திரத்தைச் சேர்ந்தவராயிருக்கிறார். அந்தக்கோத்திரத்திலொருவனாயினும் பலிபீடத்திலே ஆராதனைசெய்யவுமில்லையே.

௰௪ நம்முடைய கர்த்தரானவர் யூதாவின் கோத்திரத்திற் பிறந்தாரென்பது நிச்சயமாயிருக்கிறதே. அந்தக்கோத்திரத்தாருக்கு மோசேயென்பவன் ஆசாரியப்பட்டத்தைக்குறித்து ஒன்றுஞ் சொல்லவில்லையே.

௰௫ அல்லாமலும் மெல்கிசேதேக்குக்கொப்பாய வேறொரு ஆசாரியர் எழும்புகிறாரென்பதினாலேயது மிகவும் அதிகத்தெளிவாயிருக்கின்றது.

௰௬ அவர் சரீரத்திற்சேற்ற கட்டளையாகிய நியாயப்பிரமாணத்தின்படியல்ல,

௰௭ மெல்கிசேதேக்கின் முறைமையாய் நீர் என்றென்றைக்குமுள்ள ஆசாரியராயிருப்பீரென்று சொன்னசாட்சிக்குத் தக்கதாக நீங்காத சீவனுக்குரிய வல்லமையின்படியே ஆசாரியரானார்.

௰௮ ஆகையால் முன் கொடுக்கப்பட்ட கட்டளை பலவீனமாயும் அப்பிரயோசனமாயுமிருந்தபடியால் அது நீக்கப்பட்டது.

௰௯ நியாயப்பிரமாணம் ஒன்றையும் நிறைவாக்கவில்லை. அதிகநன்மையான நம்பிக்கைக்கேதுவானது (பின்னாலே) உண்டாக்கப்பட்டு நிறைவாக்குகிறது. அதினாலே நாம் பராபரனிடத்திற் சேருகிறோம்.

௨௰ அன்றியும் முந்தினவர்கள் ஆணையில்லாமல் ஆசாரியரானார்கள். பிந்தினவர் மெல்கிசேதேக்கின் முறைமையின்படி நீர் என்றென்றைக்குமுள்ள ஆசாரியரென்று துக்கமில்லாமல் ஆணையிட்டுத் தம்முடனே சொன்ன கர்த்தராலே ஆணையோடேயப்படியானார்.

௨௧ ஆனதால் இயேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்கப்பட்டு,

௨௨ (அவர்களுக்கதிகமாயிருக்க) அதிக நன்மையான உடம்படிக்கைக்கேற்ற புணையாளியானார்.

௨௩. அன்றியும் அந்த ஆசாரியர் எப்பொழுதுமிருக்கக்கூடாதபடிக்கு மரிக்கிறவர்களானபடியால் அநேகராயிருந்தார்கள்.

௨௪ அவர் என்றென்றைக்குமிருக்கிறவரானதினாலே நீங்காத ஆசாரியப்பட்டமுள்ளவராயிருக்கிறார்.

௨௫ அன்றியுந் தம்மாலே பராபரனைச் சேருகிறவர்களுக்காக வேண்டுதல் செய்யும்படிக்கு எப்பொழுதும் உயிரோடேயிருக்கிறவரானதால் அவர்களை முற்றும் இரட்சிக்க வல்லமையுள்ளவராயுமிருக்கிறார்.

௨௬ பரிசுத்தராயுந் தீமை செய்யாதவராயும் அசுத்தமில்லாதவராயும் பாவிகளை விட்டுப்பிரிந்தவராயும் வானங்களுக்கு மேலுயர்ந்தவராயுமிருக்கிற இப்படிப்பட்ட பிரதான ஆசாரியரே நமக்குவேண்டும்.

௨௭ அவர் முந்தின ஆசாரியர்களைப்போல முதலாவது தன்னுடைய சொந்தப்பாவங்களுக்காகவும் பின்பு சனங்களுடைய பாவங்களுக்காகவும் நாடோறும் பலியிடவேண்டுவதில்லை. அவர்களுக்காக அவர் ஒரேதரந் தம்மைப்பலியிட்டாரே.

௨௮ நியாயப்பிரமாணமானது பலவீனத்தையுடைய மனிதர்களை ஆசாரியராக ஏற்படுத்துகின்றது. நியாயப்பிரமாணத்திற்குப் பின்பு ஆணையோடேயிருந்த வசனம் என்றென்றைக்கும் பூரணராகிய குமாரனையே யேற்படுத்துகின்றது.

## ௮. அதிகாரம்.

[(௧) இயேசுவானவருடைய ஆசாரியப்பட்டம் நித்தியமானபடியால் லேவியருடைய ஆசாரியப்பட்டம் ஒழிந்ததென்றும் முன்னறிவிக்கப்பட்ட புதிய உடம்படிக்கை யேற்படுத்தப்பட்டிருக்கிறதென்றுங்காட்டியது.]

மேற்சொல்லியவைகளிற் பிரதானமானதென்னவென்றால் பரமண்டலங்களிலுள்ள மகத்துவ ஆசனத்தின் வலதுபாரிசத்திலே உளுக்கார்ந்திருக்கிறவருமாய்,

௨ மனிதர்களாலேயல்ல, கர்த்தராலே வைக்கப்பட்ட மெய்யான கூடாரமாகிய பரிசுத்த இடத்திலே ஆராதனைசெய்கிறவருமாயிருக்கிற பிரதான ஆசாரியரே நமக்குண்டு.

௩ ஆசாரியர்யாவருங் காணிக்கைகளையும் பலிகளையுஞ் செலுத்துதற்கு வைக்கப்பட்டிருக்கிறதால் அவரும் (பரமண்டலத்திலே) சிலவைகளைப் பலியிடவேண்டுவதாயிருந்தது.

௪ பூமியிலே அவர் இருப்பாரானால் ஆசாரியரா யிருக்கமாட்டார். அங்கே நியாயப்பிரமாணத்தின்படி காணிக்கைகளைச் செலுத்துகிறவர்கள் ஆசாரியர்களா யிருக்கிறார்களே.

௫ மோசே அந்தக்கூடாரத்தை யுண்டுபண்ணப்போனபொழுது, மலையிலேயுனக்குக் காண்பிக்கப்பட்ட சாயலின்படியே நீ சகலத்தையுஞ்செய்ய எச்சரிக்கையாயிருவென்று பராபரன் அவனுக்குக் கட்டளையிட்டபடியே அந்த ஆசாரியர்கள் பரமண்டலத்திற்குரியவைகளுக்கு அடையாளமும் நிழலாட்டமுமானவைகளுள்ள (இடத்திலே) ஆராதனைசெய்கிறார்கள்.

௬ அவர் அதிக மேன்மையான வாக்குத்தத்தங்களின்மேல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற அதிக மேன்மையான உடம்படிக்கைக்கேற்ற மத்தியஸ்தராயிருக்கிறதால், அதிக விசேஷமான ஆராதனை செய்தலைப்பெற்றுக்கொண்டிருக்கிறார்.

௭ அந்த முதலாம் உடம்படிக்கைபிழையில்லாததாயிருந்ததானால் இரண்டாவதிற்கு இடந்தேடப்படுவதில்லையே.

௮ அவர்களைக் குற்றவாளிகளென்று சொல்லி அவர்களுடனே திருவுளம்பற்றினதாவது, கர்த்தர் சொல்லுகிறதென்னவெனில் இஸ்ரவேல் குடும்பத்தாரோடும் யூதர்குடும்பத்தாரோடும் நான் புதிய உடம்படிக்கையையேற்படுத்தும்படிக்கான காலம் வருகின்றது.

௯ அவர்களுடைய முன்னோர்களை எகிப்துதேசத்திலிருந்து கொண்டுவரும்படிக்கு நான் அவர்களுடைய கையைப் பிடித்துக்கொண்ட நாளிலே அவர்களுடனே பண்ணின உடம்படிக்கையைப்போல இது இருப்பதில்லை. அந்த உடம்படிக்கையிலே அவர்கள் நிலைநிற்கவில்லையே. நானும் அவர்களை யோசித்தேன்.

௰ அந்த நாட்களுக்குப்பின்பு நான் இஸ்ரவேல் குடும்பத்தாரோடே பண்ணும் உடம்படிக்கை யென்னவென்றால், என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய மனதிலே வைப்பேன். அவைகளை அவர்களுடைய இருதயங்களின்மேலேயெழுதி, அவர்களுக்குத் தேவனாயிருப்பேன். அவர்கள் எனக்குச் சனங்களாயிருப்பார்கள்.

௰௧ அப்பொழுது சிறியவன் முதற்கொண்டு பெரியவன்வரைக்கும் எல்லாரும் என்னையறிந்துகொள்வதாற், கர்த்தரையறிந்துகொள்ளென்று ஒருவன் தனக்கடுத்தபிறனுக்கும் வேறொருவன் தன்சகோதரனுக்கும் போதிக்கவேண்டுவதில்லை.

௰௨ நான் அவர்களுடைய அநியாயங்களை (நீக்கி,) அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் இனிநினையாமல் அவர்களுக்கு இரங்குவதால், அப்படி யாகுமென்று கர்த்தர் திருவுளம்பற்றுகிறொன்றே.

௰௩ புதிதானவுடம்படிக்கையென்று அவர் சொல்லுகையில் முதலாவதைப்பழமையாக்கினார். பழமையுங்குறைவுமுள்ளதே ஒழிந்துபோகிறதற்குச் சமீபமாயிருக்கின்றது.

## ௯. அதிகாரம்.

[(௧) இலேவியராகிய ஆசாரியர் செய்த பலிமுதலான ஆராதனைகளிலும் கிறிஸ்துவினுடைய பலியும் ஆராதனையும் அதிக மேன்மையாயிருக்கின்றனவென்று காட்டியது.]

அன்றியும் முதலாம் உடன்படிக்கை ஆராதனைக்கேற்ற நியமங்களும் பூமிக்குரிய பரிசுத்தஸ்தலமுமுள்ளதாயிருந்தது.

௨ எப்படியெனில், பரிசுத்தஸ்தலமென்னப்பட்ட முதற்கூடாரம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அதிலே விளக்குத்தண்டும் மேசையும் தேவசமுகத்தப்பங்களுமிருந்தன.

௩ அல்லாமலும் இரண்டாந் திரைச்சேலைக்குப் பின்னாலே மகா பரிசுத்தஸ்தலமென்னப்பட்ட கூடாரமிருந்தது.

௪ அதிலே பொன்னாற் செய்த கலசமும் முழுவதும் பொற்றகடு பொதியப்பட்ட உடன்படிக்கையின் பெட்டியுமிருந்தன. அந்தப் பெட்டியிலே மன்னாவைத்திருந்த பொற்பானையும் தளிர்த்த ஆரோனுடைய கோலும் உடன்படிக்கையின் பலகைகளுமிருந்தன.

௫ அதற்கு மேலே மகிமையுள்ள கேருபீம்கள் வைக்கப்பட்டு, கிருபாசனத்திற்கு நிழலிட்டிருந்தன. இவைகளைக் குறித்து நான் இப்பொழுது விவரித்துச் சொல்லக்கூடாது.

௬ அவைகள் இவ்விதமாய் ஏற்படுத்தப்பட்டிருந்தபின்பு, ஆசாரியரானவர்கள் ஆராதனைகளை நிறைவேற்றும்படிக்கு எக்காலத்திலேயும் முதற்கூடாரத்திலே பிரவேசிப்பார்கள்.

௭ இரண்டாங் கூடாரத்திலே பிரதான ஆசாரியன் மாத்திரம் வருஷத்தில் ஒரேதரம் இரத்தத்தோடே பிரவேசித்தது, அந்த இரத்தத்தைத் தனக்காகவுஞ் சனங்களுடைய பாவங்களுக்காகவுஞ் செலுத்துவான்.

௮ அதினாலே, முதலாங் கூடாரம் நிற்கையிற் பரிசுத்தமான இடங்களுக்குப் போகிற மார்க்கம் வெளியாக்கப்படவில்லையென்று பரிசுத்த ஆவியானவர் குறித்திருக்கிறார்.

௯ அந்தக் கூடாரம் இந்தக் காலமவரைக்கும் உவமையாயிருந்தது. அதிலே காணிக்கைகளும் பலிகளுஞ் செலுத்தப்பட்டுவருகின்றன.

௧௦ அவைகள் செம்மையாக்குதலுள்ள காலமளவும் (இஸ்ரவேலருக்குக்) கட்டளையிடப்பட்ட போசனபானங்களாலும் பலவித ஸ்நானங்களாலுஞ் சரீரத்திற்கேற்ற (மற்றச்) சடங்குகளாலும் மாத்திரம் ஆராதனைசெய்கிறவனுடைய மனதிற்கு நிறைவுண்டாக்கக்கூடாதவைகளாயிருக்கின்றன.

௧௧ கிறிஸ்துவானவர் (உலகத்தில்) வந்து இவ்வுலகப்பொருளாயிராமலுங் கையாற் செய்யப்படாமலும் அதிகமேன்மையாயும் அதிகநிறைவாயுமிருக்கிற கூடாரத்தின் வழியாய், வருகிறவைகளாகிய நன்மைகளுக்குப் பிரதான ஆசாரியராய்,

௧௨ வெள்ளாட்டுக்கடாய் இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலேயல்ல, தமது சொந்த இரத்தத்தினாலே நமக்கு நித்திய மீட்பையுண்டாக்கி, எல்லாக்காலங்களுக்காகவும் ஒரேதரம் பரிசுத்தமான ஸ்தலங்களிற் பிரவேசித்தார்.

௧௩ அதெப்படியெனிற், காளை வெள்ளாட்டுக்கடாய் இவைகளின் இரத்தமுங் கடாரியின் சாம்பலும் அசுசிப்பட்டவன்மேலே தெளிக்கப்பட்டால், அவனுடைய சரீர அசுசியை நீக்குகிறதற்காக அவனைச் சுத்தமாக்குகிறதாயிருக்க,

௧௪ நித்திய ஆவியினாலே தம்மைத்தாமே பழுதில்லாத பலியாகப் பராபரனுக்கு ஒப்புக்கொடுத்த கிறிஸ்துவினுடைய திரு இரத்தம் மிகவும் அதிகமாய் மரணத்துக்கேதுவான கிரியைகளை நீக்கி, ஜீவனுடைய பராபரனுக்கு நாம் ஊழியஞ்செய்வதற்கு நம்முடைய மனதைச் சுத்தமாக்குமல்லவா?

௧௫ இதினாலே முதல் உடன்படிக்கையின் காலத்திலே நடந்த அக்கிரமங்களை நிவர்த்திசெய்வதற்கேதுவாக அவர் மரித்தபின்பு, அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தமான நித்திய சுதந்தரத்தை அடைந்துகொள்ளும்படிக்கே அவர் புதிய உடன்படிக்கையின் மத்தியஸ்தராயிருக்கிறார்.

௧௬ அதெப்படியென்றால், ஒரு உடன்படிக்கை (பலிகளுடைய மரணத்தினாலே) உறுதியாக்கப்படும்.

௧௭ ஏற்படுத்தப்பட்ட (பலி) உயிரோடிருக்குமளவும், உடன்படிக்கை பெலனுள்ளதாயிருக்கமாட்டாதே. ஆகையால், ஒரு உடன்படிக்கை செய்யப்படும்பொழுது, ஏற்படுத்தப்பட்ட பலியினுடைய மரணமுண்டாக்கப்படவேண்டும்.

௧௮ அந்தப்படி முதலாம் உடன்படிக்கையும் இரத்தமில்லாமற் பிரதிஷ்டையாக்கப்படவில்லை.

௧௯ எப்படியெனில், மோசேயென்பவன் வேதப்பிரமாணத்தின்படி சகல கற்பனைகளுக்கும் எல்லாப் பிரமாணங்களையுஞ் சொன்னபின்பு ஆட்டுக்கடாக்களின் இரத்தத்தைத் தண்ணீரோடும் சிவப்பான ஆட்டுமயிரோடும் ஈசோப்பென்னும் செடியோடுங்கூட எடுத்து, வேதபுத்தகத்தின்மேலும் சனங்களெல்லார்மேலும் தெளித்து,

௨௦ பராபரன் உங்களுடனே (செய்யக்) கட்டளையிட்ட உடன்படிக்கைக்குரிய இரத்தம் இதுவேயென்றுஞ் சொன்னான்.

௨௧ இவ்விதமாய்க் கூடாரத்தின்மேலும் ஆராதனைக்கேற்ற சகல பணிமுட்டுகளின்மேலும் இரத்தத்தைத் தெளித்தான்.

௨௨ நியாயப்பிரமாணத்தின்படி சிலது தவிர மற்றெல்லாப் பதார்த்தங்களும் இரத்தத்தினாலே சுத்தமாக்கப்பட்டு வருகின்றன. இரத்தஞ்சிந்துதலில்லாமல் மன்னிப்புமில்லை.

௨௩ ஆனதாற் பரமண்டலங்களி லுள்ளவைகளுக்கு உவமையானவைகள் இப்படிப்பட்ட (பலிகளினாலே) சுத்தமாக்கப்பட வேண்டியதாயிருக்கிறபடியாற் பரமண்டலங்களிலுள்ளவைகடாமே அவைகளிலும் அதிகத்தகுதியான (பலிகளாலே) சுத்தமாக்கப்படவேண்டுமே.

௨௪ அந்தப்படிக் கிறிஸ்துவானவர் இப்பொழுது நமக்காகப் பராபரனுடைய சந்நிதானத்திலே தோன்றியிருக்கும்படிக்கு, மெய்யானவைகளுக்குத் திருட்டாந்தங்களாகிய கையாற்செய்யப்பட்ட பரிசுத்த ஸ்தலங்களிலல்ல, பரமண்டலத்திலேதானே பிரவேசித்திருக்கிறார்.

௨௫ அந்தப்பிரதான ஆசாரியன் அந்நிய இரத்தத்தையெடுத்து, வருடந்தோறும் பரிசுத்தஸ்தலங்களிலே பிரவேசித்ததுபோல, அவர் தம்மைப் பலதரம் பலியிடும்படிக்கு (அப்படிப் பிரவேசிக்கவில்லை.)

௨௬ அதற்காகவானால் அவர் உலகமுண்டானது முதற்கொண்டு அடிக்கடி பாடுபட வேண்டியிருக்குமே. அப்படியல்ல, அவர் தம்மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்கும்பொருட்டாக, (முந்தின) யுகத்தின்முடிவிலே யொருதரம் வெளிப்பட்டார்.

௨௭ அன்றியும் மனிதர்கள் ஒருதரம் மரிக்கிறதும் பின்பு நியாயத்தீர்ப்பு அடைகிறதுந் தீர்மானிக்கப்பட்டிருக்கிறதால்,

௨௮ அதுபோலக் கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்களைச் சுமந்துகொண்டுபோகும்படிக்கு ஒருதரம் பலியிடப்பட்டுத் தமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பைக் கொடுப்பதற்கு இரண்டாந்தரம் பாவபலியில்லாமல் தோன்றுவார்.

## ௰. அதிகாரம்.

[(௧) இலேவியருடைய பலிகளினாலே பாவம் நீங்காதென்றும், (௫) கிறிஸ்து தம்மைத்தாமே பலியிட்டதினாலே பாவங்கள் நிவாரணமாகுமென்றும், (௰௯) அதை நாம் உறுதியாய்ப் பற்றிக்கொள்ளவேண்டுமென்றுங் காட்டியது.]

இப்படியிருக்க, நியாயப்பிரமாணமானது வருகிறவைகளாகிய நன்மைகளின் பொருளுள்ளதாயிராமல், அவைகளின் நிழலைமாத்திரங் காண்பிக்கிறதாயிருக்கிறதால், வருஷந்தோறும் இடைவிடாமற் செலுத்தப்பட்டுவருகிற ஒரேவிதமான பலிகளினாலே அவைகளைச் செலுத்துகிறவர்களுக்கு நிறைவான (ஆசீர்வாதத்தை)யொருக்காலுங் கொடுக்கமாட்டாது.

௨ கொடுத்ததானால், ஆராதனை செய்தவர்கள் ஒருதரஞ் சுத்தமாக்கப்பட்டபின், இனனும் பாவங்களுண்டென்று தங்கள் மனதிலே அதிகமாய் நினையாதிருப்பதால், அந்தப்பலிகளைச் செலுத்துகிறது நிறுத்தப்படுமல்லவா?

௩ அப்படியிராதபடியாற் பாவங்களுண்டென்று அவைகளினாலே வருஷந்தோறும் நினைவுகூர்தலுண்டாயிருக்கிறதே.

௪ இல்லாமலும் ஆட்டுக்கடாக்களுடைய இரத்தம் பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே.

௫ ஆனதால், அவர் உலகத்திற் பிரவேசித்திருக்கிறபொழுது, பலியையுங் காணிக்கையையும் நீர் விரும்புகிறதில்லை. ஒருசரீரத்தையெனக்கு எத்தனமாக்கினீர்.

௬ தகனபலிகளும் பாவபலிகளும் உமக்குப் பிரியமல்லாதபொழுது,

௭ நான்சொன்னது: பராபரனே! என்னைக்குறித்துப், புஸ்தகச்சுருளிலே யெழுதியிருக்கிறபடி உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேனென்றுசொன்னேனென்றார்.

௮ நியாயப்பிரமாணத்தின்படி செலுத்தப்பட்டுவருகிற பலிகளைக்குறித்து மேற்சொல்லியபடி பலியையுங் காணிக்கையையுந் தகனபலிகளையும் பாவபலிகளையும் விரும்பமாட்டீர். அவைகளும் உமக்குப் பிரியமானவைகளல்லவென்றுசொன்னபின்பு,

௯ பராபரனே! உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கிப்பொழுது வருகிறேனென்றுசொன்னதால் இரண்டாம் (ஏற்பாட்டை) ஸ்தாபிக்கும்படிக்கு முதலானதை நீக்கிப்போட்டார்.

௰ அந்தச்சித்தத்தின்படி எல்லாக்காலங்களுக்காகவும் ஒரேதரம் இயேசுகிறிஸ்துவினுடைய சரீரம் பலியிடப்பட்டதினாலே நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.

௰௧ அன்றியும் எந்த ஆசாரியனும் நாடோறும் ஆராதனை செய்கிறவனும் பாவங்களையொருக்காலும் நிவிர்த்திசெய்யமாட்டாத ஒரேவிதபலிகளை அடிக்கடிச் செலுத்திவருவான்.

௰௨ அவர் மாத்திரம் என்றென்றைக்கும் பாவங்களை நீக்கும்படிக்கான ஒரே பலியைச் செலுத்தி பராபரனுடைய வலதுபாரிசத்திலே யுளுக்கார்ந்து,

௰௩ அதுமுதல் தமது சத்துருக்கள் தமது பாதங்களின்படியாக்கப்படுமளவுங் காத்துக்கொண்டிருக்கிறார்.

௰௪ ஆகையாற் பரிசுத்தமாக்கப்பட்டவர்களை அவர் ஒரேபலியினாலே என்றென்றைக்கும் நிறைவுள்ளவர்களாக்கினார்.

௰௫ இதைககுறிததுப பரிசுதத ஆவியானவரும நமககுசசாட்சிசொலலுகிருர்.

௰௬ எபபடியெனில், அநதநாட்களுககுபபின நான அவர்களுடனே இநத உடமபடிககைபணணுவே னெனறு சொனனபினபு, கர்ததர் திருவுளமபறறினது நான எனனுடைய பிரமாணஙகளை யவர்களுடைய இருதயஙகளிலேகொடுபபேன. அவைகளை யவர்களுடைய மனதினமேலே யெழுதுவேன.

௰௭ அவர்களுடையபாவஙகளையும அககிரமஙகளையும நான ஒருகாலததிலாகிலும நினைததுககொளவதிலலையென்ருர்.

௰௮ அநதபபடி யவைகள மனனிககபபட்டபடியாற் பாவபலியினிச செலுததபபடவேணடுவதிலலையே.

௰௯ ஆகையாற் சகோதரரே! பரிசுததமான இடஙகளுககுபபோகிற மார்ககததை இயேசுவானவர் தமதுசரீரமாகிய திரைச சேலையின வழியாயப புதிதானதும சீவனுமான மார்ககமாக நமககுணடுபணணி வைத்ததால்,

௨௰ அநத மார்ககததிற்பிரவேசிககிறதற்கு அவருடையதிரு இரத்தத்தினாலே நமககுததயிரியமுணடாயிருககிறபடியினாலும,

௨௧ பராபரனுடைய ஆலயததின்மேலநமககுபபெரிய ஆசாரிய ருணடாயிருககிறபடியினாலும,

௨௨ நாமகுறறததைசசாறறுகிறமனது நீஙகளதெளிககபபெறற இருதய முளளவர்களாய உண்மையுளள இருதயததோடும விசுவாசததினாலாகிற நிசசயத தோடும பராபரனைசசேரககடவோம.

௨௩ அலலாமலும சுததமான சலததாற் கழுவபபட்ட சரீரமுளளவர்களாய நமமுடைய நமபிககையையறிககை யிடுகிறதில் அசைவிலலாமல உறுதியா யிருக்கக்கடவோம. வாககுத்தத்தமபணணினவர் உண்மையுளளவராயிருககிருரே.

௨௪ மேலும அனபுகூருதறகும நற்கிரியைகளைசசெய்கிறதற்கும எழுபபுதலுணடாயிருககுமபடிககு ஒருவரை யொருவர் நோககிபபார்தது,

௨௫ சபைகூடிவருதலைச சிலர் விடடுபபோகிறதுபோல, நாம அபபடிசசெயயாமல, ஒருவருககொருவர்புததிசொலலககடவோம. அநதநாட்சமீபமாகிறதை நீஙகள அறிநதிருககிறதால், அதிகமாய் அபபடியேசெயயவேணடும.

௨௬ சததியததையறிநதுகொணடபின நாம் மனப்பூர்வமாயப பாவஞ்செயதால, வேறொருபாவபலி நமககு மீதியாயிருபபதிலலை.

௨௭ விரோதஞ்செயகிறவர்களைப பட்சிககும அககினியுளள உககிரமும நியாயததீர்பபும வருமெனறு பயததோடேகாததிருககுதலே நமககுணடாயிருககும.

௨௮ மோசேயினுடைய பிரமாணததைத்தளளினவனெவனோ அவன இரண்டு மூன்றுபேர் சாட்சிசொனனபின்பு, இரககமிலலாமற்கொலைசெயயபபட்டானே.

௨௯ பராபரனுடைய குமாரனைக காலினாலமிதித்துபபோட்டுத் தனனைப பரிசுததஞ்செயதஉடமபடிககையின திரு இரத்தத்தை அசுததமெனறெணணிக கிருபையின ஆவியை நிசசடைபணணினவன எவவளவு அதிக ஆககினைககுப பாத்திரவானுயிருபபான.

௩௰ நீஙகளேயோசனைபணணுங்கள. பழிவாஙகுதல் எனக்குரியது நானே பதிற்செயவேனெனறுசொன்னகர்ததரையறிநதிருககிறோமே. அனறியுஙகர்ததர் தமமுடைய சனஙகளுககு நியாயததீர்பபுக கொடுபபாரெனறுஞ்சொலலியிருககிறதே.

௩௧ ஆ, சீவனுளள பராபரனுடைய கைகளிலவிழுகிறதுபயஙகரமாயிருககினறது.

௩௨ நீஙகள முநதினநாட்களை ஞாபகபபடுததுஙகள. அவைகளில நீஙகள பிரகாசமாககபபட்டிருநதபொழுதுபாடுகளாலமிகுநத போராட்டததைசசகிததுககொணடீர்களே.

௩௩ நீஙகள நிநதைகளாலும உபததிரவஙகளாலும மறறவர்களுககுவேடிககைக் கேதுவானவர்களாயும அபபடியானமறறவர்களுககுததோழராயுமிருநதீர்கள.

௩௪ கட்டபபட்டிருநதஎனனோடேகூட நீஙகள பாடுபட்டீர்களே. பரமணடலஙகளில அதிகமேனமையும உறுதியுமான ஆஸதி உஙகளுககுணடெனறு நீஙகள அறிநது உஙகள (லவுகீக) ஆஸதிகளை (மறறவர்கள) கொளளையிட்டதற்குசசநதோஷமாயிடஙகொடுததீர்கள.

௩௫ ஆகையால் மிகுநத பலனுககேதுவான உஙகளதயிரியததையெறிநது விடாதிருபபீர்களாக.

௩௬ நீங்களபராபரனுடையசித்தத்தினபடிசசெய்கிறவர்களாய வாககுத்தத்தத்தின நன்மையைப பெறுமபடிககுபபொறுமையுஙகளுககுவேணடும.

௩௭ வருகிறவர் அதிககாலநதாமததமாயிராமற் சீககிரமாயவருவாரெனறும,

௩௮ விசுவாசததினாலே நீதிமானுனவன பிழைபபான. அவன பினவாஙகிபபோனால அவனமேல எனனுடைய ஆததுமா பிரியமாயிராதெனறும(எழுதியிருககினறது.)

௩௯ நாங்கெட்டுப்போகிறதறகேதுவாகப பின்வாஙகுகிறவர்களாயிராமல (நமது) ஆததுமாவைககாககிறதறகேதுவாக விசுவாசமுளளவர்களாயிருககிறோம்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) விசுவாசம் இன்னதென்றும் (௪) விசுவாசத்தினாலே திருட்டாந்தங்களாயிருக்கிற பூர்வீகத்தார் இன்னாரென்றுங்காட்டியது.]

விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியுங் காணப்படாதவைகளை வெளிப்படுத்துகிறதுமாயிருக்கின்றது.

௨ அதினாலே பூர்வீகத்தார் நற்சாட்சியைப் பெற்றார்கள்.

௩ உலகம் பராபரனுடைய வார்த்தையால் உண்டாக்கப்பட்டதென்றும் இவ்விதமாய்க் காணப்படுகிறவைகள் தோற்றப்படாத பொருள்களாலுண்டாயினவென்றும் விசுவாசத்தினாலே அறிந்திருக்கிறோம்.

௪ விசுவாசத்தினாலே ஆபேலென்பவன் காயீனுடையபலியிலும் அதிகமான பலியைப் பராபரனுக்குச் செலுத்தினான். அதினாலேயவன் நீதிமானென்று சாட்சிபெற்றான். அவனுடைய காணிக்கைகளைக் குறித்துப் பராபரனே சாட்சிகொடுத்தார். அவன் மரித்தும் அதினாலே இப்பொழுதும் பேசுகிறான்.

௫ விசுவாசத்தினாலே ஏனோக்கென்பவன் மரணத்தைக்காணாதபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டான். பராபரன் அவனையெடுத்துக்கொண்டபடியினாலே, அவன்காணப்படாமற்போனான். அவன் எடுத்துக்கொள்ளப்படுதற்குமுன்னே அவன் பராபரனுக்குப்பிரியமானவனென்று சாட்சி பெற்றுக்கொண்டிருந்தான்.

௬ பராபரனைச் சேருகிறவன் அவருண்டென்றும் அவர் தம்மைச்சாக்கிரதையாய்த் தேடுகிறவர்களுக்குப் பலனையளிக்கிறவரென்றும் விசுவாசிப்பானே. ஆகையால்விசுவாசமில்லாதவன் அவருக்குப் பிரியமாயிருக்கமாட்டான்.

௭ நோவாவென்பவனுந்தற்காலத்திலே காணாதவைகளைக் குறித்துத் தேவேத்தனமாய எச்சரிக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலேபயந்து, தன்குடும்பத்தையிரட்சிப்பதற்குப்பேழையைப்பண்ணுவித்து இதினாலே உலகம் ஆக்கினைக்குள்ளாயிற்றென்று தீர்ப்புக்காண்பித்து, விசுவாசத்தால்வருகிற நீதிக்குச்சுதந்தரவாளியானான்.

௮ ஆபிரகாமும் பின்பு சுதந்தரமாகப் பெற்றுக்கொள்ளும்படிக்கான இடத்திற்குப் புறப்பட்டுப்போக அழைக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலேகீழ்ப்படிந்து தான்போகவேண்டிய இடம் இன்னதென்றறியாமற் புறப்பட்டுப்போனான்.

௯ தனக்கு வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட அந்நியதேசத்திலே யவன் அந்தவாக்குத்தத்தத்திற்கு உடன் சுதந்தரரான ஈசாக்கோடும் இயாக்கோபோடுங்கூடவிசுவாசத்தினாலே சஞ்சரித்துக்கூடாரங்களிலேகுடியிருந்தான்.

௰ பராபரனாலே உண்டாக்கப்பட்டும் ஆளப்பட்டுமிருக்கிற அஸ்திபாரங்களுள்ள பட்டினத்திற்குப் போகக் காத்துக்கொண்டிருந்தபடியால் அப்படியிருந்தான்.

௰௧ சாராளும், வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவரென்றெண்ணி, விசுவாசத்தினாலே கருப்பந்தரிக்கும்பெலன் அடைந்து, வயதுசென்றவளாயிருந்தும் பிள்ளைபெற்றாள்.

௰௨ ஆனபடியால் இந்தச்சங்கதியிற்செத்தவனைப்போன்ற ஒருவனாலே வானத்திலுள்ளபெருக்கமான நட்சத்திரங்களைப்போலவும் எண்ணிறந்தகடற்கரைமணலைப்போலவும் மிகுந்தசனங்களுண்டானார்கள்.

௰௩ அவர்களெல்லாரும்வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைகளை அடையாமலதூரத்திலே அவைகளைக்கண்டுவாழ்த்துதலோடே விரும்பிப்பூமியின்மேலேதாங்கள் அந்நியராயும் வழிப்போக்கராயுமிருந்ததையறிக்கைபண்ணி, விசுவாசத்தோடே யிறந்துபோனார்கள்.

௰௪ அப்படி அறிக்கைபண்ணுகிறவர்கள் சென்மதேசத்தை நாடிப் போகிறோமென்றுதெரியப்படுத்துகிறார்கள்.

௰௫ அவர்கள் தாங்கள்விட்டுவந்ததேசத்தை நினைத்தார்களானால், அதற்குத்திரும்பும்படியிடமுண்டே.

௰௬ அதையல்ல, அதிலும்மேன்மையான பரமண்டலத்திலுள்ளதையேவிரும்பினார்கள். ஆகையாற் பராபரனும் அவர்களுடையதேவனென்று அழைக்கப்படுகிறதினாலே வெட்கப்படுகிறதில்லை. அவர்களுக்கு ஒருபட்டினத்தையெத்தனம்பண்ணினாரே.

௰௭ மேலும், ஆபிரகாமானவன் தான் சோதிக்கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே ஈசாக்கைப்பலியாக ஒப்புக்கொடுத்தான்.

௰௮ ஈசாக்கினாலே உனக்குச் சந்ததியுண்டாகுமென்று அவனோடே சொல்லப்பட்டிருந்ததே.

௰௯ இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்களைப்பெற்றவன் இவனை மரித்தோரிலிருந்தெழுந்திருக்கப்பண்ணப் பராபரன்வல்லவராயிருக்கிறாரென்றெண்ணித் தனக்கு ஒரேபேறானவனையே பலியாக ஒப்புக்கொடுத்தான். ஆனதால உவமையாகும்படியே அவனைத்திரும்பப் பெற்றுக்கொண்டான்.

உ௰ ஈசாக்கென்பவனும் பிற்காலத்திற்குரியவைகளின் மேலுள்ள விசுவாசத்தினாலே இயாக்கோபையும் ஏசாவையும் ஆசீர்வதித்தான்.

உ௰௧ இயாக்கோபென்பவனும் மரணகாலத்தில விசுவாசத்தினாலே யோசேப்பினுடைய குமாரரிருவரையும் ஆசீர்வதித்த

த்தனது கோலின் நுனியிலே (சாய்ந்து) தொழுதுகொண்டான்.

௨௨ யோசேப்பென்பவனும் இஸ்ரவேல் புத்திரர் (எகிப்துதேசத்தை) விட்டுப் புறப்படுவார்களென்று தன் சீவகாலத்தின் முடிவிலே விசுவாசத்தினாலே அறிவித்துத் தன் எலும்புகளைக் குறித்துக் கட்டளைகொடுத்தான்.

௨௩ மோசேயென்பவன் பிறந்தபொழுது அவனுடைய தாய் தகப்பன்மார் நம் பிள்ளை அழகுள்ளதென்று கண்டு விசுவாசத்தினாலே இராசாவினுடைய கட்டளைக்குப் பயப்படாமல், அந்தப் பிள்ளையை மூன்றுமாதம் ஒளித்துவைத்தார்கள்.

௨௪ மோசேயென்பவனும் பெரிய வயதுள்ளவனானபொழுது பார்வோனுடைய குமாரத்தியின் மகனென்னப்படுகிறதை விசுவாசத்தினாலே வெறுத்து,

௨௫ அநித்தியமான பாவசந்தோஷங்களை அநுபவிப்பதையல்லப் பராபரனுடைய சனங்களோடேகூடத் துன்பத்தையநுபவிப்பதையே அதிகமாய்த் தெரிந்துகொண்டான்.

௨௬ இனிமேல் வரும் பலனை அவன் நோக்கிப்பார்த்து எகிப்திலுள்ள பொக்கிஷங்களிலுங் கிறிஸ்துவினிமித்தம் வருகிற நிந்தையை அதிக ஐசுவரியமென்றெண்ணினான்.

௨௭ காணப்படாதவரைக் கண்டாற்போல உறுதியாய்ப் பற்றிக்கொண்டதால் அவன் விசுவாசத்தினாலே இராசாவினுடைய கோபத்திற்குப் பயப்படாமல் எகிப்தை விட்டுப்போனான்.

௨௮ தலைப்பிள்ளைகளைச் சங்கரிக்கிறவன் இஸ்ரவேலரைத் தொடாதபடிக்கு அவன் விசுவாசத்தினாலே பஸ்காவையும் இரத்தம் தெளித்தலையும் ஏற்படுத்தினான்.

௨௯ விசுவாசத்தினாலேயவர்கள் சிவந்த சமுத்திரத்தை உலர்ந்த தரையைப்போலக் கடந்துபோனார்கள். எகிப்தார் அப்படிச்செய்யத் தேடினபொழுது அமிழ்ந்து போனார்கள்.

௩௰ (இஸ்ரவேலருடைய) விசுவாசத்தினாலே எரிகோபட்டினத்தின் மதில்கள் (அவர்களால்) ஏழுநாளைக்குள்ளே சூழப்பட்டு விழுந்தன.

௩௧ வேசியாயிருந்த இராகாபென்பவள் விசுவாசத்தினாலே வேவுகாரரைச் சமாதானத்தோடே யேற்றுக்கொண்டு அவிசுவாசிகளோடே அழிக்கப்படாதிருந்தாள்.

௩௨ பின்னும் ஆரைக்குறித்துச் சொல்லலாம்? கிதேயோனையும் பாராக்கையுஞ் சமுசோனையும் இயெப்தாவையுந் தாவீதையுஞ் சாமுவேலையுந் தீர்க்கதரிசிகளையுங் குறித்து நான் விவரஞ்சொல்லவேண்டுமானாற் காலம்போதாது.

௩௩ அவர்களும் விசுவாசத்தினாலே இராச்சியங்களைச் செயித்துக்கொண்டு நீதியை நடப்பித்து வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளைப் பெற்றுக்கொண்டு சிங்கங்களுடைய வாய்களை அடைத்து அக்கினியின் பலத்தை அவித்து,

௩௪ கட்கங்களின் கூர்மைக்குத் தப்பிப் பலவீனத்திலே பலன்கொண்டு யுத்தகாலத்தில் வல்லவர்களாகி அந்நியருடைய பாளயங்களைக் கவிழ்த்துப்போனார்கள்.

௩௫ (விசுவாசத்தினாலே) ஸ்திரிகளுஞ் செத்துப்போன தங்களுக்குரியவர்களை உயிரோடெழுந்திருக்கப்பெற்றார்கள். (விசுவாசத்தினாலே) வேறுசிலர் அதிக மகிமையாய் உயிரோடேயெழும்பும்படிக்கு மீட்டையங்கீகரியாமல் இழுப்புண்டு வாதிக்கப்பட்டார்கள்.

௩௬ (விசுவாசத்தினாலே) வேறுசிலர் நிந்தைகளையும் அடிகளையுஞ் சங்கிலிகளையுங் காவலையுஞ் சகித்துக்கொண்டார்கள்.

௩௭ கல்லெறியப்பட்டார்கள். வாளால் அறுக்கப்பட்டார்கள். சோதிக்கப்பட்டார்கள். கட்கத்தினாலே வெட்டப்பட்டு மரித்தார்கள். செம்மறியாட்டுத் தோல்களையும் வெள்ளாட்டுத் தோல்களையும் போர்த்துக்கொண்டு குறைச்சலையும் உபத்திரவத்தையுந் துன்பத்தையுஞ் சகித்துத் திரிந்து,

௩௮ வனாந்தரங்களிலேயும் மலைகளிலேயுங் குகைகளிலேயும் பூமியின் வெடிப்புகளிலேயுஞ் சிதறி நடந்தார்கள். உலகம் அவர்களுக்கு அபாத்திரமாயிருந்தது.

௩௯ அவர்களெல்லாரும் விசுவாசத்தைக் குறித்து நற்சாட்சிபெற்றிருந்தும் வாக்குத்தத்தம்பண்ணப்பட்டதை யடையாமற்போனார்கள்.

௪௰ பராபரன் நம்மைக்குறித்து அதிக நன்மையானதையேற்படுத்தினதால் அவர்கள் நம்மையன்றி நிறைவுள்ள ஆசீர்வாதத்தை அடையாதபடிக்கு (அப்படியேபோனார்கள்.)

## ௰௨. அதிகாரம்.

[(௧) விசுவாசத்திலேயும் பொறுமையிலேயும் உறுதியாயிருக்கவேண்டுமென்றும், (௰௮) பழய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாடு அதிக சந்தோஷத்தையும் மகிமையையுங் கொடுக்கிறதென்றுங் காட்டியது.]

ஆகையால் மேகம்போல இத்தனை திரளான சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க, நாம் பாரமானயாவற்றையும் நம்மைச் சுற்றி நிற்கிற பாவத்தையுந் தள்ளிப்போட்டு, விசுவாசத்தை யாரம்பமாய் நடத்துகிறவராயு முடிக்கிறவராயுமிருக்கிற இயேசுவை நோக்கி நமக்கு முன் வைக்கப்பட்ட

போர்ாட்டச் சாலையிலே பொறுமையோடே ஓடக்கடவோம்.

௨ அவர் தமக்குமுன்பாக வைத்திருந்த சந்தோஷத்திற்காக அவலட்சணப்படுத்தலை யெண்ணாமல், சிலுவையில (மரணத்தைச்) சகித்துப் பின்பு பராபரனுடைய ஆசனத்தின் வலதுபாரிசத்திலுக்கார்ந்திருக்கிறார்.

௩ ஆனதால் உங்கள் ஆத்துமாக்கள் இளைப்புள்ளவைகளாயிருக்கும்பொழுது நீங்கள் தயிரியமற்றவர்களாய்ப் போகாதபடிக்குப் பாவிகளால் அப்படிப்பட்ட விரோதத்தைச் சகித்தவரையே நன்றாய்த் தியானித்துக்கொள்வீர்களாக.

௪ அந்தப் பாவத்திற்கு விரோதமாய்ப் போர் பட்டலுஞ் செய்கிற நீங்கள் இதுவரைக்கும் இரத்தஞ் சிந்தப்பட்டதுக்கதாக எதிர்நிற்கவில்லையே.

௫ அன்றியும், என் மகனே! கர்த்தருடைய தண்டனையை அற்பமாக எண்ணாமலும் அவராற் கடிந்துகொள்ளப்படுகையில தயிரியமற்றவனாகாமலும் இருப்பாயாக வென்றும்.

௬ கர்த்தரால் அன்புகூரப்பட்டவனெவனோ அவனை அவர் தண்டிக்கிறார். தாஞ் சேர்த்துக்கொள்ளுகிற எந்த மகனையானாலும் அடித்துவருவாரென்றும் பிள்ளைகளாகிய உங்களுக்குச் சொல்லியிருக்கிற ஆறுதலுள்ள வசனத்தை மறந்தீர்கள்.

௭ நீங்கள் (அவருடைய) தண்டிப்புக்குட்பட்டிருக்கிறபடியால் பராபரன் உங்களைத் (தமது) பிள்ளைகளைப்போல எண்ணி நடப்பிக்கிறாரே. தகப்பனால் தண்டிக்கப்படாத பிள்ளையொன்றுண்டா?

௮ எல்லாப் (பிள்ளைகளும்) தண்டிக்கப்பட்டதுபோல நீங்களுந் தண்டிக்கப்படாவிட்டால் பிள்ளைகளாயிராமல், வேசிப்பிள்ளைகளாயிருப்பீர்களே.

௯ அன்றியும் நம்முடைய சரீரத்திற்குத் தகப்பன்மாரானவர்கள் நம்மைத் தண்டிக்கும்பொழுது, நாம் அவர்களுக்கு வந்தனஞ்செய்திருக்க, ஆவிகளுக்குப் பிதாவானவருக்கு நாம் பிழைக்கும்படி மிகவும் அதிகமாய்க் கீழ்ப்படியவேண்டுமல்லவா?

௰ அந்தத் தகப்பன்மார்கள் தங்களுக்குத் தோன்றினபடி கொஞ்சகாலமாய் நம்மைத் தண்டித்தார்கள் அவர் தம்மைப்போல நாம் பரிசுத்தராகுதற்கேதுவான பிரயோசனம் வரும்பொருட்டே அப்படிச் செய்கிறார்.

௰௧ தண்டனையுண்டாயிருக்கும்பொழுது அது (நமக்குச்) சந்தோஷமாகவல்ல துக்கமாகத் தோன்றுகின்றது. பின்பு அதினாலே முயற்சிப்பட்டவர்களுக்கு அது நீதியென்னும் மாட்சிமையுள்ள பலனைக் கொடுக்கின்றது.

௰௨ ஆகையால் தளர்ச்சியாயிருக்கிற (உங்கள்) கைகளையும் இளைப்புள்ள (உங்கள்) கால்களையுஞ் செம்மைப்படுத்துவீர்களாக.

௰௩ முடமுள்ள (அவயவம்) புரண்டுபோகாமற் சொஸ்தமாகும்படிக்கு உங்கள் கால்களுக்காகச் சரியான பாதைகளைச் செய்வீர்களாக.

௰௪ யாவருடனேயுஞ் சமாதானமாயிருக்கவும் பரிசுத்தராயிருக்கவுஞ் சாக்கிரதையாயிருப்பீர்களாக. பரிசுத்தமில்லாதவன் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே.

௰௫ ஒருவரும் பராபரனுடைய கிருபையையிழந்துபோகாதபடிக்கும், மற்றநேகரும் அசுசிப்பட்டதுக்கதாகக் கசப்புள்ள வேர் உங்களுக்குள்ளே தோன்றிக் கலக்கமுண்டாக்காதபடிக்கும்,

௰௬ ஒருவரும் வேசிமார்க்கராயும், ஏசாவென்பவனைப்போல லவுகீக நடத்தையுள்ளவர்களாயுமிராதபடிக்கும் எச்சரிக்கையாயிருப்பீர்களாக. அவனொரே வேளைச்சாப்பாட்டுக்காக முதற்பேறனவனுக்குரிய சுதந்தரங்களை விட்டுவிட்டானே.

௰௭ பின்பு, உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, அவன் (தன் தகப்பனுடைய) ஆசீர்வாதத்தைப்பெற்றுக்கொள்ள விரும்பியுந் தள்ளப்பட்டான். அதைக் கண்ணீரோடே மிகவுந் தேடியும் (தகப்பனிடத்தில்) மாறுதலைக் காணாமற்போனானே.

௰௮ அன்றியுந் தொட்டப்படும் அக்கினி பற்றியெரிகிற மலையினிடத்திலும் மந்தாரத்தினிடத்திலும் இருளினிடத்திலும்,

௰௯ பெருங்காற்றினிடத்திலும் எக்காளத்தின் முழக்கத்தினிடத்திலும் வார்த்தைகளின் தொனியினிடத்திலும் நீங்கள் வரவேண்டியவர்களல்லவே. அந்தத் தொனியைக் கேட்டவர்கள் பின்னும் வசனந் தங்களுக்குத் தோன்றாதபடிக்கு வேண்டிக்கொண்டார்கள்.

௨௰ என்னத்தினாலெனில், இந்த மலையை ஒரு மிருகந் தொட்டால் அதின்மேலே கல்லெறியவேண்டும். அல்லது அதை அம்பினாலே எய்து கொலைசெய்ய வேண்டுமென்னு சொல்லப்பட்ட கட்டளையை யவர்கள் சகிக்கமாட்டாதிருந்தார்கள்.

௨௧ அந்தத் தரிசனையிவ்வளவு பயங்கரமாயிருந்தது. அதினாலே மோசேயும், நான் மிகவும் அதிகமாய்ப் பயப்பட்டு நடுங்குகிறேனென்றான்.

௨௨ நீங்கள் மலையாகிய சீயோனிடத்திற்குஞ் சீவனுள்ள தேவனுடைய பட்டினமாகிய பரம எருசலேமினிடத்திற்கும் அநேகம் பதினாயிரமாகிய தூதர்களின் விசேஷமான சங்கத்தினிடத்திற்கும்,

௨௩ பரமண்டலத்திலே பேரெழுதியிருக்கிற முதற்பேறனவர்களின் சபையினிடத்திற்கும் யாவருக்குந் தேவனாகிய நியாயாதிபதியினிடத்திற்கும், நிறைந்தபாக்கியமுள்ளவர்களாகிய நீதிமான்களின் ஆவிகளினிடத்திற்கும்,

௨௪ புதிதானவுடன்படிக்கைக்கேற்ற மத்தியஸ்தராகிய இயேசுவினிடத்திற்கும் ஆபேலினுடைய இரத்தங் கூப்பிட்டதுபோலல்ல, அதிக நன்மையானவைகளை அறிவித்துத்தெளிக்கப்படுகிற இரத்தத்தினிடத்திற்குஞ்சேருகிறவர்களாயிருக்கிறீர்கள்.

௨௫ திருவுளம்பற்றுகிறவரை நீங்கள் அசட்டைபண்ணாதபடிக்குப்பாருங்கள். என்னத்தினாலெனில், பூமியிலேபேசினவரை அசட்டைபண்ணின அவர்கள் (ஆக்கினைக்குத்) தப்பாமலிருக்க, பரமண்டலத்திலிருந்து பேசுகிறவரை நாம்விட்டு விலகினால், (ஆக்கினைக்குத்) தப்பிப்போவோமா?

௨௬ அவருடைய சத்தமந்தக்காலத்திலே பூமியை அசையப்பண்ணினது. ஆனாலும் இனிமேல் ஒருகாலத்திலே பூமியைமாத்திரமல்ல வானத்தையும் அசையப்பண்ணுவேனென்று இப்பொழுதுவாக்குத்தத்தஞ்செய்திருக்கிறார்.

௨௭ இனிமேல் ஒருகாலத்திலேயென்று சொன்னவசனம் அசைவில்லாதவைகள் நிலையாயிருக்கத்தக்கதாக(அற்பமாய்ச்)செய்யப்பட்டவைகளாகிய அசைவுள்ளவைகள் நீக்கப்படுமென்றுகுறிக்கின்றது.

௨௮ ஆனதால், அசைவில்லாத இராச்சியத்தை நாம்பெற்றுக்கொண்டிருக்க, நம்முடைய பராபரன (பொல்லாதவர்களை) பட்சிக்கும் அக்கினியாயிருக்கிறபடியினாலே,

௨௯ நாம் வணக்கத்தோடும் மெய்த்தேவபத்தியோடும் பராபரனுக்குப் பிரியமாய ஆராதனைசெய்யத்தக்க கிருபை யுள்ள ஈவைப்பற்றிக்கொள்ளக்கடவோம்.

## ௰௩. அதிகாரம்.

[(௧) அன்பு கற்பு முதலானசன்மார்க்கக்கிரியைகளைச்செய்யும்படி, எழுபதி (௨௰) வாழ்த்துதல்சொல்லியது.]

௧ சகோதரசிநேகம் நிலையாயிருக்கக்கடவது.

௨ அந்நியரை யுபசரிக்குஞ்செய்கிறகுணத்தினாலே சிலர் (தங்களுக்குத்) தெரியாதபடிக்குத்தேவதூதரையுபசரித்ததால் நீங்கள் அந்நியரையுபசரிக்குஞ்செய்யமறவாதிருப்பீர்களாக.

௩ கட்டப்பட்டிருக்கிறவர்களோடே கூடக்கட்டப்பட்டவர்கள் போல நீங்கள் அவர்களை நினைத்துக்கொள்ளுங்கள். உங்களையுஞ் சரீரத்தோடிருக்கிறவர்களென்றறிந்து பாடுபடுகிறவர்களை நினைத்துக்கொள்ளுங்கள்.

௪ விவாகம்பண்ணுதல் யாவருக்குள்ளுங் கனம்பொருந்தியதாயிருக்கக்கடவது. (சமுசாரமார்க்கத்தாருடைய) படுக்கை(விபசாரத்தினாலே) அசுசிப்படாதிருப்பதாக. வேசிமார்க்கருக்கும் விபசாரக்காரருக்கும் பராபரன் நியாயத்தீர்ப்புக்கொடுப்பாரே.

௫ உங்களுக்குண்டானவைகள் போதுமென்கிறமனதுள்ளவர்களாய்ப் பணத்தின் மேலுள்ள ஆசையில்லாமல் நடந்துகொள்வீர்களாக. நான் உன்னை ஒருக்காலும்விட்டுவிலகுவதுமில்லை. உன்னையொருக்காலுங் கைவிடுவதுமில்லையென்று அவர் அருளிச்செய்தாரே.

௬ அதினாலேநாந்தயிரியங்கொண்டு கர்த்தர் எனக்குச்சகாயராயிருக்கிறார். மனிதனானவன் எனக்கென்னசெய்வானோவென்று நான்பயப்படவேண்டுவதில்லை யென்றுசொல்லலாமே.

௭ தேவவசனத்தையுங்களுக்குப் போதித்து உங்களை நடத்திப்போனவர்களை நீங்கள்ஞாபகப்படுத்தி அவர்களுடைய நடக்கையின்முடிவை நன்றாய்ப்பார்த்து (அவர்களுடைய)விசுவாசத்தைப்பின்பற்றுங்கள்.

௮ இயேசுக்கிறிஸ்துவானவர் நேற்றும் இன்றைக்கும் என்றென்றைக்கும் ஒரேவிதமாயிருக்கிறவர்.

௯ பலவிதமாயும் அந்நியமாயுமிருக்கிற போதனைகளால் நீங்கள்சிதற அடிக்கப்படாதிருப்பீர்களாக. போசனபதார்த்தங்களாலேயல்ல (தேவ) கிருபையினாலே (உங்கள்) மனது உறுதியாகிறதே நன்மையாயிருக்கின்றது போசனபதார்த்தங்களைக்குறித்து, முயற்சியாயிருக்கிறவர்கள் அதினாலேபிரயோசனம் அடையவில்லையே.

௰ நமக்குண்டாயிருக்கிறபலிபீடத்திலுள்ளவைகளைக் கூடாரத்தில் ஆராதனைசெய்கிறவர்கள்புசிக்கிறதற்கு அதிகாரமில்லை.

௰௧ அதெப்படியெனில் பிரதான ஆசாரியன்பாவபலிக்காகமிருகங்களின் இரத்தத்தைப்பரிசுத்தஸ்தலங்களிற் கொண்டுவருகிறபொழுது அந்தமிருகங்களுடைய உடல்கள்பாளயத்திற்குப் புறம்பேகொண்டுபோய்ச்சுட்டெரிக்கப்படுமே.

௰௨ அந்தப்படி இயேசுவானவருந் தமது திரு இரத்தத்தினாலேசனங்களைப் பரிசுத்தஞ்செய்யும்படிக்குப் பட்டணத்திற்குப்புறம்பேபாடுபட்டார்.

௰௩ ஆனதால் நாம் அவருடனேகூட நிந்தையைச்சகிக்கிறவர்களாய் அவரோடே கூடப்பாளயத்திற்குப்புறம்பே புறப்படக்கடவோம். நிலைமையானபட்டினம் இங்கே நமக்கில்லையே.

௰௪ மறுலோகத்திலுள்ளதை மிகவுநாந்தேடுகிறோமே.

௰௫ மேலும் அவருடையதிருநாமத்திற்குத் துதியை அறிக்கையிடுகிற உதடுகளின் கனியாகியதோத்திரப்பலியை நாம் அவர்மூ

லமாய் எப்பொழுதும் பராபரனுக்குச் செலுத்தக்கடவோம்.

௰௬ அன்றியும் நன்மைசெய்தலையும் (எளியவர்களுக்குக்) கொடுத்தலையும் மறவாதிருப்பீர்களாக. அப்படிப்பட்ட பலிகளின்மேல் பராபரன் மிகவும் பிரியமாயிருக்கிறாரே.

௰௭ உங்களை நடத்துகிறவர்கள் (கர்த்தாவுக்குக்) கணக்கு ஒப்புவிக்கிறவர்களாய் உங்கள் ஆத்துமாக்களுக்காக விழித்துக்கொள்ளுகிறார்களே. ஆகையால் அவர்கள் துக்கமாயல்ல சந்தோஷமாய் அப்படிச் செய்யும்படிக்கு நீங்கள் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடங்குவீர்களாக. (அவர்கள் துக்கமாய் அப்படிச்செய்தால்) அது உங்களுக்குப் பிரயோசனமாயிருக்கமாட்டாதே.

௰௮ நாங்கள் எவ்விதத்திலும் நன்றாய் நடக்க விரும்பிக்கொண்டு நற்சாட்சி சொல்லுகிற மனது எங்களுக்குண்டென்று நாங்கள் நிச்சயமாயிருக்கிறபடியால் எங்களுக்காகச் செபம்பண்ணுவீர்களாக.

௰௯ நான் அதிசீக்கிரமாய் உங்களுக்குத் திரும்பக்கொடுக்கப்படும்படிக்கு நீங்கள் அப்படிச்செய்யவேண்டுமென்று அதிகமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

௨௰ அன்றியும் நமது கர்த்தருமாய் ஆடுகளின் பெரிய மேய்ப்பருமாயிருக்கிற இயேசுவை நித்திய உடம்படிக்கைக்கேற்ற இரத்தத்தினாலே மரித்தோரிலிருந்து புறப்படப்பண்ணின சமாதானத்திற்குக் காரணராகிய பராபரன்,

௨௧ தமது சித்தத்தின்படி நீங்கள் செய்கிறதற்கேதுவாக எவ்விதமான நற்கிரியைக்கும் உங்களைத் தகுதியானவர்களாக்கி இயேசுகிறிஸ்துவின் மூலமாய்த் தமது சந்நிதானத்திலே பிரியமானதை உங்களுக்குள்ளே நடப்பிக்கக்கடவர். அவருக்கு என்றைக்கும் துதியுண்டாவதாக. ஆமென்.

௨௨ சகோதரரே! நான் சுருக்கமாய் உங்களுக்கு எழுதின இந்தப் புத்திகளை அங்கீகரிக்கும்படிக்கு வேண்டிக்கொள்ளுகிறேன்.

௨௩ சகோதரனாகிய தீமோத்தேயு விடுதலையாக்கப்பட்டானென்று அறிவீர்களாக. அவன் சீக்கிரமாய் வந்தால் அவனுடனேகூட உங்களைக் காண்பேன்.

௨௪ உங்களை நடத்துகிறவர்களுக்கும் மற்றப் பரிசுத்தவான்கள் யாவருக்கும் (என்னாலே) வாழ்த்துதல் செய்யுங்கள்.

௨௫ இத்தாலிதேசத்தார் யாவரும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்கள். தேவகிருபை உங்களனைவரோடுமிருக்கக்கடவது.

ஆமென்.

---

அப்போஸ்தலனாகிய

# இயாக்கோபு எழுதின

## பொதுவான நிருபம்.

### ௧. அதிகாரம்.

[(௧) துன்பகாலத்திலே சந்தோஷப்பட்டு நிலைநிற்கவேண்டுமென்றும், (௰௩) பாவத்திற்கேதுவான காரணங்கள் பராபரனல்ல அவரவருடைய பொல்லாத இச்சையினாலே வருகின்றனவென்றும், (௰௭) பராபரனால் சகல நன்மைகளும் வருகிறபடியால் நாம் தகாத நடக்கைகளையெல்லாந் தள்ளி அவருடைய வசனத்தின்படி செய்கிறவர்களாயிருக்கவேண்டுமென்றுங் காட்டியது.]

பராபரனுக்குங் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கும் ஊழியக்காரனாகிய இயாக்கோபு அங்கங்கே சிதறியிருக்கிற பன்னிரண்டு கோத்திரங்களுக்கும் எழுதுகிறதாவது,

௨ நீங்கள் வாழ்க. என் சகோதரரே! உங்கள் விசுவாசத்தைப் பரிட்சைபார்த்தல் பொறுமையையுண்டாக்குமென்றறிந்திருக்கிறபடியால்,

௩ தூண்டுகிற பல துன்பங்களில் நீங்கள் அகப்படும்பொழுது, அதை மிகுந்த சந்தோஷத்திற்கேதுவாக எண்ணிக்கொள்ளுங்கள்.

௪ நீங்கள் ஒன்றிலுங் குறைவுள்ளவர்களாயிராமல் நிறைவுள்ளவர்களாயுந் தேறினவர்களாயுமிருக்கத்தக்கதாக, அந்தப் பொறுமை நிறைந்த கிரியையையே செய்யக்கடவது.

ரு உங்களிலொருவன் நற்புத்தியிற் குறைவுள்ளவனானால், யாவருக்குஞ் சம்பூரணமாய்க் கொடுக்கிறவருமாய் ஒருவரையும் அதட்டாதவருமாயிருக்கிற பராபரனிடத்தில் அவன் கேட்கக்கடவன். அப்பொழுது அவனுக்குக் கொடுக்கப்படும்.

சு அவன் எவ்வளவாகிலுஞ் சந்தேகப்படாமல் விசுவாசத்தோடே கேட்கக்கடவன். சந்தேகப்படுகிறவன் காற்றினால் அடிக்கப்பட்டு அசைகிற கடலின் அலைக்கு ஒப்பாயிருப்பானே.

எ அப்படிப்பட்ட மனிதன் கர்த்தரிடத்திலே எதையாகிலும் பெற்றுக்கொள்வேனென்று நினையாதிருப்பானாக.

அ இருமனமுள்ளவன் தன் வழிகள் யாவிலேயும் நிலையற்றவனாயிருக்கிறான்.

கூ (அன்றியும்) தாழ்மைப்படுகிற சகோதரன் தான் உயர்த்தப்படுவதைக் குறித்து மேன்மைபாராட்டக்கடவன்.

ய ஐசுவரியவான் தான் புல்லின் பூவைப்போல ஒழிந்துபோவதால் தாழ்மைப்படுவதைக் குறித்து மேன்மைபாராட்டக்கடவன்.

யக சூரியன் உதயமாகி வெயிலைக் கொளுத்தும்பொழுது, புல் உலர்ந்து, அதின் பூ உதிர்ந்து அதின் அழகான வடிவு அழிந்துபோமே. அப்படிப்போல ஐசுவரியவானும் தன் மார்க்கங்களிலே வாடிப்போவான்.

யஉ சோதனையைச் சகிக்கிற மனிதன் பாக்கியமுள்ளவன். ஏனென்றால் அவன் உத்தமனாக்கப்பட்டபின்பு, கர்த்தர் தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்கு வாக்குத்தத்தம்பண்ணின ஜீவகிரீடத்தைப் பெறுவான்.

யங தூண்டிவிடப்படுகிற எவனும் பராபரனால் தூண்டிவிடப்படுகிறேனென்று சொல்லாதிருப்பானாக. பராபரன் பொல்லாங்குகளால் தூண்டிவிடப்படவும் பாவத்திற்கேதுவாக ஒருவனையுந் தூண்டிவிடவுமாட்டாரே.

யச அவனவன் தன் தன் சுய இச்சையினாலே தூண்டியிழுக்கப்பட்டுச் சோதிக்கப்படுகிறான்.

யரு பின்பு இச்சையானது கர்ப்பந்தரித்துப் பாவத்தைப் பிறப்பிக்கும். பாவம் நிறைவேறினபொழுது அது மரணத்தையுண்டாக்கும்.

யசு எனக்குப் பிரியமான சகோதரரே! வஞ்சிக்கப்படாதிருப்பீர்களாக.

யஎ எந்த நல்ல ஈவும் நிறைவுள்ள எந்த வரமும் உயர்ந்தினின்று சுடர்களின் பிதாவினாலே வருகின்றன. அவருக்கு எவ்வளவாகிலும் மாறுதலும் வேற்றுமையின் நிழலுமில்லை.

யஅ அவர் சித்தமானபடியால் தம்முடைய சிருஷ்டிகளில் நாம் முதற்பலன்களாகும்படிக்கு நம்மைச் சத்தியத்தின் வசனத்தினாலே ஜெனிப்பித்தார்.

யகூ ஆகையால் எனக்குப் பிரியமான சகோதரரே! யாவருங் கேட்கிறதற்குத் தீவிரமாயும், பேசுகிறதற்குத் தாமசமாயும்,

உய பராபரனுக்கேற்ற நீதியை மனிதருடைய கோபம் நடப்பிக்கமாட்டாதபடியினாலே கோபிக்கிறதற்குத் தாமசமாயுமிருக்கக்கடவர்கள்.

உக ஆகையால் அழுக்குப்பாவையும் மிகுதியான பொல்லாங்குகளையும் நீங்கள் தள்ளிவிட்டு நடப்பட்டதாயும் உங்கள் ஆத்துமாக்களை இரட்சிக்கத் தக்கதாயுமிருக்கிற வசனத்தைச் சாந்தமாய் ஏற்றுக்கொள்ளுங்கள்.

உஉ அல்லாமலும் நீங்கள் திட்டான யோசனையினாலே உங்களை வஞ்சியாதபடிக்கு வசனத்தைக் கேட்கிறவர்களாயமாத்திரமல்ல அதின்படி செய்கிறவர்களாயுமிருப்பீர்களாக.

உங என்னத்தினாலெனில் ஒருவன் வசனத்தைக் கேட்டும் அதின்படி செய்யாதவனானால், கண்ணாடியிலே தன் சுபாவ முகத்தைப் பார்க்கிற மனிதனுக்கொப்பாயிருப்பான்.

உச அவன் தன்னைத் தானே பார்த்தபின்பு புறப்பட்டுப் போனவுடனே தானிருந்த விதத்தை மறப்பான்.

உரு சுயாதீனத்திற்கேதுவான நிறைவுள்ள பிரமாணத்தையுற்றுப்பார்த்து அதிலே நிலையாயிருக்கிறவனே (அதை) மறந்துபோகத்தக்கதாகக் கேட்கிறவனாயிராமல் அதற்கேற்ற கிரியை செய்கிறவனாயுமிருந்து தன் செய்கையிற் பாக்கியவானாயிருப்பான்.

உசு உங்களிலொருவன் தன் நாவை அடக்காமல் தன் இருதயத்தை வஞ்சித்துத் தன்னைத் தேவபத்தியுள்ளவனென்று நினைத்தால் அவனுடைய தேவபத்தி வீணதாயிருக்கும்

உஎ திக்கற்ற பிள்ளைகளுங் கைம்பெண்களும் படுகிற உபத்திரவத்திலே அவர்களை விசாரிக்கிறதும் உலகத்தால் கறைப்படாதபடிக்குத் தன்னைக் காத்துக்கொள்ளுகிறதும் பிதாவாகிய பராபரனுக்கு முன்பாக மாசில்லாத சுத்தமான பத்தியாயிருக்கின்றது.

## உ. அதிகாரம்.

[(க) எளியவர்களை இகழ்ந்து சுகத்தாகப் பட்சபாதஞ் செய்யக்கூடாதென்றும், (யசா) கிரியையில்லாத விசுவாசம் வீணாயிருக்கிறதென்றுங் காட்டியது.]

என் சகோதரரே! மகிமையுள்ள நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேலுள்ள விசுவாசம் உங்களுக்குள்ளே பட்சபாதத்தோடே இராதபடிக்குப் பாருங்கள்.

உ அதெப்படியெனிற் பொன்மோதிரந்தையும் பிரகாசமுள்ள வஸ்திரத்தையுந் தரித்திருக்கிற ஒரு மனிதனுங் கந்தையான வஸ்திரத்தைத் தரித்திருக்கிற ஒரு தரித்திரனும

௨ பராபரனுடைய ஆவியை நீங்கள் எதினாலே அறியலாமென்றால், இயேசுக்கிறிஸ்து மாமிசத்திலே வந்தாரென்று அறிக்கைபண்ணுகிற ஆவியெதுவோ அது பராபரனுடையதாயிருக்கின்றது.

௩ இயேசுக்கிறிஸ்து மாமிசத்திலே வந்தாரென்று அறிக்கைபண்ணாத ஆவியெதுவோ அது பராபரனுடையதாயிருக்கிறதில்லை. அதுவே கிறிஸ்துவுக்கு விரோதியானவனுடைய ஆவி. அது வருகிறதென்று நீங்கள் கேள்விப்பட்டீர்கள். அது இப்பொழுதே உலகத்திலிருக்கின்றது.

௪ பிள்ளைகளே! நீங்கள் பராபரனுடையவர்களாயிருந்து, உலகத்திலிருக்கிறவனிலும் உங்களிலிருக்கிறவர் பெரியவரானதால், அவர்களை ஜெயித்தீர்கள்.

௫ அவர்கள் உலகத்தாரின் தன்மையையுடையவர்கள். ஆனபடியால் உலகத்தாரின் தன்மையைப் பேசுகிறார்கள், உலகத்தாரும் அவர்களுக்குச் செவிகொடுக்கிறார்கள்.

௬ நாங்கள் பராபரனுடைய தன்மையையுடையவர்கள். பராபரனை யறிந்துகொண்டவன் எங்களுக்குச் செவிகொடுக்கிறான். பராபரனுடைய தன்மையில்லாதவன் மாத்திரம் எங்களுக்குச் செவிகொடுக்கிறதில்லை. இதினாலே சத்திய ஆவியையும் வஞ்சக ஆவியையும் அறிந்திருக்கிறோம்.

௭ பிரியமானவர்களே! அன்பு பராபரனுடையதாயிருக்கிறபடியால், ஒருவரிலொருவர் அன்பாயிருக்கக்கடவோம். அன்புள்ள யாவரும் பராபரனிற் பிறந்து அவரையறிந்திருக்கிறார்கள்.

௮ பராபரன் அன்பாகவேயிருக்கிறபடியால், அன்பில்லாதவன் பராபரனையறியான்.

௯ பராபரனுடைய ஏகசேசுகுமாரனாலே நாம் பிழைக்கும்படிக்கு அவரை இவ்வுலகத்திலே அனுப்பினதினாலே பராபரன் நமதுமேல்வைத்த அன்பு வெளிப்பட்டது.

௰ நாம் பராபரனிடத்தில் அன்புகூர்ந்ததினாலல்ல, அவர் நம்மிடத்தில் அன்புகூர்ந்து, நம்முடைய பாவங்களை நீக்குங்கிருபையுண்டாகும்படி தம்முடைய குமாரனையனுப்பினதினாலே அன்புண்டாயிருக்கின்றது.

௰௧ பிரியமானவர்களே! பராபரன் இவ்விதமாய் நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால், நாமும் ஒருவரிடத்திலொருவர் அன்புகூரக்கடனாளிகளாயிருக்கிறோம். பராபரனை ஒருவரும் ஒருக்காலுங்காணவில்லை.

௰௨ நாம் ஒருவரிடத்திலொருவர் அன்புகூர்ந்தால், பராபரன் நமக்குள்ளே நிலைத்திருப்பார். அவருடைய அன்பு நம்மிடத்தில் நிறைவுள்ளதாயுமிருக்கும்.

௰௩ அவர் தம்முடைய ஆவியில் நமக்குக் கொடுத்ததினாலே, நாம் அவரிலும் அவர் நம்மிலும் நிலைத்திருக்கிறதை யறிந்திருக்கிறோம்.

௰௪ பிதாவானவர் குமாரனை உலக இரட்சகராக அனுப்பினதை நாங்கள் பார்த்திருந்து சாட்சியிடுகிறோம்.

௰௫ இயேசுவானவர் பராபரனுடைய குமாரனென்று அறிக்கைபண்ணுகிறவனெவனோ, அவனிடத்திற் பராபரன் நிலைத்திருக்கிறார். பராபரனிடத்திலே அவனும் நிலைத்திருக்கிறான்.

௰௬ பராபரன் நமதுமேல்வைத்திருக்கிற அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்கிறோம். பராபரன் அன்பாகவேயிருக்கிறார். அன்பிலே நிலைத்திருக்கிறவன் பராபரனிடத்தில் நிலைத்திருக்கிறான். பராபரனும் அவனிடத்தில் நிலைத்திருக்கிறார்.

௰௭ நியாயத்தீர்ப்பின் நாளிலே நமக்குத் தைரியமுண்டாயிருக்கத்தக்கதாக, அன்பு நம்மிடத்தில் நிறைவுள்ளதாயிற்று. ஆனதால் அவர் இருக்கிறபிரகாரமாக நாமுமிந்த உலகத்திலிருக்கிறோமே.

௰௮ அன்பிலே பயமில்லை. நிறைந்த அன்பு பயத்தைப் புறம்பே தள்ளுகின்றது. பயமானது வேதனையுள்ளதே.

௰௯ பயப்படுகிறவன் நிறைந்த அன்புள்ளவனல்ல. அவர் முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால் நாமும் அவரிடத்தில் அன்புகூருகிறோம்,

௨௰ ஒருவன் தன் சகோதரனைப் பகைத்து நான் பராபரனிடத்தில் அன்புகூருகிறேனென்று சொன்னால் அவன் பொய்க்காரனாயிருப்பான் எப்படியெனில் அவன் தான் கண்டிருக்கிற சகோதரனிடத்தில் அன்புகூராமலிருக்குந்தான் காணாதிருக்கிற பராபரனிடத்திலே யெப்படி யன்பாயிருப்பான்?

௨௰௧ அன்றியும் பராபரனிடத்தில் அன்புகூருகிறவன் தன் சகோதரனிடத்திலும் அன்புகூரவேண்டுமென்ற இந்தக்கட்டளையை அவராலே பெற்றிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

[(௧) பராபரன்மேல் அன்புகூருகிறவன் அவருடைய பிள்ளைகள்மேலும் அன்புகூருவானென்றும், (௪) உலகத்தை ஜெயிப்பானென்றும், (௬) இயேசுக்கிறிஸ்து மெய்யாய்ப் பராபரனுடைய குமாரனென்பதற்கும் நமக்கு நித்தியசீவனைக் கொடுக்கிறவரென்பதற்கும் சாட்சியின்னதென்றும், (௰௪) ஜெபம்பண்ணுகிறதற்குத் தைரியமின்னதென்றுங்காட்டியது.]

இயேசுவென்பவரே கிறிஸ்துவென்று விசுவாசிக்கிறவனெவனோ அவன் பராபரனிற் பிறந்திருக்கிறான். அன்றியும் பிறப்பித்தவரிடத்தில் அன்புகூருகிற யாவரும் அவரிற்பிறந்தவனிடத்திலும் அன்புகூருகிறார்கள்.

௨ நாம் பராபரனிடத்தில் அன்புகூர்ந்து அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டுவருகிறதினாலே, நம்மை பராபரனுடைய பிள்ளைகளிடத்தில் அன்புகூருகிறவர்களென்று அறிந்துகொள்ளுகிறோம்.

௩ நாம் பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே அவரிடத்தில் அன்புகூருகிறதாம். இப்படி அவருடைய கற்பனைகள் பாரமானவைகளுமல்ல.

௪ எப்படியெனில், பராபரனிற் பிறந்தவனெவனோ அவன் உலகத்தைச் ஜெயிக்கிறான். நம்முடைய விசுவாசமே உலகத்தைச் ஜெயிக்கிற ஜெயம்.

௫ இயேசுவானவர் பராபரனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறவனேயன்றி, வேறுயாவன் உலகத்தைச் ஜெயிக்கிறவன்?

௬ இயேசுக்கிறிஸ்துவாகிய அவரே சலத்தினாலும் இரத்தத்தினாலுந் தோன்றிவந்தவர். சலத்தினாலே மாத்திரமல்ல, சலத்தினாலும் இரத்தத்தினாலுமே (வந்தார்.) ஆவியானவர் சத்தியமாகையால் ஆவியானவரே சாட்சிகொடுக்கிறவர்.

௭ ஆனதாற் பரமண்டலத்திலே பிதா, வார்த்தை, பரிசுத்த ஆவியென்றிம்மூவருஞ் சாட்சியிடுகிறார்கள். அம்மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள்.

௮ பூமியிலேயும் ஆவி, சலம், இரத்தமென்றிம்மூன்றுஞ் சாட்சியிடுகின்றன. அம்மூன்றும் ஒன்றுசப்பொருந்துகின்றன.

௯ நாமேற்றுக்கொள்ளுகிற மனிதருடைய சாட்சியிலும் பராபரனுடைய சாட்சி அதிகமாயிருக்கின்றது. பராபரன் தமது குமாரனைக் குறித்துக் கொடுத்த சாட்சி அதுவே.

௰ பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் அந்தச்சாட்சியைத் தனக்குள்ளே கொண்டிருக்கிறான். பராபரனை விசுவாசியாதவன் அவரைப் பொய்க்காரனென்கிறவனாகவிருக்கிறான். பராபரன் தம்முடைய குமாரனைக் குறித்துக் கொடுத்த சாட்சியை விசுவாசிக்கவில்லையே.

௰௧ அந்தச்சாட்சியென்னவெனிற் பராபரன் நமக்கு நித்தியசீவனைக் கொடுத்திருக்கிறார். அந்தச்சீவன் அவருடைய குமாரனிலிருக்கிறதென்பதே.

௰௨ குமாரனையுடையவன் அந்தச்சீவனையுடையவனாயிருக்கிறான். பராபரனுடைய குமாரனில்லாதவன் அந்தச்சீவனில்லாதவனாயிருக்கிறான்.

௰௩ பராபரனுடைய குமாரனுடைய நாமத்தில் விசுவாசமாயிருக்கிற நீங்கள் நித்திய சீவனையுடையவர்களென்றறிந்து, பராபரனுடைய குமாரனுடைய நாமத்தின்மேலே விசுவாசமாயிருக்கும்படிக்கு இவைகளை யுங்களுக்கு எழுதினேன்.

௰௪ நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படியே கேட்டால், அவர் நமக்குச் செவிகொடுப்பாரென்பதே அவரால் நமக்குண்டாயிருக்கிற தயிரியம்.

௰௫ அன்றியும் நாம் எதைக்கேட்டாலும் அவர் நமக்குச் செவிகொடுப்பாரென்று நாம் அறிந்திருக்க, அவரிடத்தில் நாம் பண்ணின விண்ணப்பங்களைப் பெற்றோமென்றும் அறிந்திருக்கிறோம்.

௰௬ ஒருவன் மரணத்திற் கேதுவல்லாத பாவத்தைத் தன் சகோதரன் செய்யக்கண்டாற் (கர்த்தாவை நோக்கி) செபம்பண்ணக்கடவன். அப்பொழுது, அவர் அவனுக்கு மரணத்திற் கேதுவல்லாத பாவத்தைச் செய்தவர்களுக்கு ஏற்ற உயிரைக்கொடுப்பார். மரணத்திற்கேதுவான பாவமுண்டு. அதைக்குறித்துச் செபம்பண்ணச்சொல்லமாட்டேன்.

௰௭ அநியாயமியாவும் பாவந்தான். மரணத்திற்கேதுவல்லாத பாவமுமுண்டு.

௰௮ நாம் அறிந்துகொண்டபடி பராபரனிற்பிறந்தவனெவனோ அவன் பாவஞ்செய்யமாட்டான். பராபரனிற்பிறந்தவன் தன்னைக்காக்கிறான். ஆகையாற்பொல்லாங்கன் அவனைத்தொடான்.

௰௯ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி, நாம் பராபரனால் உண்டாயிருக்கிறோம். உலகமுழுவதும் பொல்லாங்கனுக்குள்ளே கிடக்கின்றது.

௨௰ மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி, நாம் மெய்யானவரை யறிந்துகொள்ளுவதற்குப் பராபரனுடைய குமாரன் வந்து நமக்குப் புத்தியைக்கொடுத்தார். அந்தப்படி நாம் அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவிலுள்ள மெய்யானவரைப் பற்றியிருக்கிறோம். அவரே மெய்யான தேவனுமாய் நித்திய சீவனுமாயிருக்கிறார்.

௨௧ பிள்ளைகளே! நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி யுங்களைக் காத்துக்கொள்வீர்களாக.—ஆமென்.

அப்போஸ்தலனாகிய

# இயோவான் எழுதின

## இரண்டாம் நிருபம்.

[கனம்பொருந்திய ஒரு அம்மாளையும் அவளுடையபிள்ளைகளையும் அப்போஸ்தலன் வாழ்த்தி அன்பு, விசுவாசம், சத்தியம், இவைகளில் நிலையாயிருக்கும்படிக்குப் புத்திசொல்லியது.]

நம்மிடத்திலே நிலைநிற்கிறதுமாய் என்றென்றைக்கும் நம்மோடிருப்பதுமாயிருக்கிற சத்தியத்தினிமித்தம் நான்மாத்திரமல்ல, சத்தியத்தையறிந்திருக்கிற மற்றயாவரும் உண்மையாய்ச் சிநேகித்திருக்கிற,

௨ தெரிந்துகொள்ளப்பட்ட அம்மாளுக்கும் அவளுடையபிள்ளைகளுக்கும் மூப்பனாகிய நான் எழுதுகிறதாவது.

௩ பிதாவாகிய பராபரனாலும் பிதாவின் குமாரனாகிய கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினாலுங் கிருபையும் இரக்கமுஞ் சமாதானமுஞ் சத்தியத்தோடும் அன்போடுங்கூட உங்களுக்குண்டாயிருக்கக்கடவது.

௪ உம்முடைய பிள்ளைகளிற்சிலர் பிதாவினால் நாம் கற்பனை யடைந்தபடி சத்தியத்திலே நடக்கிறவர்களென்று நான் கண்டு மிகவுஞ் சந்தோஷப்பட்டேன்.

௫ இப்பொழுது அம்மாளே! நான் உமக்குப் புதியகற்பனையாகவல்ல, ஆதிமுதல் நமக்குண்டாயிருக்கிற கற்பனையாக எழுதி வேண்டிக்கொள்ளுகிறதென்னவெனில், நாமொருவரிடத்தில் ஒருவர் அன்புகூரவேண்டும்.

௬ நாம் அவருடைய கற்பனைகளின்படி நடக்கிறதே யன்புகூருகிறதாம். நீங்கள் ஆதிமுதற் கேட்டிருக்கிறபடி அதிலே நடந்துகொள்ள வேண்டுமென்பதே யந்தக்கற்பனையாயிருக்கின்றது.

௭ அநேகவஞ்சனைக்காரர் உலகத்திலே தோன்றியிருக்கிறார்கள். இயேசுக்கிறிஸ்துவானவர் மாம்சமானாரென்று அறிக்கைபண்ணாமலிருக்கிறார்கள். இப்படிப்பட்டவனே வஞ்சனைக்காரனுமாய்க் கிறிஸ்துவுக்கெதிராளியுமாயிருக்கிறான்.

௮ நாம் நம்முடையவேலைகளை யிழந்துபோகாமல் நிறைந்தபலனைப்பெறும்படிக்கு, எச்சரிக்கையா யிருங்கள்.

௯ கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைநில்லாமல் மீறிநடக்கிற எவனும் பராபரனை யடையாதவனா யிருக்கிறான். கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைநிற்கிறவனே பிதாவையுங் குமாரனையும் அடைந்திருக்கிறான்.

௰ ஒருவன் உங்களிடத்தில்வந்து இந்தஉபதேசத்தைக் கொண்டுவராமலிருந்தால், அவனை நீங்கள் உங்கள்வீட்டிலே சேர்த்துக்கொள்ளவும் அவனுக்குவாழ்த்துதல்சொல்லவுங் கூடாது.

௰௧ அவனுக்குவாழ்த்துதல் சொல்லுகிறவன் அவனுடைய துற்கிரியைகளுக்குப் பங்காளனாகிறானே;

௰௨ நான் பின்னும் அநேககாரியங்களை யுங்களுக்கு அறிவிக்கவேண்டும். காகிதத்தினாலும் மையினாலும் அப்படிச்செய்ய மனதில்லை. நமக்குச் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்கு உங்களிடத்தில்வந்து முகமுகமாய்ப்பேசலாமென்று நம்பியிருக்கிறேன்.

௰௩ தெரிந்துகொள்ளப்பட்ட உம்முடைய சகோதரியின்பிள்ளைகள் உமக்குவாழ்த்துதல் செய்கிறார்கள்.—ஆமென்.

அப்போஸ்தலனாகிய

# இயோவான் எழுதின

## மூன்றாம் நிருபம்.

[அப்போஸ்தலன் காயு என்பவனை வாழ்த்தி அவனுடைய தருமகுணத்திற்காகச் சந்தோஷத்தைக் காட்டிச் சத்தியத்திலே நிலைநிற்கும்படிக்குப் புத்தி சொல்லியது.]

௧ மூப்பனாகிய நான் உண்மையாய் அன்புகூருகிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது. பிரியமானவனே!

௨ உன் ஆத்துமா வாழ்கிறதுபோல நீ சகலவிதத்திலும் வாழ்ந்து சுகமாயிருக்கவேண்டுகிறேன்.

௩ சகோதரர் வந்து, நீ சத்தியத்திலே நடந்துகொள்ளுகிறபடி உன்னுடைய உண்மையைக் குறித்துச் சாட்சிகொடுத்தபொழுது மிகவுஞ் சந்தோஷப்பட்டேன்.

௪ என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறதை நான் கேள்விப்படுகிறதினால் (வருகிற சந்தோஷத்திற்கு) மேலான சந்தோஷம் எனக்கில்லை.

௫ பிரியமானவனே! நீ சகோதரருக்கும் பரதேசிகளுக்குஞ் செய்கிற கிரியைகள் யாவையும் உண்மையாய்ச் செய்கிறாய்.

௬ அவர்கள் உன்னுடைய அன்பைக் குறித்துச் சபைக்குமுன்பாகச் சாட்சிசொன்னார்கள். அவர்களை நீ பராபரனுக்குமுன்பாகப் பாத்திரமானபடி வழிவிட்டனுப்பினால் நன்மைசெய்வாய்.

௭ அவருடைய நாமத்தினிமித்தம் அவர்கள் அஞ்ஞானிகளிடத்தில் ஒன்றும் வாங்காமற் புறப்பட்டார்களே;

௮ ஆகையால் நாம் சத்தியத்திற்கு உதவிசெய்கிறவர்களாயிருக்கும்படிக்கு, இப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளக் கடனாளிகளாயிருக்கிறோம். நான் சபைக்கு எழுதினேன்.

௯ அப்படியிருந்தும் அவர்களுக்கு முதலாளியாயிருக்க விரும்புகிற தியோத்திரேப்பு எங்களை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை,

௰ ஆனபடியினாலே நான் வரும்பொழுது அவன் எங்களுக்கு விரோதமாய்ப் பொல்லாத வார்த்தைகளைப் பேசிச் செய்து வருகிற கிரியைகளை நினைத்துக் கொள்ளுவேன். அவைகளும் அவனுக்குப் போதாது. அவன் தானே சகோதரரை ஏற்றுக்கொள்ளாதிருக்கிறதுமல்லாமல், ஏற்றுக்கொள்ள மனதாயிருக்கிறவர்களையுந் தடைசெய்து சபைக்குப் புறம்பே தள்ளுகிறான்.

௰௧ பிரியமானவனே! நீ பொல்லாங்கானதையல்ல, நலமானதைப் பின்பற்றுவாயாக. நன்மைசெய்கிறவன் பராபரனால் உண்டாயிருக்கிறான். பொல்லாங்கைச் செய்கிறவன் பராபரனைக் கண்டறியவில்லை.

௰௨ தேமேத்திரியென்பவனுக்கு எல்லாராலுஞ் சத்தியத்தினாலுந்தானே நற்சாட்சியுண்டாயிருக்கிறது; நாங்களுஞ் சாட்சி கொடுக்கிறோம், எங்கள் சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறீர்கள்.

௰௩ நான் அநேககாரியங்களை உனக்கு எழுதவேண்டும். அவைகளை மையினாலும் இறகினாலும் எழுதமனதில்லை.

௰௪ நான் சீக்கிரமாய் உன்னைப் பார்க்கலாமென்று நம்பியிருக்கிறேன். அப்பொழுது முகமுகமாய்ப் பேசுவோம். உனக்குச் சமாதானமுண்டாயிருக்கக்கடவது.

௰௫ (எங்களிடத்திலுள்ள) சிநேகிதர் உன்னை வாழ்த்துதல்செய்கிறார்கள். உன்னிடத்திலுள்ள சிநேகிதர்களைப் பேர்பேராக (என்னாலே) வாழ்த்துதல்செய்வாயாக.

முற்றும்.

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதின நிருபம்.

[(க) அப்போஸ்தலன் விசுவாசிகளுக்கு வாழ்த்துதல் சொல்லி, (ங) விசுவாசத்திற்காகப் போராட்டம்பண்ணும்படி அவர்களையெழுப்பி, (ச) கள்ளப்போதகர்களைக் குறித்து அவர்களை யெச்சரித்து, (௰எ) தேவ அன்பிலே தங்களைக் காத்துக்கொள்ளும்படிக்குப் புத்திசொல்லுகிறது.]

இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனும் யாக்கோபினுடைய சகோதரனுமாயிருக்கிற யூதாவென்பவன், பிதாவாகிய பராபரனாலே பரிசுத்தமாக்கப்பட்டும், இயேசுக்கிறிஸ்துவினால் காக்கப்பட்டும், அழைக்கப்பட்டுமிருக்கிறவர்களுக்கு எழுதுகிறதாவது.

உ இரக்கமும் சமாதானமும் அன்பும் உங்களுக்குச் சம்பூரணமாயுண்டாகக்கடவது.

ங பிரியமானவர்களே! பொதுவான இரட்சிப்பைக்குறித்து உங்களுக்கெழுதவேண்டுமென்று நான் மிகுந்த கருத்துள்ளவனாயிருக்கையில், முன்னே பரிசுத்தவான்களுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிற விசுவாசத்திற்காக நீங்கள் கெட்டியாய்ப் போராட்டம்பண்ணும்படிக்கு உங்களுக்குப் புத்தியெழுதுகிறது எனக்கு அவசியமாய்த் தோன்றுகிறது.

ச ஏனென்றால், நமது பராபரனுடைய கிருபையைக் காமவிகாரத்திற்கேதுவாகப் புரட்டி, ஒன்றான சுயாதிபதியான பராபரனுமாய் நம்முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை மறுதலிக்கிற துன்மார்க்கமான சில மனிதர்கள் பக்கவழியாய் நுழைந்திருக்கிறார்கள். அவர்கள் அடையும் ஆக்கினையைக்குறித்துப் பூர்வீகத்திலே முன்னெழுதியிருக்கின்றது.

ரு அந்தப்படி நீங்கள் முன்னேயறிந்திருந்தும், நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தவிரும்புகிறதென்னவெனில், கர்த்தர் எகிப்து தேசத்திலிருந்து சனத்தை யிரட்சித்தபின்பு, விசுவாசியாதவர்களை யழித்தார்.

சு அன்றியுந் தங்களுடைய ஆதி நிலைமையைக்காவாமல், தங்களுக்கேற்ற இருப்பிடத்தைவிட்டு விலகின தூதர்கள் பெரிய நியாயத்தீர்ப்புநாள்வரைக்கும் நித்திய சங்கிலிகளினாலே (கட்டப்பட்டு) அந்தகாரத்திலிருக்கும்படி நியமித்தார்.

எ அப்படிப்போலச் சோதோங் கொமோருப்பட்டினத்தார்களும் அவைகளைச்சூழ்ந்த பட்டினத்தார்களும் இவர்களுடைய விதமாய் வேசித்தனத்திலே அமிழ்ந்து அந்நிய மாம்சத்தைச் சேர்ந்துபோனதினாலே நித்திய அக்கினியை ஆக்கினையாக அடைந்து திருட்டாந்தமாக வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

அ அப்படிப்போல இந்தச் சொப்பனக்காரர் மாம்சத்தை அசுசிப்படுத்திக்கொண்டு, கர்த்தத்துவத்தை யசட்டைபண்ணி, மகத்துவங்களைத் தூஷணிக்கிறார்கள்.

கூ பிரதான தூதனாகிய மிகாவேலும் மோசேயினுடைய சரீரத்தைக்குறித்துப் பசாசானவனுடனே தருக்கித்துப்பேசின பொழுது, தூஷணமுள்ள தீர்ப்பையவனுக்குச்சொல்லத்துணியாமல், கர்த்தர் உன்னைக் கடிந்துகொள்வாராக வென்று மாத்திரஞ் சொன்னான்.

௰ இவர்கள் தங்களுக்குத்தெரியாதவைகளைத் தூஷணிக்கிறார்கள். புத்தியில்லாத மிருகங்களைப்போலச் சுபாவப்படி தங்களுக்குத் தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுக்கிறார்கள்.

௰க ஐயோ, அவர்களுக்குவேதனையுண்டாகும். அவர்கள் காயீனுடைய வழியில் நடந்து, பாலாம் கூலிக்காகச்செய்த வஞ்சகத்திலே விரைந்தோடிக் கோராவிரோதம் பேசினதினாலே கெட்டுப்போனார்கள்.

௰உ இவர்கள் உங்கள் அன்பு விருந்துகளில் மாசுகளாயிருந்து, பயமில்லாமல் விருந்துண்டு தங்களைமேய்க்கிறார்கள். அவர்கள் காற்றுகளால் அடிக்கப்பட்டலைகிற நீரில்லாதமேகங்களும் உலர்ந்து கனியற்று இரண்டுதரஞ் செத்து வேரற்றுப்போன மரங்களும்,

௰ங தங்கள் சுய இலச்சைகளை நுரைபோலக் கக்குகிற உக்கிரத்தையுடைய கடலின் அலைகளும் மார்க்கந்தப்பிநடக்கிற நட்சத்திரங்களுமாயிருக்கிறார்கள். என்றென்றைக்கு முளளகாரிருளே அவர்களுக்காக வைக்கப்பட்டிருக்கின்றது.

௧௪ ஆதாம் முதற்கொண்டு ஏழாந்தலைமுறையிலுண்டாயிருந்த ஏனோக்கென்பவன் இவர்களைக்குறித்தும் முன்னறிவித்ததாவது. இதோ, கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படிக்கும் அவர்களில் தேவபக்தியில்லாதயாவருந் துன்மார்க்கமாய்ச்செய்த சகலதுன்மார்க்கக் கிரியைகளினிமித்தமுந் தமக்கு விரோதமாய்.

௧௫ தேவபக்தியில்லாத பாவிகள் பேசின கடினவார்த்தைகளெல்லா வற்றினிமித்தமும் அவர்களைக்கண்டிக்கும்படிக்கும் ஆயிரமாயிரமான சேனைகளாகிய தம்முடைய பரிசுத்தவான்களோடுங் கூடவருகிறாரென்று அறிவித்தான்.

௧௬ இவர்கள் முறுமுறுக்கிறவர்களும் முறையிட்டுத் திரிகிறவர்களுமாய்த் தங்களிச்சைகளின்படி நடக்கிறவர்களுமாயிருக்கிறார்கள். இவர்கள்வாயினாலே மிகவும் இறுமாப்பானவைகளைப் பேசிப் பொழிவுக்காகப் பெரியோர்களைப் புகழுகிறார்கள்.

௧௭ பிரியமானவர்களே! நீங்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலரால் முன்சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்துக் கொள்ளுங்கள்.

௧௮ கடைசிக்காலத்திலே தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்கிற பரியாசக்காரர் தோன்றுவார்களென்று உங்களுக்குச் சொன்னார்களே;

௧௯ இவர்களே பிரிந்துபோகிறவர்களுஞ் சென்மசுபாவத்தாருந் (தேவ) ஆவியில்லாதவர்களுமானவர்கள்.

௨௰ பிரியமானவர்களே! நீங்கள் உங்களுக்குண்டாயிருக்கிறமிகவும் பரிசுத்தமான விசுவாசத்தின்மேல் உங்களைப்பொருந்தக் கட்டிக்கொண்டு,

௨௧ பரிசுத்த ஆவியைக்கொண்டு ஜெபம்பண்ணிப் பராபரனுடைய அன்பிலே உங்களைக்காத்துக்கொண்டு, நித்தியசீவனுக்கேதுவாக நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய இரக்கம் வரப்பார்த்திருங்கள்.

௨௨ அல்லாமலும் வகையறுக்கிறவர்களாய் நீங்கள் சிலருக்கு இரங்கி, சிலரை அக்கினியிலிருந்து இழுத்துக்கொண்டு, பயத்தோடே இரட்சித்து, மாம்ச இச்சைகளால் அசுசிப்பட்டிருக்கிற அங்கியையும் வெறுத்துப்போடுங்கள்.

௨௩ நீங்கள்வழுவாதபடிக்கு உங்களைக் காத்துக்கொள்ளுகிறதற்கும், மாசில்லாமல் மகிழ்ச்சியோடே உங்களைத்தமது மகிமையுள்ள சந்நிதானத்திலே நிறுத்துகிறதற்கும் வல்லமையுள்ளவருமாய்,

௨௪ நம்முடைய இரட்சகரான ஞானமுள்ள ஒருவராகிய தேவனுமாயிருக்கிறவருக்கு இப்பொழுதும் இனிமேலிருக்கும் எல்லாக்காலங்களிலேயும் புகழ்ச்சியும் மகத்துவமும் வல்லமையும் அதிகாரமும் உண்டாயிருக்கக்கடவது.—ஆமென்.

---

தெய்வவசன

போதகராகிய இயோவானுக்கு

# வெளிப்படுத்தினவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

[(௧) முகவுரையாகப்பொது வாழ்த்துதல், (௪) யோவான்சபைகளேழுக்கும் வாழ்த்துதல்சொல்லி, (௯) தனக்குக்கிறிஸ்துநாதர் தரிசனையானதைச்சொன்னது.]

சீக்கிரமாய் நடக்கவேண்டியவைகளைப் பராபரன் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிக்கும்படிக்கு இயேசுக்கிறிஸ்துவுக்குக்கொடுத்ததும் இவர் வெளிப்படுத்தினதுமானவிசேஷம். அவர்தம்முடைய ஊழியக்காரனாகிய யோவானிடத்திற்குத் தம்முடைய தூதனையனுப்பி, அவனாலிவைகளைக் குறிப்பாக்கக்காட்டினார்.

௨ அவன் பராபரனுடைய வசனமும் இயேசுக்கிறிஸ்து சாட்சியிட்ட விசேஷமுமாகிய தான்கண்டயாவற்றையும் அறிவித்திருக்கிறான்.

௩ காலஞ்சமீபமாயிருக்கிறது. ஆகையால் இந்தத்தீர்க்கதரிசனமானவசனங்களைவாசிக்கிறவனுங்கேட்கிறவர்களும் இதில் எழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்களும்பாக்கியவான்கள்.

௪ யோவான் ஆசியாவிலுள்ளசபைகளேழுக்கு எழுதுகிறதாவது. இருக்கிறவரும் இருந்தவருமவருகிறவருமானவராலும் அவருடைய ஆசனத்திற்கு முன்பாகவிருக்கிற ஏழு ஆவிகளாலும்,

௫ உண்மையுள்ள சாட்சியும் மரித்தோரிலிருந்து முதற்பிறந்தவரும் பூமியின் இராசாக்களுக்கு அதிபதியுமாகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது. நம்மிடத்தில் அன்புகூர்ந்து தம்முடைய இரத்தத்தினாலே நம்முடைய பாவங்களற நம்மைக் கழுவி,

௬ தம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு (முன்பாக) நம்மைத் தம்முடைய இராசரிகத்தாராகவும் ஆசாரியராகவுஞ் செய்திருக்கிற அவருக்கு மகிமையும் வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருக்கக்கடவது ஆமென்.

௭ அதோ, மேகங்களுடனே வருகிறார். கண்களெல்லாம் அவரைக் குத்தினவர்களும் (அவரைக் காண்பார்கள்.) பூமியின் கோத்திரத்தார்களெல்லாரும் அவரைக் குறித்துத் துக்கத்தோடே புலம்புவார்கள். மெய்யாய் அப்படியிருக்கும்—ஆமென்.

௮ இருக்கிறவரும் இருந்தவரும் வருகிறவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர் நான் அல்பாவும் ஓமெகாவும் ஆதியும் அந்தமுமாயிருக்கிறேனென்று திருவுளம்பற்றுகிறார்.

௯ உங்கள் சகோதரனுமாய் இயேசுக்கிறிஸ்துவினிமித்தம் வருகிற உபத்திரவத்திற்கும் அவருடைய இராசரிகத்திற்கும் பொறுமைக்கும் உங்களுடனே பங்காளனுமாயிருக்கிற யோவானாகிய நான் பராபரனுடைய வசனத்தினிமித்தமும் இயேசுக்கிறிஸ்துவைக் குறித்துச் சாட்சிசொன்னதினிமித்தமும் பத்மு என்னப்பட்ட தீவிலே இருந்தேன்.

௰ (அங்கே) கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளானேன்.

௰௧ அப்பொழுது நீ காண்கிறதை ஒரு புத்தகத்திலேயெழுதி, ஆசியாவிலிருக்கிற எபேசு, சிமிர்னா, பெர்கமு, தியத்தீரா, சர்தை, பிலதெல்பியா, லவோதிக்கேயா, இவைகளிலுள்ள சபைகளேழுக்கும் அனுப்பென்று எனக்குப்பின்னாலே எக்காளச்சத்தம்போன்ற மிகுந்த சத்தத்தைக் கேட்டேன்.

௰௨ அப்பொழுது என்னுடனே சத்தமிட்டுப் பேசினவரைப் பார்க்கத் திரும்பினேன்.

௰௩ திரும்பினபொழுது, ஏழு பொன்விளக்குத்தண்டுகளையும், ஏழுவிளக்குத்தண்டுகளின் மத்தியிலே நிலையங்கியைத் தரித்து, மார்பருகே பொற்கச்சைக் கட்டியிருந்த மனிதகுமாரனுக்கொப்பானவரையுங் கண்டேன்.

௰௪ அவருடைய சிரசும் மயிரும் வெண்மையான பஞ்சியையும் உறைந்த மழையையும்போல வெண்மையாயிருந்தன. அவருடைய கண்கள் அக்கினிச்சுவாலையைப்போலிருந்தன.

௰௫ அவருடைய கால்கள் உலைக்களத்திற் காய்கிற பிரகாசமுள்ள செம்பைப்போலிருந்தன. அவருடைய சத்தம் பெருவெள்ள இரைச்சலைப்போலிருந்தது.

௰௬ அல்லாமலும், அவர் வலதுகையிலே ஏழு நட்சத்திரங்களை யேந்திக்கொண்டிருந்தார். அவர் வாயிலிருந்து இருபுறமுங் கருக்குள்ள கட்கம் புறப்பட்டது. அவருடைய முகம் உச்சிக்காலத்திலே வல்லமையாய்ப் பிரகாசிக்கிற சூரியனைப்போலிருந்தது.

௰௭ இப்படி யவரைக் கண்டபொழுது செத்தவனைப்போல அவருடைய பாதங்களிடத்தில் விழுந்தேன். அப்பொழுது அவர் தமது வலதுகரத்தை என்மேல் வைத்து, (என்னுடனே) சொன்னதாவது, நீ பயப்படவேண்டுவதில்லை. நான் முந்தினவனும் பிந்தினவனும் உயிருள்ளவனுமானவன்.

௰௮ நான் மரித்தும் இதோ, என்றென்றைக்கும் உயிரோடிருந்து மரணத்திற்கும் மரித்தோர் ஸ்தலத்திற்கு முரிய திறவுகோல்களையுடையவனுமாயிருக்கிறேன்.

௰௯ ஆகையால் நீ கண்டவைகளையும் இருக்கிறவைகளையும் இவைகளுக்குப் பின் நடப்பவைகளையும் எழுது.

௨௰ என்னுடைய வலதுகரத்தில் நீ கண்ட நட்சத்திரங்களேழின் இரகசியத்தையும் பொன்விளக்குத்தண்டுகளேழின் குறிப்பையுமெழுது. இந்த நட்சத்திரங்களேழும் சபைகளேழினுடைய தூதர்களாயிருக்கின்றன. நீ கண்ட விளக்குத்தண்டுகளேழும் ஏழுசபைகளாயிருக்கின்றன.

## ௨. அதிகாரம்.

[(௧) எபேசுசபைக்கும், (௮) சிமிர்னாசபைக்கும், (௰௨) பெர்கமுசபைக்கும், (௰௮) தியத்தீராசபைக்கும் எழுதியனுப்பின நிருபங்கள்.]

௧ எபேசுபட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு எழுதவேண்டியதென்னவெனில், ஏழு நட்சத்திரங்களைத் தம்முடைய வலதுகரத்தில் ஏந்திக்கொண்டு ஏழுபொன்விளக்குத்தண்டுகளின் மத்தியிலே உலாவிக்கொண்டிருக்கிறவர் சொல்லுகிறதாவது,

௨ உன் கிரியைகளையும் உன் பிரயாசத்தையும் உன் பொறுமையையும் நீ பொல்லாதவர்களுக்கு இடங்கொடாமலிருக்கிறதையும் அப்போஸ்தலரல்லாதவர்கள் தங்களை அப்போஸ்தலரென்று சொல்லுகிறதை நீ சோதித்து அவர்களைப் பொய்யரென்றுகண்டறிந்ததையும்,

௩ நீ பொறுமையைக் காத்துக்கொண்டு வருகிறதையும் எனது நாமத்தினிமித்தம் இளைப்பையடையாமற் பிரயாசப்பட்டதையும் அறிந்திருக்கிறேன்.

௪ ஆனாலும் நீ ஆதியிற்காட்டின அன்பைவிட்டபடியால் உன்மேல் விசனமாயிருக்கிறேன்.

௫ ஆகையால் நீ எப்படிப்பட்ட நிலைமையிலிருந்து விழுந்தாயென்பதை நினைத்து, மனந்திரும்பி, ஆதியில் செய்த கிரியைகளைச் செய்வாயாக. நீ மனந்திரும்பாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, உன் விளக்குத்தண்டை அதனிடத்தினின்று நீக்குவேன்.

௬ நிக்கொலாவின் மார்க்கத்தாரின் கிரியைகளைப் பகைக்கிறாய். இது உன்னிடத்திலுண்டு. அவைகளை நானும் பகைக்கிறேன்.

௭ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவனுக்கு பராபரனுடைய பரதீசின் மத்தியிலிருக்கிற ஜீவ விருட்சத்தின் கனியைப் புசிக்கக் கொடுப்பேனென்கிறார் என்றெழுது.

௮ சிமிர்னாப்பட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவெனில், மரித்து உயிரோடிருக்கிற முந்தினவரும் பிந்தினவருமானவர் சொல்லுகிறதாவது.

௯ உன் கிரியைகளையும் உபத்திரவத்தையும் ஐசுவரியமுள்ள உனக்கிருக்கிற தரித்திரத்தையுந் தங்களை யூதரென்று சொல்லியும் யூதராயிராமல் சாத்தானுடைய ஆலயமாயிருக்கிறவர்கள் செய்கிற தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.

௰ உனக்கு வரும் துன்பங்களைக்குறித்து எவ்வளவேனும் பயப்படாதிருப்பாயாக. கேள். நீங்கள் சோதிக்கப்படும்பொருட்டாக பசாசு உங்களிற் சிலரைக் காவலிற் போடுவான். பத்துநாள் உபத்திரவப்படுவீர்கள். ஆகிலும் மாண்டுபோகுமளவும் உண்மையாயிரு. அப்பொழுது ஜீவ கிரீடத்தை உனக்குத் தருவேன்.

௰௧ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவன் இரண்டாம் மரணத்தாற் சேதப்படுவதில்லையென்கிறார் என்றெழுது.

௰௨ பெர்கமுப்பட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவெனில், இருபுறமுங் கருக்குள்ள கட்கத்தையுடையவர் சொல்லுகிறதாவது.

௰௩ உன் கிரியைகளையுஞ் சாத்தானுடைய ஆசனமிருக்கிற இடத்தில் நீ குடியிருக்கிறதையுஞ் சாத்தான் குடியிருக்கிற உங்களிடத்திலே யெனக்கு உண்மையுள்ள சாட்சியாகிய அந்திப்பாவென்பவன் கொல்லப்பட்ட நாட்களிலேயும் என்னைப் பற்றும் விசுவாசத்தை மறுதலியாமல் என்னுடைய நாமத்தைப் பற்றிக்கொண்டிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

௰௪ ஆகிலுஞ் சிலகாரியங்களைக்குறித்து உன்மேல் விசனமாயிருக்கிறேன். விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிப்பதற்கும் வேசித்தனம்பண்ணுவதற்கும் இதுவான கேடுகளை இஸ்ரவேல் புத்திரர் முன்பாகப் போடும்படிக்குப் பாலாகென்பவனுக்குப் போதனைசெய்த பாலாமுடைய போதகத்தைப் பிடித்திருக்கிறவர்கள் உன்னிடத்திலிருக்கிறார்கள்.

௰௫ அல்லாமலும் நிக்கொலாவின் மார்க்கத்தாருடைய போதகத்தைப் பற்றிக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்திலுண்டு.

௰௬ ஆகையால் நீ மனந்திரும்புவாயாக. இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து என்வாயின் கட்கத்தால் அவர்களோடே யுத்தம் பண்ணுவேன்.

௰௭ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவன். ஜெயங்கொள்ளுகிறவனுக்கு நான் மறைவான மன்னாவைப் புசிக்கக்கொடுத்து, அவனுக்கு வெண்மையான கல்லையும் அந்தக் கல்லின்மேல் எழுதப்பட்டதுமாய்ப் பெறுகிறவனையன்றி வேறொருவனும் அறியாததுமாயிருக்கிற புதிய நாமத்தையுங் கட்டளையிடுவேனென்கிறார் என்றெழுது.

௰௮ தியத்தைராப் பட்டினத்திலுள்ள சபையின் தூதனுக்கு நீ யெழுதவேண்டியதென்னவெனில் அக்கினிச்சுவாலையைப்போன்ற கண்களும் உருக்கிய செம்பைப்போன்ற காலகளுமுள்ள தேவகுமாரன் சொல்லுகிறதாவது,

௰௯ உன் கிரியைகளையும் உன் அன்பையும் உன் ஊழியத்தையும் உன் விசுவாசத்தையும் உன் பொறுமையையும் நீ பின்பு செய்த கிரியைகள் முந்தின கிரியைகளிலும் அதிகமாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

௨௰ ஆகிலும் (சிலதைக்குறித்து) உன்மேல் விசனமாயிருக்கிறேன். என்னவெனில் வேசித்தனம்பண்ணும்படிக்கும் விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிக்கும்படிக்கும், தன்னைத் தீர்க்கதரிசியென்று சொல்லிக்கொள்ளுகிற இயேசபேலென்னும் ஸ்திரீ என்னுடைய ஊழியக்காரருக்குப் போதித்து வஞ்சிக்கிறாள். அவளுக்கு நீ இடங்கொடுக்கிறாய்.

௨௧ அவள் மனந்திரும்பும்படியாய்க் காலத்தை அவளுக்குக் கொடுத்தேன். அவள் தன் வேசிமார்க்கத்தைவிட்டு மனந்திரும்ப விருப்பமில்லை.

௨௨ (ஆகையால்) கேள், அவளும் அவளுடனேகூட விபசாரஞ்செய்தவர்களுந் தங்களுடைய கிரியைகளைவிட்டு மனந்திரும்பாவிட்டால், நான் அவளை ஒரு கட்டிலின்மேலும் அவர்களை மிகுந்த உபத்திரவத்திலேயும் போட்டு, அவளுடைய பிள்ளைகளைக் கொலைசெய்வேன்.

௨௩ அப்பொழுது நானே உள்ளிந்திரியங்களையும் இருதயங்களையும் ஆராய்கிறவனென்று எல்லாச் சபைகளும் அறிந்துகொள்வார்கள். அல்லாமலும் உங்களில் அவ

னவனுடைய கிரியைகளின்படியே யாவருக்கும் பதில் கொடுப்பேன்.

௨௪ இந்தப் போதகத்தைப் பற்றிக்கொள்ளாமலும் அவர்கள் சொல்லுகிறபடி சாத்தானுடைய ஆழங்களை யறிந்துகொள்ளாமலுமிருக்கிற தியத்தைராவிலுள்ள மற்றவர்களாகிய உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது: உங்கள் மேல் வேறொரு பாரத்தையும் போடமாட்டேன்.

௨௫ உங்களுக்குண்டானதை நான் வருமளவும் பத்திரமாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள்.

௨௬ ஜெயங்கொண்டு முடிவுபரியந்தம் என் கிரியைகளைக் காத்துக்கொள்ளுகிறவனெவனோ அவனுக்கு என்னுடைய பிதாவினிடத்தில் நான் பெற்றதுபோலச் ஜனக்கூட்டங்கள்மேல் அதிகாரத்தைக் கொடுப்பேன்.

௨௭ அவன் இருப்புக்கோலால் அவர்களை நடத்திக்கொள்வான். அவர்கள் மண்கலங்களைப்போல நொறுக்கப்படுவார்கள்.

௨௮ அல்லாமலும் விடிவெள்ளி நட்சத்திரத்தை யவனுக்குக் கொடுப்பேன்.

௨௯ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்றெழுது.

## ௩. அதிகாரம்.

[(௧) சருதைச் சபைக்கும், (௮) பிலதெல்பியா சபைக்கும், (௰௪) இலவோதிக்கேயா சபைக்கும் எழுதியனுப்பின நிருபங்கள்.]

சருதையூரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவெனில், பராபரனுடைய ஏழு ஆவிகளையும் ஏழு நட்சத்திரங்களையுமுடையவர் சொல்லுகிறதாவது: உன் கிரியைகளை யறிந்திருக்கிறேன். நீ உயிருள்ளவனென்று பேர்கொண்டிருந்தும் செத்தவனாயிருக்கிறாய்.

௨ உன் கிரியைகள் பராபரனுக்குமுன்பாக நிறைந்தவைகளல்லவென்று கண்டிருக்கிறேன். ஆகையால் நீ விழித்துக்கொண்டு, சாகிறதற்கேதுவான மற்றவைகளை ஸ்திரப்படுத்துவாயாக.

௩ மேலும் நீ கேட்டுப்பெற்றுக்கொண்டவகையை நினைத்துக் கைக்கொண்டு மனந்திரும்புவாயாக. நீ விழித்துக்கொள்ளாவிட்டால் திருடனைப்போல உன்மேல் வருவேன். நான் உன்மேல் வரும் நேரத்தை யறியாதிருப்பாய்.

௪ தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்தாத சிலபேர் சருதையூரிலே யுன்னோடேயுண்டு. அவர்கள் பாத்திரவான்களானபடியால், என்னுடனே கூட வெண்மையான உடைகளைத் தரித்து நடப்பார்கள்.

௫ ஜெயங்கொள்ளுகிறவன் வெண்மையான வஸ்திரங்களால் உடுத்தப்படுவான். நான் ஜீவபுஸ்தகத்தில் அவனுடைய நாமத்தைக் கிறுக்கிப்போடாமல், அதை என் பிதாமுன்பாகவும் அவருடைய தூதர்முன்பாகவும் அறிக்கைபண்ணுவேன்.

௬ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்றெழுது.

௭ பிலதெல்பியாவூரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுதவேண்டியதென்னவெனில் தாவீதின் திறவுகோலையுடையவருமாய் ஒருவரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறக்கிறவருமாய் ஒருவரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்டுகிறவருமாயிருக்கிற பரிசுத்தமுஞ் சத்தியமுமுள்ளவர் சொல்லுகிறதாவது.

௮ உன் கிரியைகளை யறிந்திருக்கிறேன். கொஞ்சப்பெலன் (மாத்திரம்) உனக்கிருந்தும், நீ யென்னுடைய நாமத்தை மறுதலியாமல் என் வசனத்தைக் காக்கக்கொண்டபடியினாலே இதோ, உனக்குமுன்பாகத் திறந்திருக்கிற வாசலைக் கொடுத்தேன். அதையொருவனும் பூட்டமாட்டான்.

௯ கேள். யூதரல்லாதிருந்தும் தங்களையூதரென்று பொய்சொல்லுகிறவர்களாகிய சாத்தானுடைய ஆலயத்தாரிற் (சிலரை) உனக்குத் தருகிறேன். கேள். அவர்கள் உன் பாதங்களுக்குமுன்பாக வந்து பணிந்து, நான் உன்மேல் அன்பாயிருக்கிறதை யறிந்துகொள்ளும்படி செய்வேன்.

௰ என்னுடைய பொறுமையைக் குறித்துச் சொல்லுகிற வசனத்தை நீ கைக்கொண்டபடியினாலே நானும் பூமியின்மேற் குடியிருக்கிறவர்களைச் சோதிக்கும்படிக்குப் பூச்சக்கரத்தின்மேலெங்கும் வரும் சோதனைகாலத்திற்குத் தப்பும்படி யுன்னைக் காப்பாற்றுவேன்.

௰௧ சீக்கிரமாய் வருகிறேன். ஒருவனும் உன் கிரீடத்தை யெடுத்துக்கொள்ளாதபடிக்கு உனக்குள்ளதைப் பத்திரமாய்ப் பற்றிக்கொள்வாயாக.

௰௨ ஜெயங்கொள்ளுகிறவனை நான் என் தேவனுடைய ஆலயத்திலே ஸ்தம்பமாக்குவேன். அதினின்று அவன் ஒருக்காலும் நீங்கான். மேலும், என் தேவனுடைய நாமத்தையும் என் தேவனிடத்திலிருந்திறங்குகிற புதிய எருசலேமாகிய என் தேவனுடைய பட்டணத்தின் நாமத்தையும் என் புதிய நாமத்தையும் அவன்மேலே யெழுதுவேன்.

௰௩ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்றெழுது.

௰௪ இலவோதிக்கேயாவூரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ யெழுதவேண்டியதென்னவெனில், உண்மையுஞ் சத்தியமுமான சா

ட்சியுமாயப்பராபரனுடைய சிருட்டிகளுக்கு ஆதியுமாயிருக்கிற ஆமெனென்பவர் சொலலுகிறதாவது.

௰௫ உன கிரியைகளை யறிந்திருக்கிறேன. நீ குளிர்ச்சியுள்ளவனுமல்ல, அனலுள்ளவனுமல்ல, நீ குளிர்ச்சியையாவது அனலையாவது உள்ளவனானால நலமாயிருக்கும.

௰௬ இப்படி நீ குளிர்ச்சியும அனலுமில்லாமல வெதுவெதுப்புள்ளவனானபடியினாலே உன்னை என வாயினின்றுமவாந்திபணணுவேன.

௰௭ நீ நிர்ப்பாக்கியமுள்ளவனும பரிதபிக்கப்படத்தக்கவனும, எளியவனும குருடனும, நிருவாணியுமாயிருக்கிறதையறியாமல, நான ஐசுவரியமுள்ளவனென்றும அதிகத்திரவியசசேகரம்பணணினவனென்றும எனக்கொன்றும வேண்டியதில்லையென்றுஞ்சொலலுகிறாய.

௰௮ ஆதலால நான உனக்கு ஆலோசனையாயச்சொலலுகிறதாவது. நீ ஐசுவரியவானாகும்படிக்கு நெருப்பிலே புடமிடப்பட்டபொன்னையும உன நிருவாணமாகிய அவலட்சணந்தோனறாமலிருக்கத்தக்கதாகநீ உடுத்திக்கொளளும்படிக்கு வெணமையானவஸ்திரங்களையும என்னிடத்திலே வாங்கிக்கொள்ளவும, நீ பார்வையடையும்படிக்கு உனகண்களுக்கு மாத்திரையைப்போடவுமவேணடுமென்று சொலலுகிறேன.

௰௯ என்னால் சிநேகிக்கப்படுகிறவர்களெவர்களோ அவர்களைக்கடிந்துகொணடுதணடிக்கிறேன. ஆகையால நீ சாககிரதையாயிருந்து மனந்திருப்பக்கடவாய.

௨௰ இதோ, வாசற்படியிலே நினறு தட்டுகிறேன. ஒருவன என சத்தத்தைக்கேட்டுக்கதவைத்திறந்தால, அவனிடத்திலநான பிரவேசித்து அவனோடே இராப்போசனம பணணுவேன. அவனும எனனோடே இராப்போசனமபணணுவான.

௨௧ நான்செயங்கொணடு என பிதாவினுடைய ஆசனத்திலே அவரோடேகூட உட்கார்ந்ததுபோலச்செயங்கொளளுகிறவன என்னுடைய ஆசனத்திலே எனனோடேகூட உட்காரும்படி அருள்செயவேன.

௨௨ ஆவியானவர் சபைகளுக்குச்சொலலுகிறதைக்காதுள்ளவன கேட்கக்கடவனென்றெழுது என்றார்.

## ௪. அதிகாரம்.

[(௧) இயோவானதேவ ஆசனத்தையும, (௪) அதைச்சூழ இருபத்துநான்குமூப்பரையும, (௬) நான்குசீவனகளையும, (௮) எல்லாருஞ் சிருட்டிகரைத்தொழுதுகொளளுகிறதையுங்கணடது.]

இவைகளுக்குப்பினபு அதோ, வானத்திலே ஒருவாசல திறந்திருக்கக்கணடேன. அல்லாமலும முனனே நானகேட்டும்படி எக்காளமபோல என்னுடனேபேசினசத்தம என்னுடனேசொன்னது. இங்கே ஏறிவா. இதற்குப்பினபுசமபவிக்கத்தக்கவைகளையுனக்குக்காணபிப்பேனென்றார்.

௨ உடனே ஆவிக்குளளானேன. அப்பொழுது வானத்திலே ஒரு ஆசனமவைக்கப்பட்டிருக்கவும அந்த ஆசனத்தினமேல ஒருவர் உட்கார்ந்திருக்கவுங்கணடேன.

௩ (அதிலே) உட்கார்ந்திருந்தவர் பார்வைக்கு வைக்கலலும் சுவ புக்கலலும போலத்தோனறினார். அந்த ஆசனத்தைச்சுற்றியொருவானவிலலிருந்தது. அதுபார்வைக்குமரகதமபோலத்தோனறிறறு.

௪ மேலும அந்த ஆசனத்தைச்சூழ இருபத்துநான்கு ஆசனங்களுமிருந்தன. அந்த ஆசனங்களினமேலே வெணமையான வஸ்திரங்களைத்தரிப்பிக்கப்பட்ட இருபத்துநான்குமூப்பர்கள உட்கார்ந்திருந்தார்கள. அவர்கள தங்களசிரசுகளினமேலே பொன கிரீடங்களையுடையவர்களாயிருந்தார்கள.

௫ அன்றியும அந்த ஆசனத்திலிருந்து மினனும இடிமுழக்கங்களும (மற்றச்) சத்தங்களும புறப்பட்டன. மேலும பராபரனுடைய ஏழு ஆவிகளாகிய ஏழுதீவெட்டிகள ஆசனத்திற்குமுனபாக எரிகிறவைகளாயிருந்தன.

௬ மேலும அந்த ஆசனத்திற்குமுனபாக பளிங்குக்கணணாடியைப்போனற கடலிருந்தது. அதுவுமலலாமல அந்த ஆசனத்தினமத்தியிலும ஆசனத்தைச்சூழவும நான்குசீவனகளிருந்தன. அவைகள முன்புறமும பினபுறமுங் கணகளால நிறைந்தவைகளாயிருந்தன.

௭ முதலாஞ்சீவனசிங்கத்திற்கொப்பாகவும இரணடாஞ்சீவனகனறுக்குட்டிக்கொப்பாகவும மூனறாஞ்சீவனமனிதனைப்போனறமுகமுளளதாகவும, நான்காஞ்சீவனபறக்கிறகழுகுக்கொப்பாகவுமிருந்தன.

௮ அந்தநான்குசீவனகளும ஒவவொன்று அவவாறு சிறகுகளுள்ளவைகளுமாய சுற்றிலும உள்ளேயுங் கணகளால நிறைந்தவைகளுமாய இருந்தவரும இருக்கிறவரும வருகிறவருமாகியசர்வவலலமையுளளதேவனாயிருக்கிறபராபரனபரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர். என்று இரவும பகலும ஓயவிலலாமற்சொலலிக்கொளளுகிறவைகளுமாயிருந்தன.

௯ மேலும ஆசனத்தினமேலுட்கார்ந்திருந்து என்றென்றைக்கும உயிரோடிருக்கிறவருக்கு அந்தசீவனகளதுதியையுங் கனத்தையுந் தோத்திரத்தையுஞ் செலுத்தும்பொழுது,

௰ இருபத்துநான்கு மூப்பர்களும் ஆசனத்தின்மேல் உட்கார்ந்தவருக்கு முன்பாக (வணக்கமாய்) விழுந்து, என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத் தொழுதுகொண்டு, தங்கள் கிரீடங்களை ஆசனத்தின் முன்பாக வைத்து,

௰௧ ஆண்டவரே! தேவரீர் சகலத்தையுஞ் சிருட்டித்தீர். உம்முடைய சித்தத்தினாலே அவைகள் உண்டாயிருக்கிறவைகளுஞ் சிருட்டிக்கப்பட்டவைகளுமாயிருக்கின்றன. ஆகையால் மகிமையையுங் கனத்தையும் வல்லமையையும் பெற்றுக்கொள்ளுகிறதற்குப் பாத்திரமாயிருக்கிறீரென்று புகழுகிறார்கள்.

## ௫. அதிகாரம்.

[(௧) முத்திரிக்கப்பட்ட புத்தகத்தை விரித்துக்காட்டுகிறதற்குத் தேவ ஆட்டுக்குட்டியானவர் பாத்திரரென்றும், (௭) அவர் அந்தப்புத்தகத்தை வாங்கினாரென்றும், (௮) சீவன்களும் மூப்பர்களும் உலகமீட்பராகிய அவரைத் தொழுதுகொண்டதையுஞ் சொல்லியது.]

அன்றியும் அந்த ஆசனத்திலேயுட்கார்ந்தவருடைய வலதுகையிலே உள்ளும் புறம்பும் எழுதப்பட்டும் ஏழு முத்திரைகளாலே பத்திரப்படுத்தப்பட்டுமிருந்த ஒரு புத்தகத்தைக் கண்டேன்.

௨ பலமுள்ள ஒரு தூதனையுங் கண்டேன். அவன் இந்தப்புத்தகத்தைத் திறக்கிறதற்கும் இதின் முத்திரைகளை உடைக்கிறதற்கும் பாத்திரர் யாரென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௩ வானத்திலாவது பூமியின் மேலாவது பூமியின் கீழாவது ஒருவனும் அந்தப் புத்தகத்தைத் திறக்கவும் அதிலே நோக்கிப்பார்க்கவுங் கூடாதிருந்தது.

௪ ஒருவனும் அந்தப்புத்தகத்தைத் திறந்து அதிலே நோக்கிப் பார்க்கிறதற்குப் பாத்திரனாகக் காணப்படாததினாலே நான் மிகவும் அழுதேன்.

௫ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை நோக்கி நீ அழவேண்டுவதில்லை. இந்தப்புத்தகத்தைத் திறந்து இதின் ஏழு முத்திரைகளையுமுடைக்கும்படிக்குத் தாவீதின் வேராகிய யூதாகோத்திரத்தில் தோன்றிய சிங்கம் இதோ, செயங்கொண்டிருக்கிறதென்றான்.

௬ அப்பொழுது நான் பார்த்து ஆசனத்திற்கும் நான்கு சீவன்களுக்கும் மூப்பர்களுக்கும் மத்தியிலே ஒரு ஆட்டுக்குட்டி நிற்கக்கண்டேன். அது அடிக்கப்பட்ட வண்ணமாகவும் ஏழு கொம்புகளையும் பூமியெங்கும் அனுப்பப்பட்ட பராபரனுடைய ஏழாவிகளாகிய ஏழு கண்களையுமுடையதாகவுமிருந்தது.

௭ மேலும் அது வந்து ஆசனத்தின்மேலுட்கார்ந்தவருடைய வலதுகரத்திலிருந்த புத்தகத்தை வாங்கிற்று.

௮ அந்தப் புத்தகத்தை அது வாங்கினபொழுது அந்த நான்கு சீவன்களும் இருபத்துநான்கு மூப்பர்களுந் தங்கள் சுரமண்டலங்களையும் பரிசுத்தவான்களுடைய செபங்களாகிய தூப வருக்கங்களால் நிறைந்த பொற் கலசங்களையும் பிடித்துக்கொண்டு ஆட்டுக்குட்டிக்கு முன்பாக (வணக்கமாய்) விழுந்து,

௯ தேவரீர் அடிக்கப்பட்டு உம்முடைய இரத்தத்தினாலே சகல கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலுந் தேசத்தாரிலும் (மற்ற) சனக்கூட்டங்களிலும் எங்களைப் பராபரனுக்காக வாங்கிக்கொண்டு,

௰ எங்கள் பராபரனுக்கு (முன்பாக) எங்களை யிராசாக்களும் ஆசாரியருமாக்கினீர். நாங்கள் பூமியிலே ஆளுகை செய்வோம். ஆகையால் நீர் இந்தப்புத்தகத்தைவாங்கி இதின் முத்திரைகளையுடைக்கிறதற்குப் பாத்திரராயிருக்கிறீரென்று புதிய பாட்டைப் பாடினார்கள்.

௰௧ பின்னும் நான் பார்த்தபொழுது அந்த ஆசனத்தையுஞ் சீவன்களையும் மூப்பர்களையுஞ் சூழ்ந்திருந்த அநேகந் தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன். அவர்களுடைய இலக்கம் பதினாயிரத்திற்குப் பதினாயிரமும் ஆயிரத்திற்கு ஆயிரமுமாயிருந்தது.

௰௨ அவர்களும், அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவர் வல்லமையையும் ஐசுவரியத்தையும் ஞானத்தையும் பலத்தையுங் கனத்தையும் மகிமையையுந் தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளுகிறதற்குப் பாத்திரராயிருக்கிறாரென்று மிகுந்த சத்தத்தோடே சொன்னார்கள்.

௰௩ அல்லாமலும் வானத்திலும் பூமியிலும் பூமியின் கீழுமிருக்கிற சிருட்டிகள் யாவுஞ் சமுத்திரத்தின்மேலுள்ளவைகளும் இவற்றிலுள்ளடங்கிய வஸ்துக்கள் யாவும் ஆசனத்தின்மேலுட்கார்ந்திருக்கிறவருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்குந் தோத்திரமுங் கனமும் மகிமையும் வல்லமையும் என்றென்றைக்குமுண்டாவதாகவென்று சொல்லக் கேட்டேன்.

௰௪ அதற்கு நான்கு சீவன்களும் ஆமென் என்று சொன்னார்கள். மேற்படியும் அந்த இருபத்துநான்கு மூப்பர்களும் (வணக்கமாய்) விழுந்து என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத் தொழுதுகொண்டார்கள்.

## ௬. அதிகாரம்.

[(௧) ஆட்டுக்குட்டியானவர் முதலாம் முத்திரையையும், (௩) இரண்டாம் முத்திரையையும், (௫) மூன்றாம் முத்திரையையும், (௭) நான்காம் முத்திரையையும் பேர்த்தபொழுது வெவ்வேறான நிறமுள்ள நான்கு குதிரைகள் புறப்பட்டதும். (௯) ஐந்தாம் முத்திரையைப் பேர்த்தபொழுது கொலை செய்யப்பட்டவர்களுடைய ஆத்துமாக்கள் பாராபரனை நோக்கி முறையிட்டதும். (௰௨) ஆறாம் முத்திரையைப் பேர்த்தபொழுது மிகுந்த கலக்கங்களுண்டானதும்.]

௧ பின்பு ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ஒன்றை பேர்க்கக் கண்டேன். அல்லாமலும் நான்கு ஜீவன்களில் ஒன்று (என்னை நோக்கி) நீ வந்து பாரென்று இடிமுழக்கம் போலச் சொல்லக் கேட்டேன்.

௨ அப்பொழுது நான் பார்க்கையில், வெள்ளையான குதிரையைக் கண்டேன். அதின் மேலிருந்தவன் வில்லைப் பிடித்திருந்தான். அவனுக்கு ஒரு கிரீடங் கொடுக்கப்பட்டது. அவன் ஜெயமுள்ளவனாய் ஜெயிக்கும்படிக்குப் புறப்பட்டான்.

௩ பின்பு அவர் இரண்டாம் முத்திரையைப் பேர்த்தபொழுது இரண்டாம் ஜீவனானது நீ வந்து பாரென்று சொல்லக் கேட்டேன்.

௪ உடனே அக்கினி நிறமுள்ள வேறொரு குதிரை புறப்பட்டது. அதின்மேலிருந்தவன் பூமியிலுள்ளவர்கள் ஒருவரையொருவர் கொலை செய்யத்தக்கதாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்தெடுத்துப் போடுகிறதற்கு அதிகாரமும் ஒரு பெரிய கட்கமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.

௫ பின்பு அவர் மூன்றாம் முத்திரையைப் பேர்த்தபொழுது மூன்றாம் ஜீவனானது நீ வந்து பாரென்று சொல்லக் கேட்டேன். உடனே நான் பார்க்கையில் ஒரு கறுப்புக் குதிரையைக் கண்டேன். அதின்மேலிருந்தவன் ஒரு திராசைத் தன் கையிற்பிடித்திருந்தான்.

௬ அப்பொழுது உழக்குக் கோதுமைக்கு ஒரு தெநாரிப்பணம், மூவுழக்கு வாற்கோதுமைக்கு ஒரு தெநாரிப்பணமென்றும், எண்ணெயையும் பழ இரசத்தையுஞ் சேதப்படுத்தாதிருப்பாயாகவென்றும் நான்கு ஜீவன்களின் மத்தியிலிருந்துண்டான சத்தத்தைக் கேட்டேன்.

௭ பின்பு அவர் நான்காம் முத்திரையைப் பேர்த்தபொழுது, நான்காஞ் ஜீவனானது நீ வந்து பாரென்று சொல்லக் கேட்டேன்.

௮ உடனே நான் பார்க்கையில், மங்கின நிறமுள்ள குதிரையைக் கண்டேன். அதின்மேலிருந்தவனுக்கு மரணமென்று பேர். மரித்தோர் ஸ்தலம் அவனுடனே கூடச்சென்றது. கட்கத்தினாலும் பஞ்சத்தினாலுஞ் சாவினாலும் பூமியின் துஷ்ட மிருகங்களினாலும் பூமியின் கால்பங்கிலுள்ளவர்களைக் கொல்லும்படிக்கு அதிகாரம் அவனுக்குக் கொடுக்கப்பட்டது.

௯ பின்பு அவர் ஐந்தாம் முத்திரையைப் பேர்த்தபொழுது பராபரனுடைய வசனத்தினிமித்தமும் தாங்கள் கொடுத்த சாட்சியினிமித்தமுங் கொல்லப்பட்டவர்களுடைய ஆத்துமாக்களைப் பலிபீடத்தின் கீழே கண்டேன்.

௰ அவர்கள் பரிசுத்தமுஞ் சத்தியமுமுள்ள ஆண்டவரே! எதுவரைக்குந் தேவரீர் நியாயந்தீர்ப்புக்கொடாமலும் பூமியின்மேற் குடியிருக்கிறவர்களிடத்தில் எங்கள் இரத்தத்தைக் குறித்துப் பழிவாங்காமலுமிருப்பீரென்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௧ அப்பொழுது அவர்களுக்கு வெள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டதுமல்லாமல், அவர்கள் தங்களைப்போலக் கொலைசெய்யப்படுபவர்களாகிய தங்களுடன் பணிவிடைக்காரருந் தங்களுடைய சகோதரருமவர்கள் நிறைவுமளவும் இன்னுங்கொஞ்சக்காலம் இளைப்பாறவேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது.

௰௨ பின்பு அவர் ஆறாம் முத்திரையைப் பேர்க்கக்கண்டேன். உடனே பூமியும் அதிர்ந்தது. சூரியனுங் கம்பளியைப்போலக் கறுப்பாயிற்று. சந்திரன் முழுவதும் இரத்தம்போலாயிற்று.

௰௩ வானத்தின் நட்சத்திரங்களும் பெருங்காற்றினால் அசைக்கப்பட்ட அத்திமரம் பருவமில்லாத் தன்காய்களை உதிர்க்கிறதுபோலப் பூமியிலே விழுந்தன.

௰௪ வானமுஞ் சுருட்டப்பட்ட புத்தகம் போலாகி விலகிப்போயிற்று. மலைகளுந் தீவுகளுமாகிய யாவுந் தங்களிடங்களை விட்டு விலக்கப்பட்டுப்போயின.

௰௫ மேலும் பூமியின் இராசாக்களும் பெரியோர்களுஞ் சேனைத்தலைவர்களும் ஐசுவரியவான்களும் பலவான்களும் அடிமைகளும் யாவருஞ் சுயாதீனர் யாவரும் பர்வதங்களின் குகைகளிலுங் கன்மலைகளின் குகைகளிலும் ஒளிந்துக்கொண்டு, பர்வதங்களையுங் கன்மலைகளையும் நோக்கி,

௰௬ அவருடைய கோபாக்கினையின் தோணுகிற பெரிய நாள் வந்திருக்கின்றதே; நிலைநிற்கத்திராணியுள்ளவன் யாவன்?

௰௭ ஆகையால் நீங்கள் எங்கள்மேல் விழுந்து ஆசனத்தின்மேலிருக்கிறவருடைய முகத்திற்கும் ஆட்டுக்குட்டியின் கோபத்திற்கும் எங்களை மறைத்துக்கொள்ளுங்களென்று கூப்பிட்டார்கள்.

## ௭. அதிகாரம்.

[(௧) காற்றுகளைப் பிடிக்க நாலு தூதர்களும் பூமியைச் சேதப்படுத்துகிறதற்கு முன்னே பராபரனுடைய பணிவிடைக்காரர் முத்திரைபோடப்பட்டதும், (௯) பெரிய கூட்டந் தேவ ஆசனத்திற்கு முன்பாகச் சேர்ந்து துதிசெய்ததும், (௰௩) அந்தக் கூட்டத்தார் இன்னாரென்று காட்டினதும்.]

அவற்றிற்குப் பின்பு பூமியின் நான்கு திசைகளினிடத்திலும் நான்கு தூதர்கள் நின்று ஒரு காற்றாகிலும் பூமியின் மேலாவது சமுத்திரத்தின் மேலாவது ஒரு மரத்தின் மேலாவது அடியாதபடிக்கு, பூமியின் நான்கு காற்றுகளையும் பிடித்திருக்கக் கண்டேன்.

௨ மேலுஞ் சீவனுள்ள பராபரனுடைய முத்திரைக் கோலையுடைய வேறொரு தூதனைச் சூரியனுதிக்குந் திசையிலிருந்து ஏறிவரக் கண்டேன். அவன் பூமியையுஞ் சமுத்திரத்தையுஞ் சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம் பெற்ற அந்த நான்கு தூதரையும் நோக்கி,

௩ நாம் நமது பராபரனுடைய ஊழியக்காரரின் நெற்றிகளில் முத்திரைபோட்டுத் தீருமளவும் பூமியையுஞ் சமுத்திரத்தையும் மரங்களையுஞ் சேதப்படுத்தாதிருங்களென்று மிகவுஞ் சத்தமிட்டுக் கூப்பிட்டான்.

௪ மேலும் முத்திரை போடப்பட்டவர்களின் தொகையைக் கேட்டேன். இஸ்ரவேல் சந்ததியாராகிய சகல கோத்திரங்களிலும் முத்திரை போடப்பட்டவர்கள் ௱௪௪௲ பேர்.

௫ அதாவது, யூதா கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲. ரூபன் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. காத் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲.

௬ அசேர் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. நவ்தலி கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. மனாசே கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲.

௭ சிமெயோன் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. லேவி கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲. இசக்கார் கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲.

௮ செபுலோன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲. யோசேப்பு கோத்திரத்தில் முத்திரை போடப்பட்டவர்கள் ௰௨௲. பென்யமீன் கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲ பேர்.

௯ இவற்றிற்குப் பின்பு நான் பார்த்துச் சகல தேசத்தாரிலுங் கோத்திரங்களிலும் (மற்றச்) சனக்கூட்டங்களிலும் பாஷைக்காரரிலுமிருந்து வந்ததுமாய் ஒருவனும் எண்ணக்கூடாததுமாயிருந்த திரளான கூட்டமாகிய சனங்கள் வெள்ளை அங்கிகளைத் தரித்துத் தங்கள் கைகளிற் குருத்தோலைகளைப் பிடித்தவர்களாய் ஆசனத்திற்கு முன்பாகவும் ஆட்டுக்குட்டிக்கு முன்பாகவும் நிற்கக் கண்டேன்.

௰ மேலும் அவர்கள் இரட்சிப்பின் (கனம்) ஆசனத்தின் மேலுக்கார்ந்திருக்கிற எங்கள் பராபரனுக்கும் ஆட்டுக்குட்டியானவருக்குஞ் செலுத்தப்படக்கடவதென்று மிகவுஞ் சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள்.

௰௧ அல்லாமலுந் தூதர்கள் யாவரும் ஆசனத்தையும் மூப்பரையும் நான்கு சீவன்களையுஞ் சூழ்ந்து நின்று, ஆசனத்திற்கு முன்பாகச் சாஷ்டாங்கமாய் விழுந்து, பராபரனைத் தொழுதுகொண்டு,

௰௨ ஆமென், எங்கள் பராபரனுக்குத் துதியும் மகிமையும் ஞானமுந் தோத்திரமுங் கனமும் வல்லமையும் பெலனும் என்றென்றைக்கு முண்டாகக் கடவது ஆமென் என்றார்கள்.

௰௩ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை நோக்கி, வெள்ளை அங்கிகளைத் தரித்திருக்கிற இவர்கள் ஆர்? எங்கேயிருந்து வந்தார்களென்று கேட்டான்.

௰௪ அதற்கு நான் என்னுடையவனே! அது உமக்குத் தெரியுமென்றேன். அப்பொழுது அவன் சொன்னதாவது. இவர்கள் மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்தவர்கள். இவர்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவருடைய இரத்தத்திலே தோய்த்து வெளுத்தவர்கள்.

௰௫ ஆனபடியால் இவர்கள் பராபரனுடைய ஆசனத்திற்கு முன்பாக இருந்து இரவும் பகலும் அவருடைய ஆலயத்திலே அவருக்குப் பணிவிடைசெய்வார்கள். ஆசனத்தின் மேலுக்கார்ந்திருக்கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயிருப்பார்.

௰௬ இனி இவர்கள் பசியடைவதுமில்லை. தாகம் அடைவதுமில்லை. வெயிலாவது மற்றெந்த உட்டிணமாவது அவர்கள் மேற்படுவதுமில்லை.

௰௭ ஆசனத்தின் மத்தியிலிருக்கிற ஆட்டுக்குட்டியானவரே அவர்களை மேய்த்து அவர்களைச் சீவத்தண்ணீருள்ள ஊற்றுகளினிடத்திற்கு நடத்துவார். இவர்களுடைய கண்ணீர் யாவையும் பராபரன் துடைப்பாரென்றான்.

## ௮. அதிகாரம்.

[(௧) ஏழாம் முத்திரை பேர்க்கப்பட்டபொழுது எக்காளங்களையுடைய ஏழு தூதர்கள் தோன்றினதும், (௩) வேறொரு தூதன் கலசத்திலுள்ள தூபவருக்க அக்கினியைப் பூமியிலே கொட்டினதும், (௭) முதலாந் தூதன் ஊதினபொழுது கன்மழை

யும் இரத்தமாய்க் கலந்த அக்கினியுந் தரையி லேவிழுந்ததும், (௮) இரண்டாந் தூதன் ஊதினபொழுது வெற்ப ஒருமலை விழுந்ததும், (௰) மூன்றுந் தூதன் ஊதின பொழுது ஒருபெரிய நட்சத்திரம் விழுந்ததும், (௰௨) நான்காந் தூதன் ஊதின பொழுது சூரியன் முதலானவைகள் அடிக்கப்பட்டதும், (௰௩) வேறொரு தூதன் வானத்தின் மத்தியிலே பறந்ததும்.]

பின்பு அவர் ஏழாம் முத்திரையை உடைத்தபொழுது பரமண்டலத்திலே ஏறக்குறைய அரைமணிநேரமளவும் அமைதலுண்டாயிற்று.

௨ மேலும் பராபரனுக்கு முன்பாக நின்ற ஏழுதூதர்களையுங் கண்டேன். அவர்களுக்கு ஏழு எக்காளங்கள் கொடுக்கப்பட்டன.

௩ வேறொரு தூதனுந் தூபங் காட்டும் பொற்கலசத்தைப் பிடித்துவந்து, பலிபீடப்படியிலே நின்றான். அல்லாமலும் ஆசனத்திற்கு முன்பாகவிருந்த பொற்பீடத்தின் மேலே பரிசுத்தவானகளெல்லாருடைய செபங்களுடனேயுங் கூட்டக் கொடுக்கும்படிக்கு அநேக சுகந்தவருக்கங்கள் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.

௪ அப்படியே பரிசுத்தவான்களுடைய செபங்களுடனேகூட்டச் சுகந்தவருக்கங்களின் புகை தூதனுடைய கையிலிருந்து பராபரனுக்கு முன்பாக எழும்பிற்று.

௫ பின்பு அந்தத் தூதன் தூபகலசத்தை யெடுத்துக்கொண்டு, அதைப் பலிபீடத்தி லுள்ள நெருப்பினாலே நிரப்பிப் பூமியிற் கொட்டினான். உடனே சத்தங்களும் இடிமுழக்கங்களும் மின்னல்களும் பூமி அதிர்ச்சியு முண்டாயின.

௬ பின்பு ஏழெக்காளங்களையுடைய ஏழு தூதர்கள் எக்காளத்தை யூதுகிறதற்கு எத்தனம்பண்ணினார்கள்.

௭ முதலாந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது இரத்தங்கலந்த கல்மழையும் அக்கினியுமுண்டாகித் தரையிலே கொட்டப்பட்டன. அதினாலே தரையில் மூன்றி லொருபங்கு சுட்டெரிந்தது. மரங்களில் மூன்றிலொருபங்கு வெந்துபோயிற்று. பசும் புல்லெல்லாம் எரிந்துபோயிற்று.

௮ இரண்டாந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது அக்கினியால் வேகிற ஒரு பெரியபருவதம்போலானது சமுத்திரத்தி லே போடப்பட்டது. அதினாலே சமுத்திரத் தின் மூன்றிலொருபங்கு இரத்தமாயிற்று.

௯ சமுத்திரத்திலிருந்த சீவனுள்ள சிருட்டிகளின் மூன்றிலொருபங்கு செத்துப் போயிற்று. கப்பல்களில் மூன்றத்தொருப ங்கு அழிந்தது.

௰ மூன்றுந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது ஒருபெரிய நட்சத்திரந் தீவெட்டியைப்போல எரிந்து வானத்திலிருந்து விழுந்தது. அது ஆறுகளில் மூன்றத்தொரு பங்கின்மேலும் நீரூற்றுக்களின்மேலும் விழுந்தது.

௰௧ அந்த நட்சத்திரத்திற்கு எட்டியென்றுபேர். அதினாலே தண்ணீரில் மூன்றத்தொருபங்கு எட்டியைப்போலக் கசப்பாயிற்று. இப்படிக் கசப்பான தண்ணீரினாலே மனிதரில் அநேகர் செத்தார்கள்.

௰௨ நான்காந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது சூரியனில் மூன்றத்தொருபங்கும் சந்திரனில் மூன்றத்தொருபங்கும் நட்சத்திரங்களில் மூன்றத்தொருபங்குஞ் சேதப்படுத்தப்பட்டன. அதினாலே அவற்றவற்றின் மூன்றிலொருபங்கு இருளடைந்தது. பகலிலும் மூன்றிலொருபங்கு பிரகாசமில்லாமலிருந்தது. இரவிலும் அப்படியேயாயிற்று.

௰௩ பின்பு ஒரு தூதன் வானத்தின் மத்தியிலே பறந்துவரக்கண்டேன். அவன் இனிமேல் எக்காளம் ஊதவேண்டியமற்ற மூன்று தூதருடைய எக்காளச் சத்தங்களாற் பூமியிற் குடியிருக்கிறவர்களுக்கு ஐயோ, ஐயோ, ஐயோ, வேதனைவருமென்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிடக்கேட்டேன.

## ௯. அதிகாரம்.

[(௧) ஐந்தாந் தூதன் ஊதினபொழுது வானத்திலிருந்து விழுந்த நட்சத்திரமென்னுஞ் சாத்தான் பாதாளத்தைத் திறந்த வுடனேபுகையும், (௩) புகையி லிருந்து வெட்டுக்கிளிகளும் புறப்பட்டதும், (௰௨) அவற்றால் முதலாம் வேதனையுண்டானதும், (௰௩) ஆறுந் தூதன் ஊதினபொழுது அவன் ஐபிராத்து நதியினிடத்திலுள்ள நான்கு தூதர்களையும் விட்டுவிடும்படிக்குக் கட்டளைபெற்றதும், (௰௫) அவர்கள் விடப்பட்டபொழுது மிகுந்த வேதனை செய்ததும் (௨௰) அப்படியிருந்தும் மற்ற மனிதர்கள் புத்தியடையாமலிருந்ததும்.]

ஐந்தாந் தூதன் எக்காளமூதினான். அப்பொழுது வானத்திலிருந்து பூமியின்மேல விழுந்த நட்சத்திரத்தைக் கண்டேன. அதற்கு பாதாளமாகிய குழியின் திறவுகோல கொடுக்கப்பட்டது.

௨ அது பாதாளக்குழியைத் திறந்தது. உடனேபெருஞ் சூளையின் புகையைப்போல அந்தக்குழியிலிருந்து புகை யெழும்பிற்று. அந்தக்குழியின் புகையினாலே சூரியனும் ஆகாயமும் அந்தகாரப்பட்டன.

௩ அல்லாமலும் அந்தப்புகையிலிருந்து வெட்டுக்கிளிகள் புறப்பட்டுப் பூமியின்மேல வந்தன. அவைகளுக்குப் பூமியின் தேள்களுக்குண்டாயிருக்கிற அதிகாரத்திற்கொப்பான அதிகாரங் கொடுக்கப்பட்டது.

௪ மேலும் அவைகள் பராபரனுடைய முத்திரையை நெற்றிகளில் தரியாத மனிதரைமாத்திரமேயன்றிப் பூமியின் புல்லையும் பசுமையான எந்தப்பூண்டையும் எந்தமரத்தையுஞ் சேதப்படுத்தாதபடிக்கு அவைகளுக்கு உத்தரவுகொடுக்கப்பட்டது.

௫ மேலும் அவர்களைக் கொலைசெய்யும்படிக்கல்ல, ஐந்துமாதமளவும் அவர்களை வேதனைப்படுத்தும்படிக்கே அதிகாரம் அவைகளுக்குக்கொடுக்கப்பட்டது. அவைகள்செய்யும்வேதனை தேளானதுமனிதனைக் கொட்டும்பொழுதுண்டாகும் வேதனையைப்போலிருக்கிறது.

௬ அந்நாட்களில் மனிதர்கள் மரணத்தைத்தேடி, அதைக் காணாதிருப்பார்கள். மரிக்க ஆசைப்படுவார்கள். மரணம் அவர்களுக்குவிலகி ஓடிப்போம்.

௭ மேலும் அந்த வெட்டுக்கிளிகளின் உருவம் யுத்தத்திற்கு எத்தனமாக்கப்பட்ட குதிரைகளுக்கொப்பாயிருந்தது. அவைகளின் தலைகள்மேலே பொற் கிரீடங்களைப் போன்றவைகளிருந்தன. அவைகளின்முகங்கள் மனிதருடைய முகங்களைப்போலிருந்தன. அவைகளின்மயிர் ஸ்திரிகளுடையமயிர்போலிருந்தது.

௮ அவைகளின் பற்கள் சிங்கங்களின்பற்களைப்போலிருந்தன.

௯ அல்லாமலும் மார்பில் இருப்புக்கவசங்களைப்போலக் கவசங்கள் அவைகளுக்கிருந்தன. அவைகள் சிறகுகளினாற் செய்த இரைச்சல் யுத்தத்திற்குச் செல்லுகிற அநேகங் குதிரைகள் பூண்ட இரதங்களின் இரைச்சலைப்போலிருந்தது.

௰ மேலும் அவைகள் தேள்களின் வால்களுக்கொப்பானவால்களையும் அந்த வால்களிற் கொடுக்குகளையுமுடையவைகளாயிருந்தன. இப்படி அவைகள் ஐந்துமாதமளவும் மனிதரைச்சேதப்படுத்துவதற்கு அதிகாரத்தையுடையவைகளாயிருந்தன.

௰௧ அன்றியும் பாதாளத்தின் தூதன் அவைகளுக்கு இராசனாயிருக்கிறான். அவனுக்கு எபிரேயபாஷையிலே அபத்தோன் என்றுங் கிரேக்கபாஷையிலே அப்பொல்லியோன் என்றும்பேருண்டாயிருக்கின்றன.

௰௨ முதல்வேதனைபோயிற்று இதற்குப்பின்பு வேறிரண்டுவேதனைகள் அதோ, வருகின்றன.

௰௩ ஆறாந்தூதன் எக்காளமூதினான். அப்பொழுதுபராபரனுக்கு முன்பாகவிருந்த பொற்பீடத்தின் நான்குகொம்புகளிலுமிருந்து ஒருவன் எக்காளத்தைப்பிடித்திருந்த ஆறாந் தூதனைநோக்கி,

௰௪ நீ ஐபிராத்தென்னும் பெரிய ஆற்றினிடத்திலேகட்டப்பட்டிருக்கிறநான்குதூதரை யவிழ்த்துவிடு என்று சத்தமிட்டுச் சொல்லக்கேட்டேன்.

௰௫ உடனே யந்தநாலுதூதர்களும் அவிழ்த்துவிடப்பட்டார்கள். அவர்கள் மனிதர்களில் மூன்றிலொரு பங்கைக்கொலை செய்யும்படிக்கு ஒருமணிநேரத்திற்கும் ஒருநாளுக்கும் ஒருமாதத்திற்கும் ஒருவருஷத்திற்கும் எத்தனமாக்கப் பட்டிருந்தவர்கள்.

௰௬ குதிரைச்சேனைகளான இராணுவங்களின்தொகை இருபதுகோடியாயிருந்தது. அவைகளின் தொகையைக்கேட்டேன்.

௰௭ தரிசனையிலே குதிரைகளையும் அவைகளின்மேலிருந்தவர்களையும் இப்படிக் கண்டேனென்றால், அவர்கள் அக்கினிநிறமும் பதுமராக நிறமுங் கந்தகநிறமுமானமார்பின் கவசங்களையுடையவர்கள். குதிரைகளுடையதலைகள் சிங்கங்களுடைய தலைகளைப் போலிருந்தன. அவைகளுடையவாய்களிலிருந்து அக்கினியும்புகையுங் கந்தகமும்புறப்பட்டன.

௰௮ அவைகளுடையவாய்களிலிருந்து புறப்பட்ட அக்கினி புகை கந்தகமென்னும் மூன்றினாலும் மனிதரில் மூன்றிலொருபங்குகொலைசெய்யப்பட்டார்கள்.

௰௯ அந்தக்குதிரைகளுடைய வல்லமை அவைகளுடையவாயிலேயும் வால்களிலேயுமிருக்கின்றது. எப்படியெனில் அவைகளுடைய வால்கள் பாம்புகளுக்கொப்பானவைகளாயுந் தலைகளுள்ளவைகளாயுமிருக்கின்றன. அவைகளாலே சேதஞ் செய்கின்றன.

௨௰ அப்படியிருந்தும் அந்த வாதைகளாற்கொல்லுண்ணாத மற்றமனிதர்கள் தங்கள்கைகளின் கிரியைகளைவிட்டுக் குணப்படவில்லை. அவர்கள் பின்னும்பேய்களையும், பொன்வெள்ளி செம்புகல்லு மரத்தாற்செய்யப்பட்டவைகளாயுங் காணவுங் கேட்கவும் நடக்கவுமாட்டாதவைகளாயுமிருக்கிற விக்கிரகங்களையுந் தொழுதுகொண்டு வந்தார்கள்.

௨௰௧ அல்லாமலும் அவர்கள்தங்கள்கொலைபாதகங்களையுந் தங்கள் சூனியங்களையுந் தங்கள்வேசித்தனங்களையுந் தங்கள் களவுகளையும்விட்டுக்குணப்படவில்லை.

## ௰. அதிகாரம்.

[(௧) வேறொருதூதன் ஒருசின்னப்புத்தகத்தைப்பிடித்துக்கொண்டு மிகுந்த சத்தமிட்டபொழுது, ஏழு இடிமுழக்கங்களுண்டானதும், (௬) அவன் விசேஷமான ஆணையிட்டதும், (௮) இயோவான் அந்தப்புத்தகத்தைச்சாப்பிட்டதும்.]

பின்பு பலமுள்ளவேறொருதூதன் இறங்கக்கண்டேன். மேகம் அவனைச் சூழ்ந்திருந்தது. அவனுடைய சிரசின்மேல வானவில்லிருந்தது. அவனுடைய முகஞ் சூரியனை

டபோலவும் அவனுடைய கால்கள் அக்கினிஸ்தம்பங்களைப்போலவுமிருந்தன.

௨ மேலும் விரிக்கப்பட்டிருக்கிற சின்னப்புஸ்தகம் ஒன்றைத் தன் கையிலே பிடித்துக்கொண்டு, தன்னுடைய வலதுபாதத்தைச் சமுத்திரத்தின் மேலும் இடதுபாதத்தைத் தரையின் மேலும் வைத்து,

௩ சிங்கம் முழங்குகிறதுபோல மிகவும் சத்தமிட்டுக் கூப்பிட்டான். அவன் கூப்பிட்டபோது, ஏழு இடிகளும் தங்கள் சத்தங்களை முழக்கின.

௪ அவ்வேழு இடிகளும் தங்கள் சத்தங்களை முழக்கினபொழுது, நான் (அவை) எழுதப்போகிறவனாயிருந்தேன். அப்பொழுது ஏழு இடிமுழக்கங்கள் சொன்னவைகளை நீ எழுதாமல் முத்திரைப்படுத்து என்று வானத்திலிருந்து ஒரு சத்தமுண்டாகக் கேட்டேன்.

௫ அன்றியும் நான் சமுத்திரத்தின் மேலும் தரையின் மேலும் நிற்கக்கண்ட தூதன் தன்னுடைய கையை வானத்திற்கு நேராக உயர்த்தி இன்னுங்காலம் (வரா) இல்லை.

௬ பராபரன் தம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளுக்குச் சுவிசேஷமாயறிவித்தபடி, ஏழாந்தூதன் எக்காளத்தை ஊதுகிறதற்கான நாள்களிலே அவருடைய இரகசியம் நிறைவேறுமென்று,

௭ வானத்தையும் அதிலுள்ளவைகளையும் பூமியையும் அதிலுள்ளவைகளையும் சமுத்திரத்தையும் அதிலுள்ளவைகளையும் உண்டாக்கினவராயும் என்றென்றைக்கும் பிழைக்கிறவராயுமிருக்கிறவர்மேலே ஆணையிட்டுக் (கூப்பிட்டான்.)

௮ பின்பு நான் கேட்கும்படி வானத்திலிருந்து சத்தமிட்டவன் மறுபடியும் என்னுடனே சொன்னது. சமுத்திரத்தின் மேலுந் தரையின் மேலும் நிற்கிற தூதனுடைய கையிலிருக்கிற விரிக்கப்பட்ட சின்னப்புஸ்தகத்தை நீ போய் வாங்கிக்கொள்ளென்றான்.

௯ அந்தப்படி நான் தூதனிடத்திற்போய் இந்தச் சின்னப்புஸ்தகத்தை எனக்குக் கொடுக்கவேண்டுமென்றேன். அப்பொழுது அவன் என்னை நோக்கி, நீ இதையெடுத்து விழுங்கிக்கொள். உன் வயிற்றுக்கு இது கசக்கப்பண்ணும். ஆகிலும் உன் வாய்க்கு இது தேனைப்போல மதுரமாயிருக்குமென்றான்.

௰ அப்படி நான் அந்தச் சின்னப்புஸ்தகத்தைத் தூதனுடைய கையிலே வாங்கி அதை விழுங்கிக்கொண்டேன். என் வாய்க்கு அது தேனைப்போல மதுரமாயிருந்தது. நான் அதை விழுங்கினபின்பு என் வயிறு மிகுந்த நோவுபட்டது.

௰௧ அப்பொழுது அவன் என்னுடனே சொன்னது. நீ மறுபடியும் அநேக ஜனக்கூட்டங்களையுந் தேசத்தாரையும் பாஷைக்காரரையும் இராசாக்களையுங் குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லவேண்டுமென்றான்.

## ௰௧. அதிகாரம்.

[(௧) தேவாலயத்தையளந்துபார்க்கும்படி இயோவானுத்தரவுபெற்றதும், (௩) இரண்டுசாட்சிகள் தீர்க்கதரிசனஞ்சொல்லி பின்புகொலைசெய்யப்பட்டு, (௰௧) மறுபடியும் உயிரடைந்து பரமண்டலத்திற்கேறினதும் (௰௩) அப்பொழுது பூமிமிகவும் அதிர்ந்ததும், (௰௪) இரண்டாம் ஆபத்துண்டானதும், (௰௫) ஏழாந்தூதனூதினபொழுது விண்ணோர் வாழ்த்துதல் செய்ததும், (௰௬) இருபத்துநாலுமூப்பர்களுந் தோத்திரஞ்செய்ததும், (௰௯) தேவாலயந்திறக்கப்பட்டதும்.]

பின்பு ஒருதடிக்கொப்பான அளவுகோலை (யொருவன்) எனக்குக்கொடுத்துச் சொன்னதாவது. நீ எழுந்து பராபரனுடைய ஆலயத்தையும் பலிபீடத்தையும் அதிலே தொழுதுகொள்ளுகிறவர்களையும் அளந்துபார்த்துக்கொள்

௨ ஆலயத்திற்குப் புறம்பேயிருக்கிறபிராகாரம் புறத்தேசத்தாருக்குக்கொடுக்கப்பட்டபடியால் அதையளவாமல் தள்ளுவாயாக. பரிசுத்தப்பட்டினத்தையவர்கள் நாற்பத்திரண்டுமாதமளவும் மிதிப்பார்கள்.

௩ ஆகிலும் என்னுடைய இரண்டுசாட்சிகளும் இரட்டுச்சேலையுடுத்திக்கொண்டிருக்கிறவர்களாய் ஆயிரத்து இருநூற்றறுபதுநாள்வரைக்குந் தீர்க்கதரிசனஞ் சொல்லும்படிக்கு அவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுப்பேன்.

௪ அவர்களே பூமியின் ஆண்டவருக்குமுன்பாக நிற்கிற இரண்டொலிவமரங்களும் இரண்டுவிளக்குத்தண்டுகளுமானவர்கள்.

௫ ஒருவன் அவர்களைச் சேதப்படுத்தவிரும்பினால், அவர்களுடைய வாயிலிருந்து அக்கினிபுறப்பட்டு அவர்களுடைய சத்துருக்களைப் பட்சிக்கும். அவர்களைச் சேதப்படுத்த விரும்புகிறவனெவனோ அவன் அப்படியே சாகவேண்டும்.

௬ அவர்கள் தீர்க்கதரிசனஞ் சொல்லிவருகிற நாள்களிலே மழைபெய்யாதபடிக்கு வானத்தையடைக்கிறதற்கு அதிகாரமுடையவர்கள். மேலும் அவர்கள் தண்ணீர்களை இரத்தமாகமாற்றுகிறதற்கும் எக்காலத்திலேயுந் தாங்கள் இஷ்டப்படி பூமியைச் சகலவிதவாதைகளாலும் அடிக்கிறதற்கும் அதிகாரமுடையவர்கள்.

௭ மேலும் அவர்கள் தங்கள் சாட்சியை முடிக்கும்பொழுது, பாதாளத்திலிருந்தேறுகிற மிருகம் அவர்களோடே யுத்தம்பண்ணி, அவர்களைச் செயித்து அவர்களைக் கொலைசெய்யும்.

௮ அவர்களுடைய உடல்கள் பெரிய பட்டினத்தின் பெரிய வீதியிலே கிடக்கும். அந்தப் பட்டினம் சோதோமென்றும் எகிப்தென்றும் ஞான அருத்தமாய்ச் சொல்லப்படும். அதிலே அவர்களுடைய கர்த்தாவுஞ் சிலுவையிலே அறையப்பட்டார்.

௯ சனக்கூட்டங்களிலுங் கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலும் புறத்தேசத்தாரிலும் (அநேகர்) அவர்களுடைய உடல்களை மூன்றரை நாள்வரைக்கும் பார்த்துக்கொண்டிருந்தும் மேலும் அவைகளைக் கல்லறைகளிலே வைக்கிறதற்கு இடங்கொடுக்கவுமில்லை.

௰ அவ்விரண்டு தீர்க்கதரிசிகளும் பூமியின் குடிகளுக்கு வேதனை செய்தபடியினாலே அவர்கள் (போனதற்காகப்) பூமியிற் குடியிருக்கிறவர்கள் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்து ஒருவருக்கொருவர் காணிக்கைகளை யனுப்புவார்கள்.

௰௧ மூன்றரை நாளுக்குப் பின்பு பராபரனிடத்திலிருந்து சீவ ஆவி அவர்களுக்குட் பிரவேசித்தது. அவர்கள் தங்கள் கால்களை ஊன்றி நின்றார்கள். அப்பொழுது அவர்களைப் பார்த்தவர்களுக்கு மிகுந்த பயமுண்டாயிற்று.

௰௨ பின்பு இங்கே ஏறிவாருங்களென்று வானத்திலிருந்து தங்களுக்குண்டான பெரிய சத்தத்தை அவர்கள் கேட்டு ஒரு மேகத்திலேறி வானத்திற்குப் போனார்கள். அவர்களுடைய சத்துருக்கள் அவர்களை நோக்கிப் பார்த்தார்கள்.

௰௩ அந்நேரத்திலே பூமியும் அதிர்ந்தது. உடனே அந்தப் பட்டினத்திற் பத்திலொரு பங்கு விழுந்துபோயிற்று. மனிதர் ஏழாயிரம்பேரும் பூமியதிர்தலால் அழிந்தார்கள். மீதியானவர்கள் பயமடைந்து பரமண்டலத்தின் பராபரனுக்குத் துதியைச் செலுத்தினார்கள்.

௰௪ இரண்டாம் வேதனை போயிற்று. இதோ, மூன்றாம் வேதனை சீக்கிரமாய் வருகின்றது.

௰௫ அப்பொழுது ஏழாந் தூதன் எக்காளமூதினான். உடனே உலகத்தின் இராச்சியங்கள் நம்முடைய கர்த்தரையும் அவருடைய கிறிஸ்துவையுஞ் சேர்ந்ததென்றும் அவர் என்றென்றைக்கும் இராசரிகம் பண்ணுவாரென்றும் மிகுந்த சத்தங்கள் பரமண்டலத்திலுண்டாயின.

௰௬ அப்பொழுது பராபரனுக்கு முன்பாகத் தங்கள் ஆசனங்களின்மேல் உட்கார்ந்த அவ்விருபத்து நான்கு மூப்பர்களுஞ் சாஷ்டாங்கமாய் விழுந்து,

௰௭ இருக்கிறவரும் இருந்தவருமாகிய சர்வவல்லமையுடைய தேவனாகிய பராபரனே! தேவரீர் உமது பலத்த வல்லமையை யெடுத்துக்கொண்டு இராசரிகம் பண்ணுகிறீர்.

௰௮ புறத்தேசத்தார் கோபமாயிருந்தார்கள். அப்பொழுது உமது கோபம் நேரிட்டது. மரித்தோர் நியாயத்தீர்ப்படைகிறதற்குந் தீர்க்கதரிசிகளாகிய உம்முடைய ஊழியக்காரருக்கும் பரிசுத்தவான்களுக்கும் உம்முடைய நாமத்தின்மேல் பயபத்தியாயிருந்த சிறியோருக்கும் பெரியோருக்கும் பலனளிக்கிறதற்கும் பூமியைக் கெடுத்தவர்களைக் கெடுக்கிறதற்குங் காலம் வந்தது. ஆகையால் உம்மைத் தோத்திரஞ் செய்கிறோமென்று பராபரனைத் தொழுதுகொண்டார்கள்.

௰௯ பின்பு பரமண்டலத்திலே பராபரனுடைய ஆலயந் திறக்கப்பட்டது. அவருடைய ஆலயத்திலே அவருடைய உடம்படிக்கையின் பெட்டி காணப்பட்டது. மேலும் மின்னல்களுஞ் சத்தங்களும் இடிமுழக்கங்களும் பூமியதிர்தலும் பெருங்கல்மழையுமுண்டாயின.

## ௰௨. அதிகாரம்.

[(௧) சூரியன் சந்திரன் நட்சத்திரங்களைத் தரித்த ஸ்திரீ வானத்திலே தோன்றி ஒரு பிள்ளைப் பெற்றதும், (௩) வலுசர்ப்ப மொன்று தோன்றி அந்தப் பிள்ளையை விழுங்கத் தேடினதும், (௫) அந்தப் பிள்ளை வானத்திற்கு எடுக்கப்பட்டதும், (௬) அந்த ஸ்திரீ வனாந்தரத்திலே காக்கப்பட்டதும், (௭) மிகாவேலும் வலுசர்ப்பமுஞ் சண்டைபண்ணினதும், (௯) வலுசர்ப்பம் பூமியின்மேல் தள்ளப்பட்டதும், (௰) விண்ணோர் துதிசெய்ததும், (௰௩) வலுசர்ப்பம் பூமியிலே ஸ்திரீயைத் துன்பப்படுத்தினதும்.]

அன்றியும் ஒரு பெரிய அடையாளம் வானத்திலே காணப்பட்டது. (என்னவெனில்) ஒரு ஸ்திரீ சூரியனை அணியப்பட்டுத் தன்னுடைய பாதங்களின் கீழ்ச் சந்திரனையுந் தன்னுடைய சிரசின்மேற் பன்னிரண்டு நட்சத்திரங்களுள்ள கிரீடத்தையுமுடையவளாய்,

௨ கர்ப்பத்தினாலே வருத்தமடைந்து, பிள்ளைபெறும்படி வேதனைப்பட்டு அலறிக்கொண்டிருந்தாள்.

௩ அன்றியும் வேறொரு அடையாளம் வானத்திலே காணப்பட்டது. (என்னவென்றால்,) ஏழு தலைகளையும் பத்துக் கொம்புகளையுந் தன் தலைகளின்மேல் ஏழு முடிகளையுமுடைய சிவப்பான பெரிய வலுசர்ப்பமிருந்தது.

௪ அதின் வால் வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றத்தொரு பங்கையிழுத்து அவைகளைப் பூமியின்மேல் தள்ளிற்று. அல்லாமலும்

லசுரூபத்தைத் தொழுதுகொண்டார்கள். அல்லாமலும், மிருகத்திற்கொப்பானவன் யாவன்? அதினுடனே யுத்தம்பண்ணத்தக்கவன் யாவனென்று, மிருகத்தையுந் தொழுதுகொண்டார்கள்.

௫ மேலும் பெருமையானவைகளையும் தூஷணங்களையும் பேசுதற்கானவாய் அதற்குக் கொடுக்கப்பட்டது. அல்லாமலும் நாற்பத்திரண்டு மாதம் நடந்துகொள்ளுகிறதற்கு அதிகாரம் அதற்கு அளிக்கப்பட்டது.

௬ அந்தப்படி அது பராபரனுடைய நாமத்தையும் அவருடைய கூடாரத்தையும் பரமண்டலத்தில் வாசமாயிருக்கிறவர்களையுந் தூஷணிக்கிறதற்குத் தன் வாயைத் தூஷணமாகத் திறந்தது.

௭ மேலும் பரிசுத்தவான்களோடே யுத்தம்பண்ணி, அவர்களை ஜெயிக்கும்படிக்கு அதற்கு (இடங்) கொடுக்கப்பட்டது. எந்தக் கோத்திரத்தின்மேலுஞ் சனக்கூட்டத்தின்மேலும் பாஷைக்காரர்மேலுந் தேசத்தார்மேலும் அதற்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது.

௮ ஆதலால், உலகமுண்டானது முதற் (பலியாக) அடிக்கப்பட்டபடி (நி. மிக்கப்பட்ட) ஆட்டுக்குட்டியினுடைய ஜீவபுஸ்தகத்திலே பேரெழுதப்படாத பூமியின்குடிகள் யாவரும் அதை நமஸ்காரம்பண்ணுவார்கள்.

௯ யாதொருவன் காதுள்ளவனாயிருந்தாற் கேட்கக்கடவன்.

௰ சிறையாகப்பிடித்துக்கொண்டுபோகிறவன் சிறையாகக் கொண்டுபோகப்படுவான். கட்கத்தினாலே கொலைசெய்கிறவன் கட்கத்தினாலே கொலைசெய்யப்படவேண்டும். இவ்விடத்திலே பரிசுத்தவான்களுடைய பொறுமையும் விசுவாசமும் விளங்கும்.

௰௧ அன்றியும் வேறொரு மிருகத்தைத் தரையிலிருந்தெழும்பக்கண்டேன். அது ஆட்டுக்குட்டிக்கொப்பாய இரண்டுகொம்புகளையுடையதாய், வலுசருப்பத்தைப்போலவசனித்தது.

௰௨ அல்லாமலும் அது முந்தின மிருகத்தின் அதிகாரம் யாவையும் அதின் முன்பாக நடப்பித்துச் சாவுக்கேதுவான்காயம் ஆரச்சொஸ்தமடைந்த முந்தின மிருகத்தைப் பூமியும் அதின் குடிகளும் நமஸ்காரம் பண்ணும்படி செய்ததுமன்றி,

௰௩ மனிதருக்குமுன்பாக வானத்திலிருந்து அக்கினியையும் பூமியின்மேலிறங்கப் பண்ணத்தக்கதாகப் பெரிய அடையாளங்களைச் செய்து,

௰௪ மிருகத்தின் முன்பாகச் செய்யும்படி தனக்களிக்கப்பட்ட அடையாளங்களினாலே பூமியின் குடிகளை வஞ்சித்துக் கட்கத்தினாலே காயப்பட்டுப்பின்பு பிழைத்த மிருகத்திற்கொரு சொரூபம்பண்ணவேண்டுமென்று பூமியின் குடிகளுக்குச் சொல்லுகின்றது.

௰௫ மேலும் அம்மிருகத்தின் சொரூபம் பேசத்தக்கதாகவும் அம்மிருகத்தின் சொரூபத்தை நமஸ்காரம்பண்ணாத யாவரையுங் கொலைசெய்யப்பண்ணத்தக்கதாகவும் அம்மிருகத்தின் சொரூபத்திற்கு ஆவியைக் கொடுக்கும்படி அதற்குத் திராணியளிக்கப்பட்டது.

௰௬ அந்தப்படி அது சிறியோர், பெரியோர், ஐசுவரியவான்கள், தரித்திரர், சுயாதீனர், அடிமைகள், இவர்களியாவருந் தங்கள் தங்கள் வலதுகைகளிலே அல்லது தங்கள் நெற்றிகளிலே ஒரு அடையாளத்தைப் பெறும்படிக்கும்,

௰௭ அம்மிருகத்தின் அடையாளமாகிய அந்த நாமத்தையாவது அதினுடைய நாமத்தின் இலக்கத்தையாவது தரித்துக்கொள்ளுகிறவனைத்தவிர வேறொருவனுங் கொள்ளவும் விற்கவுங்கூடாதபடிக்குஞ் செய்கின்றது.

௰௮ இங்கே ஞானம் விளங்கும். மிருகத்தின் இலக்கம் ஒரு மனிதனுடைய இலக்கமாயிருக்கிறபடியால் புத்தியுடையவன் அந்த இலக்கத்தைக் கணக்குப்பார்க்கக்கடவன். அதினுடைய இலக்கம் ௬௱௬௰௬.

## ௰௪. அதிகாரம்.

[(௧) சீயோன்மலையிலே ஆட்டுக்குட்டி நின்றதும், (௨) மீட்கப்பட்டவர்கள் புதிய பாட்டைப்பாடினதும், (௩) ஒரு தூதன் வானத்தின்மத்தியிலே பறந்து சுவிசேஷத்தையறிவித்ததும், (௮) வேறொரு தூதன் பாபிலோன் விழுந்ததையறிவித்ததும் (௯) மூன்றாந்தூதன் மிருகத்தைத்தொழுதுகொள்ளுகிறவர்களுக்கு வேதனைவருமென்று அறிவித்ததும், (௰௩) கர்த்தரைப்பற்றி மரித்தவர்கள் பாக்கியவான்களென்று அறிவிக்கப்பட்டதும், (௰௪) அரிவாளைப்பிடித்த ஒருவன் தோன்றிப் பூமியின் திராட்சங்களையறுத்ததும்.]

பின்பு நான் பார்க்கையிற் சீயோன் பருவதத்தின்மேலே ஆட்டுக்குட்டியையும் அதினோடேகூட அவருடைய பிதாவின் நாமந் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்டிருந்த நூற்றுநாற்பத்து நாலாயிரம் பேரையும் நிற்கக்கண்டேன்.

௨ அல்லாமலும் பெருவெள்ள இரைச்சலைப்போலவும் பெரும் இடிமுழக்கம் போலவும் ஒரு சத்தம் பரமண்டலத்திலிருந்துண்டாகக் கேட்டேன். மேலும் நான் கேட்டச

த்தந்தாயக்கள் சுரமண்டலங்களை வாசிக்கிற சுரமண்டலக்காரருடைய ஓசையைப்போலிருந்தது.

௩ அவர்கள் அந்த ஆசனத்திற்கு முன்பாகவும் நான்கு ஜீவன்களுக்கும் மூப்பருக்கும் முன்பாகவும் புதியபாட்டைப் பாடினார்கள். அந்தப் பாட்டைப் பூமியிலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்ட அந்த நூற்றிநாற்பத்துநாலாயிரம் பேரையல்லாமல் வேறொருவரும் கற்றுக்கொள்ளக்கூடாததாயிருந்தது.

௪ அவர்கள் கற்புடையவர்களாய் ஸ்திரீகளால் தங்களை அசுசிப்படுத்தாதவர்கள். இவர்களே ஆட்டுக்குட்டி எங்கேபோனாலும் அதைப் பின்பற்றுகிறவர்கள். இவர்களே மனிதரிலிருந்து பராபரனுக்கும் ஆட்டுக்குட்டிக்கும் முதற்பலனாக மீட்டுக்கொள்ளப்பட்டவர்கள்.

௫ அவர்கள் மாசில்லாதவர்களானபடியால் அவர்களுடைய வாயிலே கபடம் அகப்படவில்லை.

௬ அன்றியும் வேறொருதூதன் பூமியின் குடிகளுக்குஞ் சகல தேசத்தாருக்குங் கோத்திரத்தாருக்கும் பாஷைக்காரருக்குஞ் சனக்கூட்டத்தாருக்கும் அறிவிக்கத்தக்கதாக நித்திய சுவிசேஷத்தையுடையவனாய் வானத்தின் மத்தியிலே பறக்கக்கண்டேன்.

௭ அவன் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டதாவது. பராபரன் நியாயத்தீர்ப்பைக் கொடுக்கும் நேரம் வந்தபடியால் அவருக்குப் பயந்து அவருடைய மகிமையைப் பாராட்டுங்கள். வானத்தையும் பூமியையுஞ் சமுத்திரத்தையும் நீரூற்றுக்களையுமுண்டாக்கினவரையே தொழுதுகொள்ளுங்களென்று கூப்பிட்டான்.

௮ வேறொருதூதன் பின்சென்று பெரிய பட்டினமாகிய பாபிலோன் விழுந்துபோயிற்று, விழுந்துபோயிற்று. அவள் தன் வேசித்தனமாகிய உக்கிர ரசத்தைச் சகலதேசத்தாருங் குடிக்கப்பண்ணினாளே யென்றான்.

௯ அவர்களுக்குப் பின்னே மூன்றாந்தூதன் வந்து மிகுந்த சத்தத்தோடே சொன்னதாவது. மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் நமஸ்காரம்பண்ணித் தன் நெற்றியிலாவது தன் கையிலேயாவது அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவனெவனோ,

௰ அவன் பராபரனுடைய கோபாக்கினையாகிய பாத்திரத்திலே கலப்பில்லாமல் வார்க்கப்பட்ட அவருடைய உக்கிர ரசத்தைக் குடிப்பான். பரிசுத்த தூதர்களுக்கு முன்பாகவும் ஆட்டுக்குட்டிக்கு முன்பாகவும் அக்கினியினாலுங் கந்தகத்தினாலும் வாதிக்கப்படுவான்.

௰௧ அவர்கள் படும் வாதையின் புகை என்றென்றைக்கும் எழும்பும். (இப்படி) மிருகத்தையும் அதின் சொரூபத்தையும் நமஸ்காரம்பண்ணுகிறவர்களுக்கும் அதினுடைய நாமத்தின் அடையாளத்தைத் தரித்துக்கொள்ளுகிறவனுக்கும் இராவும் பகலும் இளைப்பாறுதலிராது.

௰௨ இங்கே பராபரனுடைய கற்பனைகளையும் இயேசுவின்மேலுள்ள விசுவாசத்தையுங் காத்துக்கொள்ளுகிறவர்களாகிய பரிசுத்தவான்களுடைய பொறுமை விளங்கும்.

௰௩ பின்னும் இதுமுதற் கர்த்தருக்குட்பட்டு மரிக்கிறவர்கள் பாக்கியவான்களென்றெழுது என்று பரமண்டலத்திலிருந்து சத்தம் உண்டாகக்கேட்டேன். மெய்யாய் அவர்கள் தங்கள் பிரயாசங்களைவிட்டொழிந்து இளைப்பாறுவார்கள். அவர்களுடைய கிரியைகள் அவர்களுடனே கூடப்போகின்றனவென்று ஆவியானவருந் திருவுளம்பற்றுகிறார்.

௰௪ பின்பு நான் பார்த்தது வெண்மையான மேகத்தையும் அந்தமேகத்தின்மேலே மனிதகுமாரனுக்கொப்பானவனாய்த் தன்னுடைய சிரசின்மேற் பொற்கிரீடத்தையுந் தன் கையிலே கருக்குள்ள அரிவாளையுமுடைய ஒருவன் உட்கார்ந்திருக்கிறதையுங் கண்டேன்.

௰௫ அப்பொழுது வேறொருதூதன் தேவாலயத்திலிருந்து புறப்பட்டு மேகத்தின்மேலுட்கார்ந்திருக்கிறவனை நோக்கி பூமியின் பயிர் பருவமானபடியால் அறுக்கிறதற்குக் காலம் வந்தது. ஆகையால் உம்முடைய அரிவாளை நட்டி அறுத்துப்போடுமென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௰௬ உடனே மேகத்தின்மேலுட்கார்ந்தவன் தன்னுடைய அரிவாளைப் பூமியின்மேற் போட்டான். பூமி அறுக்கப்பட்டது.

௰௭ பின்பு வேறொருதூதன் தானுங் கருக்குள்ள அரிவாளைப் பிடித்துப் பரமண்டலத்திலுள்ள தேவாலயத்திலிருந்து புறப்பட்டுவந்தான்.

௰௮ பின்பு அக்கினியின்மேல் அதிகாரமுள்ள வேறொருதூதனும் பலிபீடத்திலிருந்து புறப்பட்டுவந்து கருக்குள்ள அரிவாளைப் பிடித்திருக்கிறவனை நோக்கி பூமியின் திராட்சங்கள் பழுத்திருக்கிறபடியாற் கருக்குள்ள உமது அரிவாளை நட்டி அதின் குலைகளையறுத்துப்போடுமென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான்.

௰௯ அந்தப்படி அந்தத்தூதன் தன் அரிவாளைப் பூமியிலே போட்டுப் பூமியின் திராட்சங்களையறுத்துப் பராபரனுடைய கோபத்தின் பெரிய திராட்சத்தொட்டியிலே போட்டான்.

௨௰ பட்டணத்திற்குப் புறம்பேயுள்ள அந்தத் திராட்சத்தொட்டியிலே மிதிக்கப்பட்டது. அந்தத் திராட்சத்தொட்டியிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாதி தூரத்திற்கு இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்கள் மட்டும் வந்தது.

## ௰௫. அதிகாரம்.

[(௧) கடைசியான ஏழு வேதனைகளைச் செலுத்துகிற ஏழு தூதர்களுந் தோன்றினதும், (௨) மிருகத்தை ஜெயித்தவர்கள் பாட்டைப் பாடினதும், (௫) வானத்திலே தேவாலயந் திறக்கப்பட்டதும், (௭) அந்தத் தூதர்களுக்கு ஏழு பாத்திரங்கள் கொடுக்கப்பட்டதும்.]

பின்பு வானத்திலே பெரிதும் ஆச்சரியமுமான வேறொரு அடையாளமாகிய ஏழு கடைசி வாதைகளையுடைய ஏழு தூதரைக் கண்டேன். அவைகளாற் பராபரனுடைய கோபம் முடிகிறபடியால் (அவைகளே கடைசி வாதைகள்.)

௨ அன்றியும் அக்கினி கலந்த பளிங்கான கடலுக்கொப்பானதையும், மிருகத்திற்கும் அதின் சொரூபத்திற்கும் அதின் அடையாளத்திற்கும் அதின் நாமத்து இலக்கத்திற்கும் உள்ளாகாமற் செயங்கொண்டவர்கள் தேவசுரமண்டலங்களைப் பிடித்துக்கொண்டு பளிங்கான கடற்கரையிலே நிற்கிறதையுங் கண்டேன்.

௩ அவர்கள் பராபரனுடைய ஊழியக்காரனாகிய மோசேயின் பாட்டையும் ஆட்டுக்குட்டியின் பாட்டையும் பாடுகிறார்கள். எப்படியெனிற் சருவ வல்லமையுள்ள தேவனாகிய பராபரனே! தேவரீருடைய கிரியைகள் பெருமையும் ஆச்சரியமுமானவைகள். உலகத்தாரின் இராசாவே! தேவரீருடைய வழிகள் நீதியுஞ் சத்தியமுமானவைகள்.

௪ கர்த்தாவே ஆர் உமக்குப் பயப்படாமலும், உமது நாமத்தைத் துதியாமலுமிருக்கலாம்? என்னத்தினாலெனில் நீரொருவரே பரிசுத்தமுள்ளவர். உலகத்தாரெல்லாரும் வந்து உமக்கு முன்பாக நமஸ்காரஞ் செய்வார்கள். உம்முடைய நியாயத்தீர்ப்புகள் வெளியரங்கமாயின வென்றார்கள்.

௫ இவைகளுக்குப் பின்பு நான் கண்டதாவது. பரமண்டலத்திலே சாட்சியையுடைய கூடாரமாகிய ஆலயந் திறக்கப்பட்டது.

௬ அந்த ஆலயத்திலிருந்து ஏழு வாதைகளையுடைய அவ்வேழு தூதர்கள் சுத்தமும் பிரகாசமுமான புடவையைத் தரித்து, மார்புகளிற் பொற்கச்சைகளைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள்.

௭ அல்லாமலும் அந்த நான்கு சீவன்களிலொன்று என்றென்றைக்கும் சீவிக்கிற பராபரனுடைய கோபாக்கினையால் நிறைந்த பொற் கலயங்களேழையும் அவ்வேழு தூதர்களுக்குங் கொடுத்தது.

௮ அப்பொழுது தேவாலயமானது பராபரனுடைய மகிமையாலும் அவருடைய வல்லமையாலும் பிறந்த புகையினாலே நிரப்பப்பட்டது. (ஆதலால்) ஏழு தூதர்களுஞ் செய்யும் ஏழு வாதைகளும் முடியுமளவும் ஒருவருந் தேவாலயத்திற்குட் பிரவேசிக்கக்கூடாததாயிருந்தது.

## ௰௬. அதிகாரம்.

[(௧) முதலாந்தூதன் தன் பாத்திரத்திலுள்ள வேதனையைப் பூமியின்மேலும், (௩) இரண்டாந்தூதன் தன்னுடையதைச் சமுத்திரத்தின்மேலும், (௪) மூன்றாந்தூதன் தன்னுடையதை ஆறுகளின் மேலும் நீரூற்றுக்களின்மேலும், (௮) நான்காந் தூதன் தன்னுடையதைச் சூரியன்மேலும், (௰) ஐந்தாந்தூதன் தன்னுடையதை மிருகத்தின் ஆசனத்தின்மேலும், (௰௨) ஆறாந்தூதன் தன்னுடையதை ஐப்பிராத்து நதியின்மேலும் ஊற்றினதும், (௰௩) மூன்று அசுத்த ஆவிகள் புறப்பட்டதும், (௰௭) ஏழாந் தூதன் தன்னுடையதை ஆகாசத்தின்மேலூற்றினபொழுது பெரிய பட்டணம் இடிந்துபோனதும்.]

அப்பொழுது தேவாலயத்திலிருந்துண்டான பெரிய சத்தம் அந்த ஏழு தூதருடனே, நீங்கள் போய்ப் பராபரனுடைய கோபாக்கினையுள்ள கலயங்களைப் பூமியின்மேலூற்றுங்களென்று சொல்லக் கேட்டேன்.

௨ அந்தப்படி முதலாந் (தூதன்) போய்த் தன் கலயத்திலுள்ளதைத் தரையின்மேலூற்றினான். உடனே மிருகத்தின் அடையாளத்தையுடையவர்களும் அதின் சொரூபத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களுமாகிய மனிதர்களிற் பொல்லாத கொடிய பரு உண்டாயிற்று.

௩ பின்பு இரண்டாந்தூதன் தன் கலயத்திலுள்ளதைச் சமுத்திரத்திலேயூற்றினான். உடனே அது செத்தவனுடைய இரத்தம்போலாயிற்று. சமுத்திரத்திலுள்ள பிராணிகள் யாவுஞ் செத்துப்போயின.

௪ பின்பு மூன்றாந்தூதன் தன் கலயத்திலுள்ளதை யாறுகளிலும் நீரூற்றுக்களிலும் ஊற்றினான். உடனே அவைகள் இரத்தமாயின.

௫ அப்பொழுது சலங்களின் தூதனானவன் இருக்கிறவரும் இருந்தவருமாகிய பரிசுத்தரே! தேவரீர் இப்படி நியாயந்தீர்த்ததால், நீதியுள்ளவராயிருக்கிறீர்.

௬ அவர்கள் பரிசுத்தவான்களுடைய இரத்தத்தையும் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தையுஞ் சிந்தினபடியினாலே இரத்தத்தையே அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்தீர். (அதற்கு) பாத்திரராயிருக்கிறார்களென்று சொல்லக் கேட்டேன்.

௭ வேறொருவனும் சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரனே! மெய்யாய் உம்முடைய தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமானவைகளென்று பலிபீடத்திலிருந்து சொல்லக் கேட்டேன்.

௮ பின்பு நான்காந் தூதன் தன் கலயத்திலுள்ளதைச் சூரியன்மேலே யூற்றினான். இதினாலே மனிதரைச் சுடும்படியாய் அவனுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

௯ அந்தப்படியே மனிதர்கள் மிகுந்த உஷ்ணத்தினாலே சுடப்பட்டார்கள். (அப்படியிருந்தும்) பராபரனுடைய மகிமையைப் பாராட்ட அவர்கள் மனந்திரும்பாமல், அந்த வாதைகளைச் செய்ய அதிகாரமுள்ள அவருடைய நாமத்தைத் தூஷணித்தார்கள்.

௰ பின்பு ஐந்தாந் தூதன் தன் கலயத்திலுள்ளதை மிருகத்தினுடைய ஆசனத்தின் மேலூற்றினான். உடனே அதின் இராச்சியம் இருளடைந்தது. அப்படியிருந்தும் அவர்கள் தங்கள் கிரியைகளைவிட்டு மனந்திரும்பாமல் வருத்தத்தினாலே தங்கள் நாவுகளைக் கடித்துக்கொண்டு,

௰௧ தங்கள் வருத்தங்களாலுந் தங்கள் புண்களாலும் பரமண்டலத்தின் பராபரனைத் தூஷணித்தார்கள்.

௰௨ பின்பு ஆறாந் தூதன் தன் கலயத்திலுள்ளதை ஐபிராத்தென்னும் பெரிய ஆற்றின்மேலூற்றினான். உடனே சூரிய உதயத்திக்கிலிருந்து வரும் இராசாக்களுக்கு வழி ஏற்றதாகும்படிக்கு அந்த ஆற்றின் தண்ணீர் வற்றிப்போயிற்று.

௰௩ அல்லாமலும் வலுசர்ப்பத்தின் வாயிலுமிருந்தும் மிருகத்தின் வாயிலும் கள்ளத்தீர்க்கதரிசியின் வாயிலுமிருந்து தவளைகளுக்கொப்பான மூன்று அசுத்த ஆவிகள் புறப்படக் கண்டேன்.

௰௪ அவைகள் அடையாளங்களைச் செய்கிற பசாசுகளின் ஆவிகளாயிருக்கின்றன. பூமியிலெங்குமுள்ள இராசாக்களைச் சருவவல்லமையுள்ள பராபரனுடைய பெரிதான நாளிலிருக்கும் யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படிக்கு அவர்களிடத்திற்குப் புறப்பட்டுப்போகின்றன.

௰௫ கேளுங்கள். நான் திருடனைப்போல வருகிறேன். விழித்துக்கொண்டிருந்து அவலட்சணத்தை அவர்கள் காணத்தக்கதாக நிர்வாணமாய் நடவாதபடிக்குத் தன் வஸ்திரங்களைக் காக்கிறவன் பாக்கியவான்.

௰௬ எபிரேய பாஷையிலே அர்மகெதோனென்னப்பட்ட இடத்திலே அவர்களைக் கூட்டிக்கொண்டுபோனான்.

௰௭ ஏழாந் தூதன் கலயத்திலுள்ளதை ஆகாசத்தின்மேலேயூற்றினான். அப்பொழுது பரமண்டலத்துத் தேவாலயத்திலுள்ள ஆசனத்திலிருந்து ஆயிற்றென்று சொன்ன பெரிய சத்தம் புறப்பட்டது.

௰௮ அல்லாமலுஞ் சத்தங்களும் இடிமுழக்கங்களும் மின்னல்களுமுண்டாயின. பூமிகவும் அதிர்ந்தது. பூமியின்மேல் மனிதர்களுண்டான நாள் முதற்கொண்டு தோன்றாத பெரிய அதிர்ச்சியுண்டாயிருந்தது.

௰௯ அப்பொழுது மகாபட்டினம் மூன்று பங்காகப் பிரிக்கப்பட்டது. உலகத்தாருடைய பட்டினங்கள் விழுந்தன. பெரிய பாபிலோனுக்குப் பராபரனுடைய உக்கிரமான கோபாக்கினையாகிய இரசமுள்ள பாத்திரத்தைக் கொடுக்கும்படிக்கு அது அவருக்கு முன்பாக நினைக்கப்பட்டது.

௨௰ தீவுயாவும் அகன்றுபோயிற்று. பருவதங்கள் காணப்படாமற்போயின.

௨௰௧ தாலந்து நிறையான பெரிய கல்மழையும் வானத்திலிருந்து மனிதர்மேல் விழுந்தது. அப்படியிருந்தும் அந்தக் கல்மழையினாலுண்டான வாதை மிகவுங் கொடிதானபடியால் மனிதர்கள் அந்த வாதையினிமித்தம் பராபரனைத் தூஷணித்தார்கள்.

## ௰௭. அதிகாரம்.

[(௧) அந்த ஏழு தூதர்களில் ஒருவன் பெரிய வேசிக்கு வரும் ஆக்கினையை யோவானுக்குக் காட்டினது.]

பின்பு ஏழு கலயங்களையுடைய அந்த ஏழு தூதரில் ஒருவன் வந்து என்னை நோக்கி நீ வா. திரளான தண்ணீர்களின்மேல் உட்கார்ந்தவளோடே பூமியின் இராசாக்கள் வேசித்தனம் பண்ணினார்களே. அவளுடைய வேசித்தனமாகிய இரசத்தால் பூமியின் குடிகளும் வெறிபடைந்தார்களே.

௨ அந்த மகாவேசிக்கு வருகிற ஆக்கினையை உனக்குக் காண்பிக்கிறேனென்று சொல்லி,

௩ ஆவியில் என்னை வனாந்தரத்திற்குக் கொண்டுபோனான். அப்பொழுது தூஷணமான நாமங்களால் நிறைந்த ஏழு தலைகளையும் பத்துக் கொம்புகளையுமுடையதுமாய்ச் சிவப்பு நிறமுள்ள மிருகத்தின்மேல் ஒரு ஸ்திரீ ஏறியிருக்கக் கண்டேன்.

௪ அந்தஸ்திரி இரத்தாம்பரமுஞ் சிவப்பான ஆடையுந்தரித்துப் பொன்னினாலும் இரத்தினங்களாலும் முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டுத் தன் வேசித்தனமாகிய அருவருப்புகளாலும் அசுத்தத்தாலும் நிறைந்த பொற்பாத்திரத்தைத் தன் கையிலே பிடித்திருந்தாள்.

௫ மேலும் இரகசியமென்றும், பூமியிலுள்ள அருவருப்புகளுக்கும் வேசிகளுக்குந் தாயாகிய மகாபாபிலோனென்றும் அவளுடைய நெற்றியிலே நாமம் எழுதியிருந்தது.

௬ மேலும் அந்தஸ்திரி பரிசுத்தவான்களின் இரத்தத்தாலும் இயேசுவினுடைய சாட்சிகளின் இரத்தத்தாலும் வெறிகொண்டிருக்கிறதைக் கண்டேன். அவளை நான் கண்டு, மிகவும் ஆச்சரியப்பட்டேன்.

௭ அப்பொழுது தூதனானவன் என்னை நோக்கி என்னத்தினாலே ஆச்சரியப்படுகிறாய்? இந்த ஸ்திரியின் இரகசியத்தையும் இவளைச் சுமக்கிற ஏழு தலைகளையும் பத்துக்கொம்புகளையுமுடைய மிருகத்தின் இரகசியத்தையும் உமக்குச் சொல்லுகிறேன்.

௮ நீ கண்ட மிருகம் (முன்னே) இருந்தது (இப்பொழுது) அது இல்லை (இனிமேல்) அது பாதாளத்திலிருந்து ஏறிவந்து அழிவுக்குப்போகும். அன்றியும் லோகத்தோற்றமுதற் ஜீவபுஸ்தகத்திலே பேரெழுதப்படாத பூமியின் குடிகள் முன்னிருந்ததுமாய் (இப்பொழுது) இராததுமாய் (இனி) யிருப்பதுமாயிருக்கிற மிருகத்தைப் பார்த்து ஆச்சரியப்படுவார்கள் ஞானமுள்ள புத்தியிங்கே விளங்கும்.

௯ அந்த ஏழுதலைகளும் ஏழு மலைகளே. அவைகளின்மேல் ஸ்திரி உட்கார்ந்திருக்கிறாள்.

௰ அவைகள் ஏழு இராசாக்களாயுமிருக்கின்றன. (அவர்களில்) ஐந்துபேர் விழுந்தார்கள். ஒருவனிருக்கிறான். மற்றவன் இதுவரைக்கும் வரவில்லை. வரும்பொழுது அவன் கொஞ்சக்காலந்தரித்திருக்கவேண்டும்.

௰௧ இருந்ததும் (இப்பொழுது) இராததுமாகியமிருகமே எட்டாவதுமாய் அவ்வேழில் ஒன்றுமாயிருந்து அழிவுக்குப்போகிறது.

௰௨ அன்றியும் நீகண்ட பத்துக்கொம்புகளும் பத்து இராசாக்களே. அவர்கள் இதுவரையிலும் இராசரிகம்பெறவில்லை. அவர்கள் மிருகத்துடனேகூட ஒருமணிநேரமளவும் இராசாக்களைப்போல அதிகாரம்பெற்றுக்கொள்ளுகிறார்கள்.

௰௩ அவர்கள் ஏகயோசனையையுடையவர்களமேலும் அவர்கள் தங்கள் வல்லமையையும் அதிகாரத்தையும் மிருகத்திற்குக் கொடுக்கிறார்கள்.

௰௪ அவர்கள் ஆட்டுக்குட்டியுடனே யுத்தம்பண்ணுவார்கள். ஆட்டுக்குட்டி கர்த்தாதிகர்த்தாவுமாய் இராசாதிராசாவுமாயிருக்கிறபடியால் அவர்களைச் செயிக்கும். அதினோடேகூட இருக்கிறவர்களாகிய அழைக்கப்பட்டவர்களுந் தெரிந்துகொள்ளப்பட்டவர்களும் உண்மையுள்ளவர்களுமாயிருக்கிறவர்களும் (அவர்களைச் செயிப்பார்கள்) என்றான்.

௰௫ பின்னும் அவன் என்னுடனே சொன்னதாவது. அந்த வேசி உட்கார்ந்திருக்கிற தண்ணீர்களைக் கண்டாயே. அவைகள் சனங்களையுங் கூட்டங்களையுந் தேசத்தாரையும் பாஷைக்காரரையுங் குறிக்கின்றன.

௰௬ அன்றியும் நீகண்ட பத்துக்கொம்புகளும் அந்த மிருகமுமானவர்கள் அந்த வேசியைப் பகைத்து, அவளைப் பாழுமாக்கி நிருவாணமுமாக்கி அவளுடைய மாம்சத்தைத் தின்று, அவளை நெருப்பாலுஞ் சுட்டெரித்துப்போடுவார்கள்.

௰௭ என்னத்தினாலெனில் பராபரன் தமது யோசனையை அவர்கள் செய்கிறதற்கும் ஏகயோசனையாய்ச் செய்கிறதற்கும் பராபரனுடைய வார்த்தைகள் நிறைவேறுமளவுந் தங்கள் இராசரிகத்தை மிருகத்திற்குக் கொடுக்கிறதற்கும் அவர்களுடைய இருதயங்களில் (யோசனையைக்) கொடுத்தார்.

௰௮ அன்றியும் நீகண்ட ஸ்திரியானவள் பூமியினுடைய இராசாக்களின்மேல் இராசரிகத்தைச் செலுத்துகிற மகாபட்டணமேயாமென்றான்.

## ௧௮. அதிகாரம்.

[(௧) வேறொரு தூதனானவன் பெரிய பாபிலோன் விழுந்ததை அறிவித்ததும், (௪) அதைவிட்டுப் புறப்படும்படி புத்தி சொன்னதும், (௯) இராசாக்களும், (௰௧) வியாபாரிகளும், (௧௭) கப்பற்காரரும் அதைக்குறித்துப் புலம்பினதும், (௨௧) வல்லதூதனொருவன் பெரியகல்லைச் சமுத்திரத்திலே தள்ளினதும்.]

௧ இவைகளுக்குப்பின்பு மிகுந்த அதிகாரமுள்ள வேறொருதூதன் வானத்திலிருந்திறங்கக் கண்டேன். அவனுடைய மகிமையினாலே பூமி பிரகாசமாக்கப்பட்டது.

௨ அவன் பலத்த சத்தத்தோடே கூப்பிட்டுச் சொன்னது. மகாபாபிலோனானது விழுந்தது விழுந்தது. அது பசாசுகளின் குடியிருப்புஞ் சகலவித அசுத்த ஆவிகளுடைய காவலும் அசுத்தமும் அருவருப்புமுள்ள சகலவித பறவைகளுடைய காவலுமாயிற்று.

௨௧ அப்பொழுது பலமுள்ள தூதனொருவன் பெரிய ஏந்திரக்கல்லைப்போலொத்த ஒருகல்லையெடுத்துச் சமுத்திரத்திலேயெறிந்து சொன்னதாவது. இப்படியே மகாப்பட்டினமாகிய பாபிலோன் வேகமாயத்தள்ளுண்டு இனிக்காணப்படாமற்போம்.

௨௨ சுரமண்டலக்காரருஞ் சீதவாத்தியக்காரரும் நாகசுரக்காரரும் எக்காளக்காரருமானவர்களுடைய சத்தம் இனி உன்னிடத்திலே கேட்கப்படுவதில்லை. எந்தத்தொழிலாளியும் இனி உன்னிடத்திற்காணப்படுவதில்லை. ஏந்திரத்தின் சத்தம் இனி யுன்னிடத்திற் கேட்கப்படுவதில்லை.

௨௩ விளக்குவெளிச்சம் இனி யுன்னிடத்திற் பிரகாசிப்பதில்லை. மணவாளனும் மணவாட்டியுமானவர்களுடைய சத்தம் இனி உன்னிடத்திலே கேட்கப்படுவதில்லை. உன்வியாபாரிகள் பூமியிற் பெரியோர்களானபடியினாலும் உன் சூனியத்தால் எல்லாத் தேசத்தாரும் வஞ்சிக்கப்பட்ட படியினாலும் (அப்படியேயாம்.)

௨௪ தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும் பரிசுத்தவான்களுடைய இரத்தமும் பூமியின்மேற் கொல்லப்பட்ட அனைவருடைய இரத்தமும் அதினிடத்திலே காணப்பட்டதென்றான்.

## ௰௯. அதிகாரம்.

[(௧) விண்ணோரெல்லாருஞ் சந்தோஷமாய்ப் பாடித்தொழுதுகொண்டதும், (௭) ஆட்டுக்குட்டியானவருடைய கலியாணத்தைக்குறித்துச் சொன்னதும், (௰) இயேசுவான அந்தத்தூதனைத் தொழுதுகொண்டதிலே கடிந்துகொள்ளப்பட்டதும், (௰௧) வானந்திறக்கப்படக் கிறிஸ்துநாதர் மகிமையோடே தோன்றினதும், (௰௭) சூரியனில் நின்றதூதன் கூப்பிட்டதும், (௰௯) மிருகமும் அதைச்சேர்ந்தவர்களும் யுத்தம்பண்ணி நரகத்திலே தள்ளப்பட்டதும்.]

இவைகளுக்குப்பின்பு பரமண்டலத்திலே திரளான கூட்டம் இடிக்கிறசத்தம்போன்ற ஒருசத்தத்தைக்கேட்டேன். என்னவென்றால்,

௨ தன்வேசித்தனத்தினாலே பூமியைக் கெடுத்தபெரியவேசிக்கு நம்முடையபராபரன் நியாயத்தீர்ப்புக்கொடுத்துத் தம்முடைய ஊழியக்காரரின் இரத்தத்திற்காக அவளிடத்திற் பழிவாங்கினதினாலே அவருடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமுள்ளவைகளானபடியால் அல்லேலூயா இரட்சணியமும் மகிமையுங் கனமும் வல்லமையும் அவருக்குண்டாயிருக்கின்றனவென்பதே.

௩ மறுபடியும் அல்லேலூயா அவளுடைய புகை என்றென்றைக்கும் எழும்புமென்றார்கள்.

௪ அல்லாமலும் இருபத்துநான்குமூப்பரும் நான்குசீவன்களும் (வணக்கமாய) விழுந்து ஆமென். அல்லேலூயா வென்றுசொல்லி ஆசனத்தின்மேல் உட்கார்ந்த பராபரனைத்தொழுதுகொண்டார்கள்.

௫ மேலும் நம்முடைய பராபரனுடைய ஊழியக்காரரே! அவருக்குப்பயப்படுகிற சிறியோரும் பெரியோருமானவர்களே! நீங்களெல்லாரும் அவரைத் துதியுங்களென்றொருசத்தம் ஆசனத்திலிருந்து புறப்பட்டது.

௬ அப்பொழுது திரளானசனங்களுடைய சத்தம்போலவும் பெருவெள்ள இரைச்சல்போலவும் பலத்த இடிமுழக்கம்போலவும் ஒருசத்தமுண்டாகக்கேட்டேன். என்னவென்றால் சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரன் இராசரிக்கம்பண்ணுகிறார். ஆகையால் அல்லேலூயா,

௭ ஆட்டுக்குட்டியினுடைய கலியாணம் வந்தது. அவருடைய மனைவி தன்னைத்தான் ஆயத்தம்பண்ணினாள். சுத்தமும் பிரகாசமுமான மெல்லியபுடவையைத் தரித்துக்கொள்ளும்படி அவளுக்கு அளிக்கப்பட்டது. ஆகையால் நாம் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்து அவருக்குத் துதியைச்செலுத்தக்கடவோமென்பதே.

௮ மெல்லியபுடவை பரிசுத்தவான்களுடைய நீதிகளே!

௯ பின்னும் அவன் என்னுடனே சொன்னது. ஆட்டுக்குட்டியின்கலியாணவிருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பாக்கியவான்களென்றெழுதென்றான். பின்னும் இவைகள் பராபரனுடைய சத்தியமான வார்த்தைகளாயிருக்கின்றனவென்று என்னுடனே சொன்னான்.

௰ அப்பொழுது அவனைத் தொழுதுகொள்ளும்படி அவனுடைய பாதங்களுமுன்பாகவிழுந்தேன். அவன் என்னுடனே சொன்னது. இப்படிச்செய்யாதபடிக்குப்பார். நான் உன்னோடும் இயேசுவின்சாட்சியையுடைய உன் சகோதரரோடுங்கூட ஊழியக்காரனாயிருக்கிறேன். பராபரனைத் தொழுதுகொள். இயேசுவின் சாட்சி தீர்க்கதரிசனத்தின் ஆவியாயிருக்கிறதேயென்றான்.

௰௧ பின்பு நான் வானந்திறந்திருக்கக்கண்டேன். உடனே இதோ, ஒருவெண்குதிரை தோன்றிற்று. அதின்மேலிருந்தவர் உண்மையுஞ் சத்தியமுமுள்ளவரென்னப்பட்டிரு

௬ முதலாவது உயிரோடெழுந்திருக்குதலுக்குப் பங்குள்ளவன் பாக்கியவானுமாய்ப் பரிசுத்தனுமாயிருக்கிறான். அவர்கள் மேல் இரண்டாம் மரணம் அதிகாரத்தை யுடையதல்ல. அவர்கள் பராபரனுக்குங் கிறிஸ்துவுக்கும் முன்பாக ஆசாரியராயிருந்து அவரோடே கூட ஆயிரம் வருஷம் இராசரிக்கம் பண்ணுவார்கள்.

௭ அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும் பொழுது சாத்தான் தன் காவலிலிருந்து விடுதலையாகி,

௮ பூமியின் நான்கு திசைகளிலுமுள்ள தேசத்தாராகிய கோகையும் மாகோகையும் வஞ்சிக்கும்படிக்காகவும் அவர்களை யுத்தத்திற்குக் கூட்டிக்கொள்ளும்படியாகவும் புறப்படுவான். அவர்களுடைய இலக்கங் கடற்கரை மணலவ்வளவாயிருக்கும்.

௯ அவர்கள் பூமியினுடைய விசாலத்தின் மேல் ஏறிவந்து, பரிசுத்தவான்களுடைய பாளயத்தையும் பிரியமான பட்டினத்தையும் வளைந்து கொண்டார்கள். அப்பொழுது பராபரனுலவானத்திலிருந்து அக்கினியிறங்கி அவர்களைப் பட்சித்துப் போட்டது.

௰ மேலும் அவர்களை வஞ்சித்த பசாசானவன் மிருகமுங் கள்ளத் தீர்க்கதரிசியுமிருக்கிற அக்கினி கந்தகமுமான கடலிலே தள்ளப்பட்டான். (அங்கே) அவர்கள் என்றென்றைக்கும் இரவும் பகலும் வாதிக்கப்படுவார்கள்.

௰௧ பின்பு நான் பெரிய வெள்ளை ஆசனத்தையும் அதின் மேலுக்கார்ந்தவரையுங் கண்டேன். அவருடைய சமுகப் பார்வையால் பூமியும் வானமும் விலகியோடிப் போயின. அவைகளுக்கிடங் காணப்படவில்லை.

௰௨ அன்றியும் மரித்தோராகிய சிறியோரையும் பெரியோரையும் ஆசனத்திற்கு முன்பாக நிற்கக் கண்டேன். அப்பொழுது புஸ்தகங்கள் விரிக்கப்பட்டன. சீவனுக்கேதுவான வேறொரு புஸ்தகமும் விரிக்கப்பட்டது. அப்பொழுது மரித்தோர்கள் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்கதாகப் புஸ்தகங்களிலெழுதப்பட்டவைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.

௰௩ சமுத்திரந் தன்னிலுள்ள மரித்தோரைத் தந்தது. மரணமும் மரித்தோர் ஸ்தலமுந் தங்களிலுள்ள மரித்தோரைத் தந்தன. யாவருந் தங்கள் தங்கள் கிரியைகளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.

௰௪ பின்பு மரணமும் மரித்தோர் ஸ்தலமும் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன. அதுவே இரண்டாம் மரணமாம்.

௰௫ சீவனுக்கேதுவான புஸ்தகத்திலே யெழுதப்பட்டவனாகக் காணப்படாதவன் அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டான்.

## ௨௧. அதிகாரம்.

[(௧) புதிய வானமும் புதிய பூமியுந் தோன்றினதும், (௯) ஒருத்தன் ஆட்டுக்குட்டியானவருடைய மனையாட்டியாகிய எருசலேமையே யோவானுக்குக் காட்டினதும்.]

அன்றியும் முந்தின வானமும் முந்தின பூமியும் ஒழிந்து போயிற்றே. சமுத்திரமுமில்லாமற் போயிற்றே. பின்பு நான் புதிய வானத்தையும் புதிய பூமியையுங் கண்டேன்.

௨ அல்லாமலும் புதிய எருசலேமாகிய பரிசுத்த பட்டினத்தைப் பராபரனுற் பரமண்டலத்திலிருந்து இறங்கக் கண்டேன். அது தன் புருஷனுக்காக அலங்கரிக்கப்பட்ட மனையாட்டியைப்போல எத்தனமாக்கப்பட்டிருந்தது.

௩ மேலும் பரமண்டலத்திலிருந்துண்டான ஒரு பெரிய சத்தத்தைக் கேட்டேன். அதென்னவென்றால், பாருங்கள். மனிதர்களிடத்திலே பராபரனுடைய கூடாரமிருக்கிறது அவர்களிடத்திலேயவர் வாசமாயிருப்பார். அவர்களும் அவருடைய சனங்களாயிருப்பார்கள். பராபரன்தாமே யவர்களோடே கூடவிருந்து அவர்களுக்குத் தேவனாயிருப்பார்.

௪ அவர்களுடைய கண்ணீர் யாவையும் பராபரன் துடைப்பார். முந்தினவைகள் போனபடியினாலே இனி மரணமுமில்லை துக்கமுமில்லை அலறுதலுமில்லை வருத்தமுமில்லையென்றதே.

௫ அன்றியும் ஆசனத்தின் மேலுக்கார்ந்தவர் சொன்னது பாருங்கள். நான் சகலத்தையும் புதிதாக்குகிறேனென்றார். பின்னும் அவர் என்னுடனே சொன்னது. இந்த வசனங்கள் சத்தியமும் உண்மையுமானவைகளானதினால் (அவைகளை) யெழுது என்றார்.

௬ பின்னும் அவர் என்னுடனே சொன்னதாவது. ஆயிற்று. நான் அல்பாவும் ஓமேகவுமாகிய ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். தாகமாயிருக்கிறவனுக்கு நான் சீவ ஊற்றில் (தண்ணீரை) க்கிரயமில்லாமற் கொடுப்பேன்.

௭ ஜெயங்கொள்ளுகிறவன் இவைகளைச் சுதந்தரித்துக்கொள்வான். நான் அவனுக்குத் தேவனாயிருப்பேன்.

௮ அவன் எனக்குக் குமாரனாயிருப்பான். பயப்படுகிறவர்களும் அவிசுவாசிகளும் அருவருக்கப்பட்டதக்கவர்களுங் கொலைபாதகருந் வேசிமார்க்கருஞ் சூனியக்காரரும் விக்கிரக ஆராதனைக்காரருஞ் சகலவிதமான பொய்யருமானவர்கள் இரண்டாம் மரணமாகிய அக்கினியுங் கந்தகமும் எரிகிற கடலிலே பங்கையடைவார்களென்றார்.

௯ பின்பு ஏழு கடைசி வாதைகளால் நிறைந்த ஏழு கலயங்களையுடைய அந்த

ஏழுதூதரிலொருவன் என்னிடத்தில் வந்து ஆட்டுக்குட்டியினுடைய பெண்ணாட்டியாகிய ஸ்திரீயை யுனக்குக் காண்பிக்கிறேன் வாவென்று என்னுடனே சொல்லி.

௰ பெரிதும் உயர்முமான ஒரு பர்வதத்தின்மேல் என்னை ஆவிக்குட்கொண்டுபோய் பராபரனுடைய பரமண்டலத்திலிருந்திறங்கினதும் பராபரனுடைய மகிமையையுடைத்திருக்கிறதுமான எருசலேமென்னும் பரிசுத்த பட்டணத்தையெனக்குக் காண்பித்தான்.

௰௧ அதின் ஒளி அருமையான இரத்தினக்கல்லைப்போலவும் பளிங்கொளியுள்ள இரவாக்கல்லைப்போலவுமிருந்தது.

௰௨ அது பெரிதும் உயர்முமான மதிலையும் பன்னிரண்டு வாசல்களையும் அந்த வாசல்களின்மேலே பன்னிரண்டு தூதரையுமுடையதாயிருந்தது. (அவைகளின்மேலே) இஸ்ரவேல் சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்திரங்களுடைய நாமங்கள் எழுதப்பட்டிருந்தன.

௰௩ கிழக்கே மூன்று வாசல்களும் வடக்கே மூன்று வாசல்களுந் தெற்கே மூன்று வாசல்களும் மேற்கே மூன்று வாசல்களு முண்டாயிருந்தன.

௰௪ அன்றியும் பட்டணத்தின் மதில் பன்னிரண்டு அஸ்திபாரங்களுமுடையதாயிருந்தது. அவைகளில் ஆட்டுக்குட்டியின் பன்னிரண்டு அப்போஸ்தலருடைய பன்னிரண்டு நாமங்களுமிருந்தன.

௰௫ அல்லாமலும் என்னுடனே பேசினவன் பட்டணத்தையும் அதின் வாசல்களையும் அதின் மதிலையும் அளக்கிறதற்குப் பொன் கோலைப் பிடித்திருந்தான்.

௰௬ மேலும் அந்தப் பட்டணஞ் சதுரமாயிருக்கின்றது. அதின் அகலம் எவ்வளவோ அவ்வளவாய் நீளமுமிருக்கிறது. அவன் அந்தக் கோலினாலே பட்டணத்தை யளந்தான். பன்னீராயிரம் ஸ்தாதியாயிருந்தது. அதின் நீளமும் அகலமும் உயரமுஞ் சமமாயிருக்கின்றன.

௰௭ தூதனுக்கிருந்த மனித அளவின்படியே யவன் அதின் மதிலையளந்த பொழுது நூற்றுநாற்பத்து நான்கு முழமிருந்தது.

௰௮ மேலும் அதின் மதில் இரவாக்கல்லாற் கட்டப்பட்டிருந்தது. பட்டணஞ் சுத்த பளிங்குக்கொப்பாகிய சுத்தப் பொன்னாயிருந்தது.

௰௯ அன்றியும் பட்டண மதில்களின் அஸ்திபாரங்கள் சகலவித இரத்தினங்களினாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. (அவையாவன.) முதலாம் அஸ்திபாரக்கல் இரவாக்கல். இரண்டாவது நீலக்கல். மூன்றாவது வயிரம். நாலாவது மரகதம்.

௨௰ ஐந்தாவது கோமேதகம். ஆறாவது சிவப்பு. ஏழாவது சுவர்ணக்கல். எட்டாவது படிகப்பச்சை. ஒன்பதாவது புட்பராகம். பத்தாவது வயிடூரியம். பதினோராவது பதுமராகம். பன்னிரண்டாவது சுகந்திக்கல் இவைகளே.

௨௧ மேலும் பன்னிரண்டு வாசல்களும் பன்னிரண்டு முத்துக்களாயிருந்தன. வாசல்களில் ஒவ்வொன்று ஒவ்வொரு முத்தாயிருந்தது. மேலும் பட்டணத்தின் வீதி தெளிவுள்ள கண்ணாடியைப்போலச் சுத்தப் பொன்னாயிருந்தது.

௨௨ தேவாலயத்தை நான் அதிலே காணவில்லை. சர்வவல்லமையுள்ள தேவனாகிய பராபரனும் ஆட்டுக்குட்டியுமே அதின் ஆலயம்.

௨௩ பட்டணத்தைப் பிரகாசிப்பிக்கும்படிக்குச் சூரியனுஞ் சந்திரனும் அதற்கு வேண்டுவதில்லை. பராபரனுடைய மகிமையே யதை வெளிச்சமாக்கிறது. ஆட்டுக்குட்டியே அதின் விளக்கு.

௨௪ உலகத்தார்கள் அதின் ஒளியிலே நடப்பார்கள். பூமியின் இராசாக்கள் தங்கள் மகிமையையுங் கனத்தையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள்.

௨௫ அங்கே இராக்காலமில்லாதபடியால் அதின் வாசல்கள் ஒருக்காலும் பூட்டப்படாதிருக்கும்.

௨௬ உலகத்தார்களுடைய மகிமையையுங் கனத்தையும் அதற்குள்ளே கொண்டு வருவார்கள்.

௨௭ அசுசிப்படுத்துகிறதும் அருவருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதிற் பிரவேசியாது. ஆட்டுக்குட்டியின் ஜீவபுஸ்தகத்தில் எழுதப்பட்டவர்கள் மாத்திரம் (அதிற்பிரவேசிப்பார்கள்.)

## ௨௨. அதிகாரம்.

[(௧) பின்னும் புதிய எருசலேமின் மகிமையைக் காட்டினதும், (௮) இயோவான் அதைக் காட்டின தூதனைத் தொழுதுகொண்டதினாலே மறுபடியுங் கடிந்துகொள்ளப்பட்டதும், (௰) பலபுத்திகளைச் சொன்னதும், (௰௨) கிறிஸ்துநாதர் தாம் சீக்கிரமாய் வருகிறேனென்று அறிவித்ததும் ஜீவவிருட்சத்தின் கனிகளையநுபவிப்பவர்கள் இன்னாரென்று காட்டினதும், (௰௮) இயோவான் இந்தத் தீர்க்கதரிசனத்தைக் குறித்துப் புத்திகளைச் சொன்னதும்.]

அன்றியும் பராபரனும் ஆட்டுக்குட்டியுமிருக்கிற ஆசனத்திலிருந்து புறப்பட்டுவந்து பளிங்கைப்போலத் தெளிவான ஜீவத்தண்ணீருள்ள நதியை யெனக்குக் காண்பித்தான்.

௨ பட்டணத்தின் நடுவீதியிலும் நதியின் இருகரையிலும் பன்னிரண்டுவிதமான

களைச்சுமந்து மாதந்தோறுந் தன் கனியைக் கொடுக்கிற ஜீவவிருட்சமிருந்தது. அந்த விருட்சத்தின் இலைகள் உலகத்தார்கள் ஆரோக்கியமடைகிறதற்கேதுவானவைகள். இனிமேற் சாபமில்லை.

௩ பராபரனும் ஆட்டுக்குட்டியுமிருக்கிற ஆசனமதிலிருக்கும்.

௪ அவருடைய ஊழியக்காரர் அவருக்கு ஆராதனைசெய்து, அவருடைய சமுகத்தைத் தரிசிப்பார்கள். அவருடைய நாமம் அவர்களுடைய நெற்றிகளிலிருக்கும்.

௫ அங்கே இரவில்லை. ஒருவிளக்குஞ் சூரியனுடைய ஒளியும் அவர்களுக்குவேண்டுவதில்லை. தேவனாகிய பராபரனே அவர்களுக்கு ஒளியைக் கொடுப்பார். அவர்கள் என்றென்றைக்கும் இராசரிக்கம் பண்ணுவார்கள்.

௬ பின்பு அவர் என்னுடனே சொன்னதாவது. இந்தவசனங்கள் உண்மையுஞ் சத்தியமுமானவைகள். சீக்கிரமாய்ச் சம்பவிக்கவேண்டியவைகளைத் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்பிப்பதற்குத் தீர்க்கதரிசிகளின் ஆவிகளுடைய தேவனாகிய பராபரன் தமது தூதனையனுப்பினார்.

௭ கேளுங்கள். சீக்கிரமாய் வருகிறேன். இந்தப்புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவார்த்தைகளைக் கைக்கொள்ளுகிறவன் பாக்கியவானென்றார்.

௮ இயோவானாகிய நானே இவைகளைக் கண்டுகேட்டேன். நான் கேட்டுக்கண்டபொழுது இவைகளையெனக்குக் காண்பித்த தூதனுடைய பாதங்களின் முன்பாகத் தொழுதுகொள்ள விழுந்தேன்.

௯ அவன் என்னை நோக்கி நீ இப்படிச் செய்யாதபடிக்குப்பார். உன்னோடும் உன் சகோதரராகிய தீர்க்கதரிசிகளோடும் இந்தப்புஸ்தகத்தின் வசனங்களைக் கைக்கொள்ளுகிறவர்களோடுங் கூட நானும் ஊழியக்காரனாயிருக்கிறேன். பராபரனைத்தொழுதுகொள்ளென்றான்.

௰ மேலும் அவர் என்னுடனே சொன்னதாவது. காலஞ்சமீபமானபடியினால் இந்தப்புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவார்த்தைகளை முத்திரைபோடாதிருப்பாயாக.

௰௧ அக்கிரமக்காரன் பின்னும் அக்கிரமஞ்செய்யட்டும். அழுக்காயிருக்கிறவன் பின்னும் அழுக்காயிருக்கட்டும். நீதியுள்ளவனும் பின்னும் நீதிசெய்யட்டும் பரிசுத்தமுள்ளவனும் பின்னும் பரிசுத்தமாகட்டும்.

௰௨ கேளுங்கள். சீக்கிரமாய் வருகிறேன் அவனவனுடைய கிரியைக்குத் தக்கதாய் அவனவனுக்குப்பதிலளிக்கும்படிக்கு என்பலன் என்னோடேகூடவருகிறது.

௰௩ நான் அல்பாவும் ஒமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமாய் முந்தினவரும் பிந்தினவருமாயிருக்கிறேன்.

௰௪ ஜீவவிருட்சத்தின்மேல் அதிகாரமுள்ளவர்களாகும்படிக்கும் வாசல்களாற்பட்டணத்திற்குட்பிரவேசிக்கும்படிக்கும் அவருடைய கற்பனைகளின்படிச்செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.

௰௫ நாய்களுஞ் சூனியக்காரரும் வேசிமார்க்கருங் கொலைபாதகரும் விக்கிரகாராதனைக்காரரும் பொய்யைவிரும்பி நடப்பிக்கிறயாவரும்புறம்பேயிருப்பார்கள்.

௰௬ சபைகளுக்காக இவைகளையுங்களுக்கு அறிவிக்கும்படிக்கு இயேசுவாகிய நான் என்னுடைய தூதனையனுப்பினேன். நான் தாவீதின்வேருமாய்ச் சந்ததியுமாய்ப்பிரகாசமுள்ள விடிவெள்ளிநட்சத்திரமுமாயிருக்கிறேனென்றார்.

௰௭ ஆவியும் மணவாட்டியும் வாவென்கிறார்கள். (இவைகளைக்) கேட்கிறவனும் வாவென்பானாக. தாகமாயிருக்கிறவன் வரக்கடவன். விருப்பமுள்ளவன் ஜீவத்தண்ணீரைக் கைமாறில்லாமல்வாங்கக்கடவன்.

௰௮ மேலும் இந்தப்புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வார்த்தைகளைக்கேட்கிற யாவருக்கும் நான் அறிவிக்கிறதாவது. ஒருவன் இவைகளோடே (எதையாகிலுங்) கூட்டினால் இந்தப்புஸ்தகத்தில் எழுதியிருக்கிற வாதைகளைப்பராபரன் அவன்மேலே கூட்டுவார்.

௰௯ ஒருவன் இந்தத் தீர்க்கதரிசனப் புஸ்தகத்தின் வார்த்தைகளில் (எதையாகிலும்) எடுத்துப்போட்டால் இந்தப்புஸ்தகத்தில் எழுதப்பட்டவைகளாகிய ஜீவவிருட்சத்திலும் பரிசுத்தப்பட்டணத்திலுமுள்ள பங்கைப்பராபரன் அவனிடத்திலிருந்து எடுத்துப்போடுவார்.

௨௰ இவைகளையறிவிக்கிறவர் மெய்யாய் நான் சீக்கிரமாய் வருகிறேனென்கிறார். ஆமென். கர்த்தராகிய இயேசுவே! வாரும்.

௨௰௧ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையுங்கள் அனைவரோடுங்கூடவிருப்பதாக.—ஆமென்.

முடிந்தது முற்றும்.